கூரவழிம்மயா ஸாகூரம் வூங்கம் ஶொதியாநம் வஷா ।
க. ஸூம். கசூ அயூர.)

வூகாராதாரம் —

ஷம்ஸஹூரம் வ வூரஷுஜம் ஜஜூரிஸ வூரஷுணரம்ஷநம் ॥
(க ஸூம். க அயூர.) (கூரஷூவணஹ)

36. அவற்றுள் கலிபுருஷனுடைய ஸ்வரூபம்.

**(ஸ்ரீ விஷ்ணு பாகவதத்தில்)**

அரசனுடைய வேஷத்தை தரித்தவனும், சூத்திர ஜாதியும், கோமிதுனத்தை (பசுமாடு, காளைமாடு இரண்டையும்) காலாலே உதைத்துக்கொண்டிருக்கின்ற (கலிபுருஷனைக் கண்டார்) (1 ஸ்கந்தம், 16வது அத்தியாயத்தில்)

மற்றொரு விதம்:—

தண்டத்தை கையில் வைத்துக்கொண்டிருப்பவனும், விருஷபத்தை அடையாளமுடையவனுமான சூத்திரனைப் பார்த்தார். (1 ஸ்க. 1 அத்தியாயம்) (கருப்பு நிறம்)

கஎ. அய வதாயபூஜாஹிதாநிதெவதா யூாநுஃ.
(வஜூவாணெ)

கூரதெ வஜகூஷெஹூூதாயாஜாணொ அவமெ தயா ।
வீதஃ கஜள வநஸூராஜா வாஸாதெவஃ வரஃ
வாஜாநு ॥ க ॥

ஸம்வம் ஸாஜூம் மஜாம் வகூம் ஜயாநா வாஸாஹிஃ
கூஜாகூ ।



ஷூவாஸீநாஸூாஸாஹஸூாஃ யாமாநாஜயிதெவதாஃ ॥

## 37. 4 யுகங்களின் அபிமானி தேவதைகளின் த்யானம்.

### (பத்ம புராணத்தில்)

பரமபுருஷனான வாஸுதேவனானவர் கிருத யுகத்தில் வெளுப்பு நிறமாகவும், திரேதாயுகத்தில் சிவப்பு நிறமாகவும், துவாபரயுகத்தில் மஞ்சள் நிறமாகவும், கலியுகத்தில் மேகத்தைப்போன்ற கருப்பு நிறமாகவுமிருப்பவராவார். இவர்கள் முறையே சங்கம், சார்ங்கம் (வில்), கதை, சக்ராம் இவைகளை கைகளில் தரிப்பவர்களும், ஸுகாஸநத்தில் இருப்பவர்களும், அழகான கைகளையுடையவர்களுமாவார்கள். இவர்கள் யுகங்களின் அதிதேவதைகளாவார்கள். (2, 4)

அத ப்ரபவாதிஷஷ்டிஸம்வத்ஸராணாம் ஸ்வரூபாணி —

(காரணாகமே மந்த்ரதந்த்ரே ஹோராயாம்)

௩௮. தத்ராதௌ ப்ரபவஸம்வத்ஸரஸ்வரூபம்.

அக்ஷஸூத்ரகரோ பூதிதாரீ த்விபாதக:
க்ருஷ்ணவர்ணக: ।
ரக்தாக்ஷ: ஸ்தூலதேஹஸ்ச ப்ரபவோ ப்ராஹ்மணோ
பவேத் ॥

(க்ருஷ்ணவர்ண:)

### பிரபவாதிகளான 60 வருஷங்களின் ஸ்வரூபங்கள்.

### (காரணாகமத்தில்-மந்த்ரதந்த்ரத்தில்-ஹோரையில்)

### 38. பிரபவ ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

பிராம்ஹண ஜாதியும், புருஷனுமான பிரபவ ஸம்வத்ஸரத்திற்கு அதிதேவதையானவர், ஜபமாலையும், விபூதியும் தரித்திருப்பவரும், 2 கால்களுடையவரும், கருப்புநிறமாக இருப்பவரும், சிவந்த கண்களையுடையவரும், பருத்த சரீரத்தையுடையவருமாவார். (கருப்பு நிறம்)

### ௩௯. 𑌅𑌥 𑌵𑌿𑌭𑌵𑌸𑌂𑌵𑌤𑍍𑌸𑌰𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑍍.

𑌰𑌕𑍍𑌤𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌕𑍃𑌤𑌾𑌂 𑌮𑌾𑌲𑌾𑌂 𑌦𑌧𑌾𑌨𑌂 𑌕𑌣𑍍𑌠𑌦𑍇𑌶𑌕𑍇 ।
𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌾𑌙𑍍𑌗𑌦𑌂 𑌰𑌥𑌾𑌰𑍂𑌢𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌦𑍍𑌵𑌿𑌭𑌵𑌵𑌤𑍍𑌸𑌰𑌮𑍍 ॥
(𑌮𑍇𑌘𑌵𑌰𑍍𑌣𑌃)

### 39. விபவ ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

சிவப்பு முத்துக்களாலான மாலையை கழுத்தில் தரிப்பவரும், சிறந்த தோள்வளையை தரிப்பவரும், ரதத்திலேறிக் கொண்டிருப்பவருமான இப்படிப்பட்ட விபவ ஸம்வத்ஸர தேவதையை த்யாநம் செய்யவேண்டும். (மேகநிறம்)

### ௪௰. 𑌅𑌥 𑌶𑍁𑌕𑍍𑌲𑌸𑌂𑌵𑌤𑍍𑌸𑌰𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑍍.

𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌙𑍍𑌗𑌰𑌾𑌗𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌶𑍍𑌵𑍇𑌤𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑍋𑌪𑌶𑍋𑌭𑌿𑌤𑌮𑍍 ।
𑌦𑌿𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌦𑍍𑌰𑍁𑌮𑌸𑍍𑌥𑌾𑌯𑍀 𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌚𑍍𑌛𑍁𑌕𑍍𑌲𑌾𑌖𑍍𑌯𑌵𑌤𑍍𑌸𑌰𑌮𑍍 ॥
(𑌶𑍍𑌵𑍇𑌤𑌵𑌰𑍍𑌣𑌃)

### 40. சுக்ல ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

திவ்வியமான அங்கராகத்தை (சந்தனம் முதலிய நறுமணமுள்ள பூசிக்கொள்ளக்கூடிய வஸ்துக்களை) பூசிக் கொண்டிருப்பவரும், வெளுப்பு ஆடையை அணிந்து சோபிப்பவருமான சுக்ல ஸம்வத்ஸர தேவதையை விபிகல்பதருமத்திற்குக் கீழே த்யாநம் செய்யவேண்டும். (வெளுப்பு நிறம்)

### ௪௧. 𑌅𑌥 𑌪𑍍𑌰𑌮𑍋𑌦𑍂𑌤𑌸𑌂𑌵𑌤𑍍𑌸𑌰𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑍍.

𑌵𑌜𑍍𑌰𑌾𑌵𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌯𑍁𑌦𑍍𑌧𑍃𑌤𑌹𑌸𑍍𑌤𑌶𑍍𑌰𑍀 𑌨𑌾𑌨𑌾𑌲𑌙𑍍𑌕𑌾𑌰𑌭𑍂𑌷𑌃
𑌶𑍍𑌯𑌾𑌮𑌰𑍂𑌪𑌯𑍁𑌤𑌶𑍍 ।
𑌪𑍍𑌰𑌮𑍋𑌦𑍂𑌤 𑌸 𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌃 𑌕𑌾𑌞𑍍𑌚𑌨𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ॥
(𑌶𑍍𑌯𑌾𑌮𑌵𑌰𑍍𑌣𑌃)

41. பிரமோதூத ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

பிரமோதூத ஸம்வத்ஸர அபிமான மூர்த்தியானது, 5 முகங்களும், அதிபயங்கரமான ஸ்வரூபமும், மிரளும் பார்வையுடைய கண்களும், நீலநிறமான சரீரமும், மனைவியினாலே கட்டித்தழுவப்பட்டிருக்கின்ற சரீரமுமுடையவராவார். (நீலநிறம்)

௪௨. அத ப்ரஜாபதிஸம்வத்ஸரஸ்வரூபம்.

ஜ்வலத்காலாநலப்ரக்ய: வரதாபயபாணிகோ ।
லம்போதரோ லோஹிதாக்ஷ: வத்ஸரஸ்ஸ ப்ரஜாபதி: ॥

(ரக்தவர்ண:)

42. பிரஜாபதி ஸம்வத்ஸர த்யாநம்.

பிரஜாபதி ஸம்வத்ஸர தேவனானவர், கொழுந்துவிட்டு எறிந்துகொண்டிருக்கின்ற பிரளயகாலத்திய தீயைப் போன்ற சரீரகாந்தியும், வரதம், அபயங்களை தரித்த கைகளும், பருத்த வயிறும், சிவந்த கண்களுமுடையவராவார். (சிவப்பு நிறம்)

௪௩. அத அங்கிரஸஸம்வத்ஸரஸ்வரூபம்,

பாலே நயநயோர்மத்யே சக்ராகாரம் ஸிதப்ரபம் ।
பத்மஹஸ்தத்வயம் தேவம் த்யாயேதங்கிரஸாஹ்வயம் ॥

(ஶ்வேதவர்ண:)

43. ஆங்கிரஸ ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

ஆங்கிரஸ ஸம்வத்ஸர தேவதையை நெற்றியிலும், கண்களுக்கு நடுவிலும் சக்கரத்தைப்போல் வட்டமான உருவத்தை (மச்சத்தை) யுடையவரும், வெண்மையான சரீரகாந்தியையுடையவரும், இருகைகளிலும் தாமரை மலர்களை வஹிப்பவருமாக த்யாநம் செய்யவேண்டும்.

### ௪௪. அத ஸ்ரீமுகஸம்வத்ஸரஸ்வரூபம்.

அநேகரத்நஸஞ்சந்ந: க்ஷ்வேடபீநகளோ வர: |
பத்மாக்ஷோ ஹரித்ராபோ த்யாயேச் ஸ்ரீமுகவத்ஸரம் ||
(கநகவர்ண:)

### 44. ஸ்ரீமுக ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

அநேகவிதமான ரத்தினங்களாலே மறைக்கப்பட்டிருக்கின்ற சரீரத்தையுடையவரும், ஸிம்ஹநாதம் செய்வதனாலே பருத்த கழுத்தையுடையவரும், சிறந்தவரும், தாமரைமலர் போன்ற கண்களையுடையவரும், மஞ்சள் நிறமான சரீர காந்தியையுடையவருமான ஸ்ரீமுக ஸம்வத்ஸர தேவதையை த்யாநம் செய்யவேண்டும். (தங்க நிறம்)

### ௪௫. அத பாவஸம்வத்ஸரஸ்வரூபம்.

ஜடபாவயுதச்சைவ கரத்ருதம்ருகஸ்ததா |
ஊர்த்வபாஹுயுதச்சைவ த்விபுஜ: க்ஷத்ரிய:
ஸ்ம்ருத: ||
(ரக்தவர்ண:)

### 45. பாவ ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

பாவ ஸம்வத்ஸரதேவன், ஜடபாவத்துடன் கூடியவனும், (அறிவற்ற ஜடவஸ்துவைப்போலிருப்பவரும்) கையில் மானை வைத்துக்கொண்டிருப்பவரும், உயரத் தூக்கப்பட்ட கைகளையுடையவரும், 2 கைகளுடையவரும், க்ஷத்திரிய ஜாதியுமாவார் என்று கூறப்பட்டிருக்கின்றது. (சிவப்பு நிறம்)

### ௪௬. அத யுவஸம்வத்ஸரஸ்வரூபம்.

மார்த்தண்டதேஜஸாகாரஸ் கடாக்ஷஹஸிதோத்யம: |

ஹிரஜாம் ஶ்வேதவர்ணாம் ச பத்மாக்ஷம் பாவவத்ஸரம் ॥

(ஶ்வேதவர்ண:)

## 46 யுவ ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

யுவ ஸம்வத்ஸர தேவதையை, கருடனுடையதுபோல் கல்பிக்கப்பட்ட கடைக்கண்ணும், மலர்ந்த நீலோத்பலமும் உடையவரும், 2 கைகளுடையவரும், வெளுப்பு நிறமாக இருப்பவரும், தாமரை மலர் போன்ற கண்களையுடையவருமாக (கல்பிக்க வேண்டும்) (வெளுப்பு நிறம்)

சஎ. அத தாத்ரு ஸம்வத்ஸர ஸ்வரூபம்,

பத்மஹஸ்தம் தேவம் கைலாஸாசல ஸந்நிபம் ।

த்ரிணேத்ரம் பத்மவர்ணம் ச நிர்பயம் தாத்ரு ஸம்ஜ்ஞகம் ॥

(பத்மவர்ண:)

## 47. தாது ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

கையில் தாமரை மலரை வைத்துக்கொண்டிருப்பவரும் கைலாஸமலையைப்போல் கம்பீரமாக இருப்பவரும், 3 கண்களையுடையவரும், தாமரை மலரைப்போன்ற சரீர காந்தியையுடையவரும், பயமற்றவருமான தாது ஸம்வத்ஸர தேவதையை (வணங்குகின்றேன்) (தாமரை மலரின் நிறம்.)

சஅ. அத ஈஶ்வர ஸம்வத்ஸர ஸ்வரூபம்,

உத்ருத்தாக்ஷ ஸஹஸ்ராக்ஷம் விபாஹும் ச ப்ருகுடீ
பீஷணம் ।

விசித்ராம்பரதரம் தேவம் த்யாயேதீஶ்வர ஸம்ஜ்ஞகம் ॥

(அருணவர்ண:)

## 48. ஈசுவர ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

ஓரே காலத்திலுதித்த ஆயிரம் சூரியனைப்போன்ற சோபையையுடையவரும், 2 கைகளுடையவரும், ஆகாசத்தை நோக்கிய முகத்தையுடையவரும், பல வர்ணங்களுடன் அழகாக இருக்கின்ற வஸ்திரத்தை தரித்திருப்பவருமான ஈசுவர ஸம்வத்ஸர தேவதையை த்யானம் செய்ய வேண்டும். (அருண வர்ணம்)

௪௯. അഥ ബഹുധാന്യസംവത്സരസ്വരൂപം.

അമൃതകലശഹസ്തഃ കാന്തിസംപൂർണദേഹഃ
സകലവിബുധവന്ദ്യോ വേദശാസ്ത്രൈകചിത്തഃ ।
വിതതരുചിരതേജാ ദീർഘവക്ഷാ ദ്വിപാദഃ
കമലനയനയുക്തഃ ചിന്തിതോ ബാഹുധാന്യഃ ॥

(നീലവർണഃ)

## 49. பஹுதாந்ய ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

12வது ஸம்வத்ஸரமான பஹுதாந்ய ஸம்வத்ஸரத்தின் அதிதேவதையானவர், அமிருதகலசத்தை கையில் வைத்துக் கொண்டிருப்பவரும், காந்தி நிறைந்த (மிகவும் சோபையுடன் கூடிய) தேஹத்தை உடையவரும், ஸகல தேவர்களாலேயும் வணங்கப்பட்டவரும், வேதங்களிலும் சாஸ்திரங்களிலும் எப்பொழுதும் ஈடுபட்ட மனதையுடையவரும், பரந்த அழகு நிறைந்த ஒளியையுடையவரும், விறிந்த மார்புடையவரும், 2 கால்களுடையவரும் தாமரை மலரைப் போன்ற கண்களையுடையவருமாவார் என்று கருதப்பட்டவராவார். (நீல நிறம்)

௫௰. അഥ പ്രമാഥിസംവത്സരസ്വരൂപം.

യഷ്ടിപൃഷ്ഠോ മണിവർണശ്ച ദീർഘവക്ഷസ്സമന്വിതഃ ।

க்ரைவேயகூரத்நமணிகை: ப்ரமாதீ வத்ஸர: ஸ்ம்ருத: ॥

(கூர்மவசனம்:)

50. பிரமாதி ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

பிரமாதி ஸம்வத்ஸர புருஷன், தார்மிகமான மனதுடையவரும், அகண்ட மார்பையுடையவரும், மாணிக்க ரத்தினங்களாலான கழுத்தணியை அணிந்திருப்பவருமாவார்.

௫௧. அத விக்ரமஸம்வத்ஸரஸ்வரூபம்.

ஶ்யாமநேத்ரஶ்ச ஶில்பஜ்ஞம் கோதூமாபம்
ஹிதோக்திகம் ।
மத்யோச்சம் தீர்க்கபாஹும் த்விபாதம் விக்ரமம் விது: ॥

(கௌதமவசனம்:)

51. விக்கிரம ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

பச்சை நிறமான கண்களையுடையவனும், சில்ப கலையையறிந்தவனும், கோதுமையின் நிறமாக இருப்பவனும், ஹிதமாகப்பேசுகின்றவனும், நடுத்தரமான உயரமுடையவனும், நீண்ட கைகளையுடையவனும், 2 கால்களையுடையவனுமான புருஷனை, விக்கிரம ஸம்வத்ஸர தேவமென்று அறிவார்கள். (கோதுமை நிறம்)

௫௨. அத விஷு(வ்ருஷ)ஸம்வத்ஸரஸ்வரூபம்.

விஷுஸம்வத்ஸரோ நாம நீலாங்கோ ந்யாஸதத்பர: ।
சதுர்ஹஸ்த: ஸ்வதந்த்ரோ(அ)க்ஷிஸ்ராவ ஶ்வேத
ப்ரணயாத்ஸுக: ॥

(நீலவசனம்:)

### 52. விஷு (விருஷ ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

விஷு ஸம்வத்ஸரதேவன், நீலநிறமான சரீரகாந்தி யுடையவரும், ரியாஸங்களைச் செய்துகொண்டிருப்பவரும், பூனையின் கண்களைப்போன்ற கண்களுடையவரும், முகத்தில் வடுவுடையவரும், அசைந்துகொண்டிருப்பவரும் ஆவார். (நீலநிறம்)

௫௩, அத சித்ரபாநுஸம்வத்ஸரஸ்வரூபம்.

ஸ்யாமாங்க: குப்ஜக: ஸ்யாச்ச ஜடாபி:கேசஸம்யுத: |
தேவாலயே ஜபந் ஸ்தாநே நாநாலங்காரபூஷித: ||
(கவிப்ரவண:)

### 53. சித்திரபாநு ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

சித்திரபாநு ஸம்வத்ஸரதேவதையானவர், 2 கைகளும் கூனிய உடம்பும், சியாவவர்ணமும் (கருப்பு கலந்த மஞ்சள் நிறமும்) உடையவரும், குத்திட்டாக இருக்கின்ற கேசங்களையுடையவரும், தேவாலயத்தில் ஜபித்துக்கொண் டிருப்பவரும், உரிய இடத்தில் நாநாவிதமான பூஷணங்களை அணிந்திருப்பவருமாவார். (கபிலநிறம்)

௫௪. அத ஸ்வபாநுஸம்வத்ஸரஸ்வரூபம்,

கபில: க்ரூரசேஷ்டஸ்ச ரக்தாம்பரவிபூஷித: |
த்ருஷ்டாதே தோஷவத: ஸ்வபாநுர்விக்ரஹோ
விக்ரஹ: ||
(கவிப்ரவண:)

### 54. ஸ்வபாநு ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

ஸ்வபாநு ஸம்வத்ஸரதேவனானவர், கபிலநிறமுடைய வரும், பயங்கரமான செய்கையுடையவரும், கருப்பு

ஆடையை அணிந்திருப்பவரும், தாளத்திலே கலைப் படைந்தவரும், ஆட்டின் முகமுடையவரும், பெருமை யுடையவருமாவார். (கபில வர்ணம் — கருப்பு கலந்த மஞ்சள் நிறம்) (1)

ருரு. அத தாரணஸம்வத்ஸரஸ்வரூபம்.

ஸாந்தநோ தீவ்ய்ஷெஹஸ்து ந்ருத்யவாத்யகலாக்ருதீ ।
நீரஜாக்ஷோ வ்யாக்ரபாதஃ ஸ்யாத் கஜாஸ்யஃ

தாரணாயிவஃ ॥

(ரக்தவர்ணஃ)

55. தாரண ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

தாரண ஸம்வத்ஸர தேவனானவர், அழகாகவும் உயர மாகவுமிருக்கின்ற சரீரமும், நிருத்தியம் வாத்தியம் ஆகிய கலைகளில் ஸாமர்த்தியமுடையவரும், தாமரைமலர் போன்ற கண்களையுடையவரும், புலியின் கால்களைப் போன்ற கால்களையுடையவரும், யானையின் முகம்போன்ற முகமுடையவருமாவார். (சிவப்பு நிறம்)

ருசு. அத பார்திவஸம்வத்ஸரஸ்வரூபம்.

தபஸ்வீ தவளவர்ணஸ்து தீர்க்கக்ரீவோ வ்ருகோதரஃ ।
தஸ்கரோ தண்டயுக்தஸ்து ஸ்ருக்ஷ்ணோ பார்திவஃ ஸ்ம்ருதஃ ॥

(தவளவர்ணஃ)

56. பார்திவ ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

பார்திவ வருஷத்திற்கு அதிதேவதையாக இருப்பவர், தவம் செய்பவரும், வெளுப்பு நிறமானவரும், நீண்ட கழுத்துடையவரும், செந்நாயின் வயிறுபோன்ற வயிறுடையவரும், திருட்டுத்தனமுடையவரும், தடியை

வைத்துக்கொண்டிருப்பவரும், பருத்த உதடுடையவருமாவார்.

௫௭. அத² வ்யயஸம்வத்ஸரஸ்வரூபம்.

தீ³ர்கா⁴ஸ்ய: ஶ்யாவதேஜாஶ்ச ரக்தநேத்ரநகேஶவான் |
ப்ரவீண: ஸத்யவாக் சைவ வ்யயோ வ்யயகர:
[illegible] ||

(கபிலவர்ண:)

57. வியய ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

வியய வருஷாதி தேவதையான புருஷன், நீண்ட முகமுடையவரும், கருப்பு கலந்த மஞ்சள் நிறமான சரீரகாந்தியுடையவரும், சிவப்பான கண்களும், கேசங்களுமுடையவரும், ஸாமர்த்தியமுடையவரும், ஸத்தியம் பேசுகிறவரும், அதிகமாகச் சிலவு செய்பவருமாவார். (கபில வர்ணம்)

௫௮. அத² ஸர்வஜித்ஸம்வத்ஸரஸ்வரூபம்.

தீ³ர்க⁴நாஸாநந: ஶூர: ஸூக்ஷ்மோஷ்டோ²
கௌ³ரவர்ணக: |
ஸுஹஸ்த: கூபக²நக: ஸர்வஜித் ஸர்வஸாத⁴க: ||

(கௌ³ரவர்ண:)

58 ஸர்வஜித்து வருஷ தேவதா ஸ்வரூபம்.

ஸர்வஜித்து வருஷாதி தேவதையானவர், நீண்ட மூக்கும் நீண்ட முகமுமுடையவரும், பராக்கிரமமுடையவரும், மெல்லிய உதடுடையவரும், வெளுப்பு நிறமுடையவரும், அழகான கைகளுடையவரும், கிணறு தோண்டிக் கொண்டிருப்பவரும், ஸகல காரியங்களையும் ஸாதிக்கின்ற தன்மை வாய்ந்தவருமாவார். (வெளுப்பு நிறம்)

௫௯. அத ஸர்வதாரிஸம்வத்ஸரஸ்வரூபம்.

அபூரிக்ராமவாஸீ ச ஸ்வல்பநேத்ர: க்ருஷீவல: ।
ஸ்ரேஷ்டோஷ்டோ தீர்கதேஹஸ்ச ஸர்வதாரீ ச ஸர்வதா ॥
(ரக்தவர்ண:)

59. ஸர்வதாரி ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

ஸர்வதாரி ஸம்வத்ஸராதி தேவதையானவர், எப்பொழுதும், அபூரி என்ற கிராமத்தில் வஸிப்பவரும் அல்லது தங்கமே இல்லாத கிராமத்தில் வஸிப்பவரும், (பூரி—தங்கம்) சிறிய கண்களையுடையவரும், பயிர் செய்கின்றவரும், சிறந்த உதடுடையவரும், நீண்ட சரீரமுடையவருமாவார். (சிவப்பு நிறம்)

௬௦. அத விரோதிஸம்வத்ஸரஸ்வரூபம்.

தஸ்கரோ ஹிம்ஸகஸ்சைவ ஹ்யம்லாஹாரோ மந்தலோசந: ।
ஸுக்ரீவ: ஸ்தூலதேஹ: ஸ்தூலஜகநோ
விரோதிக: ॥
(ரக்தவர்ண:)

60 விரோதி ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

விரோதி ஸம்வத்ஸர தேவனானவர், திருட்டு ஸ்வபாவமுடையவரும், தொந்திரவு செய்பவரும், புளிப்புப் பண்டங்களை தின்பவரும், மங்கிய கண்களையுடையவரும், சிறந்த கழுத்துடையவரும், பருத்த தேஹத்தையுடையவரும், மருந்த இடுப்பையுடையவருமாவார். (சிவப்பு நிறம்

௬௧. அத விக்ருதிஸம்வத்ஸரஸ்வரூபம்.

ஸுந்தரோ தீர்கதேஹஸ்ச தவஸ்ரீ கௌரவர்ணக: ।

ஶாந்தோதரோ தீர்கக்ரீவ: ரக்தாக்ஷோ விக்ருதி:
வத்ஸர: ||
(ஶ்வேதவர்ண:)

61. விகிருதி ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

விகிருதி வருஷ தேவதையான புருஷன், அழகு வாய்ந்தவரும், நீண்ட தேஹமுடையவரும், தவம் செய்து கொண்டிருப்பவரும், வெளுப்பு நிறமுடையவரும், ஒட்டிய வயிறுடையவரும், நீண்ட கழுத்தையுடையவரும், சிவந்த கண்களையுடையவருமாவார். (வெளுப்பு நிறம்)

௬௨. அத கரஸம்வத்ஸரஸ்வரூபம்.

தேவாலயே நதீதீரே சதுர்புஜோ மஹாந் ஸ்தித: ஶுப: |
வரதாபயபாணிஶ்ச கதாபத்மதர: கர: ||
(ரக்தவர்ண:)

62. கர ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

கர வருஷாதி தேவனானவர், 4 கைகளுடையவரும், கைகளில் வரதம், அபயம், கதை, பத்மம் இவைகளை தரிப்பவரும், சிறப்புற்றவரும், நதிதீரத்தில் தேவாலயத்தில் இருப்பவரும், அல்லது தேவாலயத்திலாவது நதிதீரத்திலாவது இருப்பவருமாவார். (சிவப்பு நிறம்)

௬௩. அத நந்தநஸம்வத்ஸரஸ்வரூபம்.

ரக்தாக்ஷோ தீர்கபாஹுஶ்ச தீர்கக்ராணஸமந்வித: |
ஹஸ்தாஶ்வாக்ஷஸமாயுக்த: ஶாந்தோ நந்தந: வத்ஸர: ||
(ரக்தவர்ண:)

63. நந்தன ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

நந்தன வருஷாதி தேவதையான புருஷன், சிவந்த

கண்களையுடையவரும், நீண்ட கைகளையுடையவரும், நீண்ட மூக்குடன் கூடியவரும், பஸ்மம், (விபூதி) ருத்திராக்ஷம் இவைகளை தரித்திருப்பவரும், வரதஹஸ்தமுடையவரும் ஆவார். (சிவப்பு நிறம்)

கூச. அத விஜயஸம்வத்ஸரஸ்வரூபம்.

த்விபாஹு: பத்மஸங்காஶ: ஸர்வதோவ்யாபத: ஸதா ।
ஸர்ஜத(ந)ஸமூலோத்பன்ன: விஜயோஜநார்த்தன உச்யதே ॥

(பத்மவர்ண:)

64. விஜய ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

விஜய ஸம்வத்ஸர புருஷன், 2 கைகளுடையவரும், தாமரைமலர் போன்ற சரீரகாந்தியையுடையவரும், இடது பக்கத்தில் எங்கும் பார்வையுடையவரும் (குள்ளமாக இருப்பவரும், எங்கும் பார்வையுள்ளவரும்) மருத மரத்தினடியில் வஸிப்பவருமாவார். (பத்ம வர்ணம்)

கூரு. அத ஜயஸம்வத்ஸரஸ்வரூபம்.

த்விபாஹு: ஸ்தூலகடிஶ்சைவ ரக்தநேத்ரோவரதாபயாந்வித: ।
வரதாபயபாணிஸ்து ஹரித: ஶ்வேதவர்ணகோ ஜய: ॥

(பச்சைவர்ண:)

65. ஜய ஸம்வத்ஸர ஸ்வரூபம்

ஜய ஸம்வத்ஸர தேவன், 2 கைகளுடையவரும், பருத்த இடுப்பையுடையவரும், சிவப்பான கண்களையுடையவரும், வரதம் அபயங்களை கைகளில் தரிப்பவரும், பச்சை நிறத்துடன் கூடிய வெளுப்பு நிறமுடையவருமாவார்.

௬௬. அத மந்மதஸம்வத்ஸரஸ்வரூபம்.

பத்மாக்ஷோ ப்ருதுபாஹுஶ்ச ஶரசாபயுதஃ ஸதா ।
படபாபஞ்சகாரூடஏவ மந்மதோ மந்மதாக்ருதிஃ ॥
(காஶ்யபவசநாத்)

66. மன்மத ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

மன்மத வருஷாதி தேவதையான புருஷன், தாமரை மலர் போன்ற கண்களையுடையவரும், திரண்ட கைகளையுடையவரும், கைகளில் அம்பையும் வில்லையும் வைத்துக் கொண்டிருப்பவரும், 5 பெண் குதிரைகளின் மீது வீற்றிருப்பவரும், மன்மதனைப் போன்ற சரீரமுடையவருமாவார். (தங்க நிறம்)

௬௭. அத துர்முகிஸம்வத்ஸரஸ்வரூபம்.

தம்ஷ்ட்ராகராலவதநஃ உதிதேந்துஸமத்யுதிஃ ।
த்விபாஹுஃ ஶார்ங்கபாணிஶ்ச துர்முகீ
துர்முகோ(அ)லஸஃ ॥
(ஶ்ருதவசநாத்)

67. துர்முகி ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

துர்முகி ஸம்வத்ஸர தேவனானவர், தெத்திப் பற்களினாலே பயங்கரமான முகத்தையுடையவரும், உதிக்கின்ற சந்திரனைப்போன்ற காந்தியையுடையவரும், 2 கைகளுடையவரும், வில்லை கையில் வைத்துக்கொண்டிருப்பவரும், விகாரமான முகமுடையவரும், சோம்பேரியாக இருப்பவருமாவார். (வெளுப்பு நிறம்)

௬௮. அத ஹேமலம்பி(ப)லி(ல)ம்பிஸம்வத்ஸரஸ்வரூபம்.

ஹேமலம்பீ விலம்பீ ச ரக்தாக்ஷௌ

க்ரோதவிஹ்வலௌ ।

ரக்தவர்ணௌ ச தௌ நித்யௌ மாதாஸமீபகௌ ॥

(ரக்தவர்ணௌ)

68. ஹேவிலம்பி–விலம்பி ஸம்வத்ஸர ஸ்வரூபங்கள்.

ஹேவிலம்பி-விலம்பி இவ்விரண்டு ஸம்வத்ஸரங்களின் அதிதேவர்கள், சிவந்த கண்களையுடையவர்களும், கொடுமையினாலே சோர்வடைந்தவர்களும், சிவப்பு நிறமானவர்களும், புத்திமான்களுமான அவ்விருவர்களும் எப்பொழுதும் தாயின் ஸமீபத்திலிருப்பவர்களாவார்கள். (சிவப்பு நிறம்)

௬௯. அத விகாரிசார்வரிஸம்வத்ஸரஸ்வரூபே.

விகாரீ சார்வரீ சைவ ஹலமுஸலதாரிணௌ ।

பிசாசவக்த்ரௌ ச நித்யௌ வடவ்ருக்ஷ

நிவாஸினௌ ॥

(ரக்தவர்ணௌ)

69. விகாரி–சார்வரி ஸம்வத்ஸர ஸ்வரூபங்கள்.

விகாரி-சார்வரி இவ்விரண்டு ஸம்வத்ஸரங்களின் அதிதேவதைகள், புருவங்களினிடையில் துகிச்சையுடையவர்களும், முஸலத்தை (உலக்கையை) ஆயுதமாக வைத்துக் கொண்டிருப்பவர்களும், மலையைப் போன்றவர்களும், சிப்கபா (இருள் வீடு) விருக்ஷத்தினடியில் உட்கார்ந்து கொண்டிருப்பவர்களுமாவார்கள். (சிவப்பு நிறம்)

எ0, அத ப்லவசுபக்ருத்ஸம்வத்ஸரஸ்வரூபே.

நீலகாயௌ ப்லவ சுபக்ருதௌ பீதாம்பரதரௌ ।

தாரம் குருவ்யாத்யாத்யா முக்ய: ப்லவவத்ஸர: ||

(ரத்னமாலா:)

70. பிலவ ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

ப்லவ (பிலவ) ஸம்வத்ஸர தேவனானவர், ஓடங்களுடன் கூடிய ஸமுத்திரதீரத்திலிருப்பவரும், எப்பொழுதும் துவீபாந்தரங்களுக்குச் செல்லுகின்றவரும், குதிரைகளைக் காப்பாற்றி வருகின்றவரும், அல்லது குதிரைகளினாலே காப்பாற்றப்பட்டு வருகின்றவருமாவார். (சிவப்பு நிறம்)

எக. அத ஶோபக்ருத் ஶோபக்ருத் ஸம்வத்ஸர ஸ்வரூபமாஹ.

ஶோபக்ருத் ஶோபக்ருத்தேவௌ வநே வாஸ ஸ்திதாவுபௌ |

தாரிணௌ பௌத்தவேஷாக்ஷ ருத்ராக்ஷௌ சந்தனஸ்திதௌ (ஸம்ஸ்திதௌ) ||

(ரத்நமாலா)

71. சுபகிருத்து—சோபகிருத்து ஸம்வத்ஸர ஸ்வரூபங்கள்.

சுபகிருத்து—சோபகிருத்து இவ்விரண்டு ஸம்வத்ஸரங்களின் அதிதேவதைகள், காட்டில் வஸிப்பவர்களும், புத்தர்களின் வேஷம் பூண்டவர்களும், விபூதி ருத்திராக்ஷங்களை தரிப்பவர்களும், சந்தன மரங்களைப்போல இருப்பவர்களும் (சந்தண மரத்தினடியில் வீற்றிருப்பவர்களும்) ஆவார்கள். (சிவப்பு நிறம்)

33 எஉ. அத க்ரோதி ஸம்வத்ஸர ஸ்வரூபமாஹ.

ஸ்வர்ணதோ வ்யாக்ரஸம்ஸ்தித: ஹயக்ரீவ: க்ஷாமயாதித: |

𑌶𑌿𑌵𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑍌 𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍 𑌕𑍍𑌰𑍋𑌧𑌸𑍍𑌥𑍋

𑌹𑍃𑌦𑍍𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰𑌕𑌃 𑌸𑌿𑌤𑌃 ॥

(𑌶𑍍𑌵𑍇𑌤𑌵𑌰𑍍𑌣𑌃)

72. குரோதி ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

குரோதி வருஷ தேவனானவர், எங்கும் புலிகளினாலே சூழப்பட்டவரும், பயந்த ஸ்வபாவமுடையவரும், பசியினாலே வருந்தியவரும், குள்ளமாக இருப்பவரும், வெளுப்பு நிறமாக இருப்பவரும், பரமேசுவரன், மஹாவிஷ்ணு இவ்விருவர்களையும் தியானம் செய்துகொண்டிருப்பவருமாவார். (வெளுப்பு நிறம்)

௭௩. 𑌅𑌥 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌵𑌸𑍁𑌸𑌂𑌵𑌤𑍍𑌸𑌰𑌰𑍂𑌪𑌂.

𑌅𑌰𑌣𑍍𑌯𑍇 𑌨𑌿𑌰𑍍𑌜𑌲𑍇 𑌹𑍍𑌰𑌦𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌵𑌸𑍁𑌃

𑌵𑌸𑍁𑌃 ।

𑌵𑌾𑌪𑍀𑌸𑍋𑌪𑌾𑌨𑌸𑌂𑌸𑍍𑌥𑍋 𑌧𑍍𑌯𑌾𑌯𑌤𑍇 𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑍋𑌮𑍁𑌖𑌂 ॥

(𑌰𑌕𑍍𑌤𑌵𑌰𑍍𑌣𑌃)

73. விசுவாவஸு ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

விசுவாவஸு ஸம்வத்ஸர தேவதையான புருஷன், காட்டில் நீரில்லாத நிலத்திலிருப்பவரும், குட்டையின் படிக்கட்டில் உட்கார்ந்துகொண்டு எங்கும் முகமுடைய விராட்புருஷனை த்யானம் செய்துகொண்டிருப்பவருமாவார். (சிவப்பு நிறம்) (1)

௭௪. 𑌅𑌥 𑌪𑌰𑌾𑌭𑌵 𑌸𑍍𑌵𑌂𑌸𑌂𑌵𑌤𑍍𑌸𑌰𑌰𑍂𑌪𑌂.

𑌪𑌰𑌾𑌭𑌵𑌃 𑌸𑍍𑌵𑌂𑌶𑌸𑍍𑌥 𑌶𑍍𑌵𑍇𑌤𑍋 𑌪𑌰𑍍𑌯𑌙𑍍𑌕𑌾𑌸𑌨𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 ।

𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍍𑌯𑍇𑌕𑌃 𑌸𑍍𑌵𑌤𑍍𑌯𑍇𑌕𑌃 𑌪𑍁𑌨𑌾𑌨𑌾𑌵𑌤𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌃 ॥

𑌶𑍍𑌵𑍇𑌤𑌵𑌰𑍍𑌣𑌃)

## 74. பராபவ-பிலவங்க ஸம்வத்ஸர ஸ்வரூபங்கள்

பராபவ-பிலவங்க இவ்விரண்டு வருஷங்களின் அதி தேவதைகளாக இருப்பவர்கள், வெளுப்பு நிறமுடையவர் களாவார்கள். இவ்விருவர்களுள் ஒருவர் தாமரை மலரின் எதிரில் நின்றுகொண்டிருப்பவராவார். மற்றொருவர் தாமரைமலரின்மீது உட்கார்ந்துகொண்டு மிதந்துகொண்டு இருப்பவராவார். இவ்விருவர்களும் யௌவனப்பருவ முடையவர்களும், இறுமாப்பு நிறைந்தவர்களுமாவார்கள். (வெளுப்பு நிறம்;

எரு. அத² கீலகஸௌம்யஸம்வத்ஸரஸ்வரூபே.

யுவா ஸிதஸி ஹாம்ஸ வ யேவா தனா நீல

ரொஷிதா |

கீலகே ரெவ ஸௌம்யஸ்து தபஸ்யந்தா கிரௌஸ்தித: ||

(நீலரக்தவர்ணௌ)

## 75. கீலக-ஸௌமிய ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

கீலக-ஸௌமிய வருஷங்களின் தேவதைகள், நீலங் கலந்த சிவப்பு நிறமான திருமேனியையுடையவர்களும், சிரத்தில் பாண்டத்தை (பானை சட்டியை) தரிப்பவர்களும், மலையின் ஸமதலத்தில் (உட்கார்ந்துகொண்டு) தவம் செய்பவர்களுமாவார்கள். (நீலச்சிவப்பு நிறம்) (1)

எசு. அத² ஸாதா⁴ரணஸம்வத்ஸரஸ்வரூபம்.

ஸாதா⁴ரண: ஸாஸ்த்ராஸ்த்ரோ விஷ்ணவஸம்வ்ருத: |

பாஸாஸ்த்ர பி⁴க்ஷாபாத்ரஞ்ச ப³ஸ்தி த்³விஜ: ||

(கனகவர்ண:)

## 76. ஸாதாரண ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

ஸாதாரண ஸம்வத்ஸர தேவதையானவர், அந்தணுவார், ஸரஸ்வதீ நதிதீரத்தில், பிராம்ஹணர்களின் கூட்டங்களினுலே சூழப்பட்டவரும், எதிரில் பரமேசுவரனை (வைத்துக்கொண்டு) பூஜை செய்துகொண்டு வஸிப்பவருமாவார். (தங்க நிறம்) (1)

எஎ. ஃமய விரொயிகூஜஸஸாவத்ஸரஸ்வரூவடி.

விரொயிகூஜஸ் கூ ஒரகஉ—ா யநூவ—ா ணயதொ
உநிஶம் ।
ரக்தாக்ஷஃ ஸூஒஜெஹஸ்த உஜமாது ஹிம்ஸவஶ்ஜாதூயடி ॥
(நீலவணஃ)

## 77. விரோதிகிருத் ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

விரோதிகிருத் ஸம்வத்ஸர தேவனுனவர், கொடுமையான காரியங்களைச் செய்கின்றவரும், எப்பொழுதும் வில்லையும் அம்பையும் தரித்துக்கொண்டிருப்பவரும், சிவந்த கண்களையுடையவரும், பருத்த உடம்பையுடையவரும், மிருகங்களை ஹிம்ஸித்துக்கொண்டு திரிந்துகொண்டிருப்பவருமாவார். (நீல நிறம்) (1)

எஅ. வரியாவிஸாவத்ஸரஸ்வரூவடி.

உஜமவஉ—ஶிரஸ்த்ராணஃ யநீ கூடிு ஓஜகஶஃ ।
உவாஜஹஸ்தம் உஜமாது நிஷாது வரியாவீ வஜெநவாஃ ॥
(ஶ்வேதவணஃ)

## 78. பரிதாபி ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

பரிதாபி ஸமவத்ஸரதேவன், மான் தோலை சிரத்தைக் கார்க்குமமுண்டாசாக அணிந்துகொண்டிருப்பவரும்,

கையில் வில்லை வைத்துக்கொண்டிருப்பவரும், கோணலான பார்வையையுடையவரும், பிறர் அறியாமல் கெடுதியை விளைவிப்பவரும், பாதரக்ஷைகளிலே மிருகங்களைக் கொள்ளுகின்றவரும், கானகத்தில் அலைந்துகொண்டு இருப்பவருமாவார். (வெளுப்பு நிறம்)

எகூ. அத ப்ரமாதீச(ப்ரமாதி)ஸம்வத்ஸரஸ்வரூபம்.

ஊர்த்வபுண்ட்ரதரோ நக்நோ ஹஸ்தாவுத்க்ஷிப்ய பக்ஷக: |
த்யாயந் ரவிம் கரேயோ நீல: ப்ரமாதீசோ(மீச)

த்விஜ: ஸ்ம்ருத: ||
(நீலவர்ண:)

79. பிரமாதீச ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

பிரமாதீச வத்ஸரதேவன், பிராம்ஹணனாவார். இவர் மெலிந்தும் நீல நிறமாகவுமிருக்கின்ற சரீரமுடையவரும், திருநீறு பூசிக்கொண்டிருப்பவரும், காட்டில், நதிதீரத்தில், உயரக்கைகளைத் தூக்கிக்கொண்டு, சூரியனை த்யானம் செய்துகொண்டிருப்பவருமாவார். என்று கூறப்பட்டிருக்கிறது. (நீல நிறம்)

அம. அத ஆநந்தஸம்வத்ஸரஸ்வரூபம்.

க்ருதோர்த்வபுண்ட்ரோ நிஸ்ரு த: நிவஸந்

விஜநே வநே |
ஆநந்தோ ரோஹிதோ த்யாயந் அக்ஷமாலாம்

ஸம்ஸ்தித: ||

(ரக்தவர்ண:)

80. ஆநந்த ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

ஆநந்த ஸம்வத்ஸர தேவனானவர், ஊர்த்வபுண்டிரம்

தரித்திருப்பவரும், ஜனங்களில்லாத காட்டில் மறைந்து வஸிப்பவரும், சிவப்பு நிறமாக இருப்பவரும், ஜபமாலைகளை அணிந்துகொண்டிருப்பவரும், த்யானம் செய்துகொண்டு இருப்பவருமாவார். (சிவப்பு நிறம்) (1)

௮௧. அத ராக்ஷஸஸம்வத்ஸர ஸ்வரூபம்.

ஸ்கந்தே க்ருஹ்ணந்து ஸ்தூலதண்டம் த்ருஷத்ஹஸ்தோ வனேசர: ।
பதிகாந் பாதயந்நஸ்ச ராக்ஷஸ: ஸ்வாநவாஹித: ॥
(நீலவர்ண:)

81. ராக்ஷஸ ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

ராக்ஷஸ ஸம்வத்ஸர தேவனானவர், தோளில் பெரியதோர் தண்டத்தை தரித்துக்கொண்டிருப்பவரும், பாராங்கல்லை கையில் வைத்துக்கொண்டிருப்பவரும், காட்டில் திரிந்துகொண்டிருப்பவரும், வழிப்போக்கர்களை ஹிம்ஸிப்பவரும், ராக்ஷஸனாக இருப்பவரும், நாயின் மீது செல்லுகின்றவரும், கருப்பு நிறமானவருமாவார். (நீலநிறம்) (1)

௮௨. அத (அ)நலஸம்வத்ஸர ஸ்வரூபம்.

தபஸ்வீ ஜடிலோ ருக்ஷ: சீரக்ருஷ்ணாஜிநாம்பர: ।
ஜடாதரஸ்ச ஸ்மஸ்ருயுதஸ்ச க்ருஷ்ண: ஸாந்தி
விலக்ஷண: ॥
(க்ருஷ்ணவர்ண:)

82. (அ) நல ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

(அ)நல ஸம்வத்ஸர தேவனானவர், கருப்பு நிறமானவரும், மரவுரி (மரப்பட்டையினாலான ஆடை) மான்தோல் இவைகளையணிந்திருப்பவரும், சடைமுடி தரிப்பவரும், மீசை தாடிகளுடையவரும், சாந்தமான ஸ்வபாவமுடைய

வரும், விபூதியை அணிந்திருப்பவரும், ஜலத்தின் மத்தியி லிருந்து கொண்டு தவம் செய்பவருமாவார். (கருப்பு நிறம்)

அங. அத ஸிம்ஹவு காலயுக்திஸம்வத்ஸரஸ்வரூபெ.

ஸிஜறூ: காலயுக்தீஶ ரக்தாஸ்யோ ரக்தலோசந: ।
ஜபத: ஶ்வேதநீலாம்காவரணோ நிம்பஸந்நிதௌ ॥
(ஶ்வேதவர்ண:, நீலவர்ண:)

83. பிங்கல – காலயுக்தி ஸம்வத்ஸர ஸ்வரூபங்கள்.

பிங்கல-காலயுக்தி இவ்விரண்டு ஸம்வத்ஸரங்களின் அதிதேவதைகள், முறையே, வெண்மையாகவும், நீலமாக வும் இருக்கின்ற சரீரங்களையுடையவர்களும், சிவந்த முகங் களையுடையவர்களும், சிவப்பான கண்களையுடையவர் களும், வேப்பமரத்தின் ஸமீபத்தில் (அடியில்) ஜபம்செய்து கொண்டிருப்பவர்களுமாவார்கள். (வெளுப்பு நிறம், நீல நிறம்) (1)

அச. அத ஸித்தார்த்திஸம்வத்ஸரஸ்வரூபம்.

ஸமுத்ரதீரே ஸந்த்யாயாம் ஸ்நாத்வா ஸந்த்யா
ப்ரஹ்மசர்யவ: ।
திஷ்டந் த்யாயந் ஜபந் வர்ணீ ஶ்வேத: ஸித்தார்த்தி
வத்ஸர: ॥
(ஶ்வேதவர்ண:)

84. ஸித்தார்த்தி ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

ஸித்தார்த்தி ஸம்வத்ஸர தேவதையானவர், வெளுப்பு நிறமானவரும், பிரும்ஹசாரியாக இருப்பவரும், ஸமுத்திரக் கரையில், ஸந்தியாகாலத்தில் (ஸூரியன் அஸ்தமன மடையும் காலத்தில்) ஸ்நானம் செய்து மேற்கு முகமாக

நின்றுகொண்டு, ஸூரியனைத்யானம் செய்துகொண்டு, ஜபம் செய்துகொண்டிருப்பவருமாவார். (வெளுப்பு நிறம்) (1)

௮௫ அத ரௌத்ரிஸம்வத்ஸரஸ்வரூபம்.

ரௌத்ரிஸம்வத்ஸரோ ராஜா ஸிம்ஹாஸநகத: ஶுப: ।
ரக்தாக்ஷ: ஸ்தூலதேஹஶ்ச ஶாரோக்ஷக்ரீடநே ரத: ॥

(க்ருஷ்ணவர்ண:)

85. ரௌத்திரி ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

ரௌத்திரி ஸம்வத்ஸர தேவதையானவர், அரசனாக ஸிம்ஹாஸநத்தில் வீற்றிருப்பவரும், பிறரறியாமல் கேடு விளைவிப்பவரும், சிவந்த கண்களையுடையவரும், பருத்த சரீரத்தையுடையவரும், கருப்பு நிறமாக இருப்பவரும், சொக்கட்டானாடுவதில் ஆசையுடையவருமாவார். (கருப்பு நிறம்) (1)

௮௬ அத துர்மதிஸம்வத்ஸரஸ்வரூபம்.

துர்மதி: க்ஷத்ரிய: ஶூர: ஸ்தூலதேஹ: துரகவாஹந: ।
வஸ்த்ரவர்மயுதோ ரக்த: ஶத்ருவிச்சேதநோத்ஸுக: ॥

(ரக்தவர்ண:)

86. துர்மதி ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

துர்மதி வத்ஸர புருஷன், பராக்கிரமமுடைய க்ஷத்திரியனாவார். இவர், பருத்த சரீரமுடையவரும், குதிரை வாஹநத்தின் மீது வீற்றிருப்பவரும், கத்தி, கேடயம் இவைகளை தரித்துக்கொண்டிருப்பவரும், சிவப்பு நிறமான சரீரமுடையவரும், பகைவர்களை வெட்டி வீழ்த்துவதில் ஆசையுடையவருமாவார். (சிவப்பு நிறம்)

௮௭. அத² து³ந்து³பி⁴ஸம்வத்ஸரஸ்வரூபம்.

புஷ்கரத்³வீபவாஸாட்⁴யோ து³ந்து³பி⁴: வ்ருக்ஷஸம்ஶ்ரய: ।
த்⁴யாயந் வஸதி நிஶ்ஶங்கம் விஷ்ணும் விஶ்வரூபிணம் ॥
(நீலவர்ண:)

87. துந்துபி ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

துந்துபி ஸம்வத்ஸரதேவன், புஷ்கர த்வீபத்தை யடைந்து, ஆலமரத்தினடியில், ஸந்தேஹமில்லாமல் விசுவரூபியான மஹாவிஷ்ணுவை த்யாநம் செய்துகொண்டு வஸித்து வருகின்றவராவார். (நீல நிறம்) (1)

௮௮. அத² ருதி⁴ரோத்³கா³ரிஸம்வத்ஸரஸ்வரூபம்.

ருதி⁴ரோத்³கா³ரிநாமா ச புஷ்கரஸ்ய தடே வஸந் ।
அர்சயந் த்³ரோணபுஷ்பைஸ்து ருத்³ர-
மேகாத³ஶாத்மகம் ॥
(கநகவர்ண:)

88. ருதிரோத்காரி ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

ருதிரோத்காரி ஸம்வத்ஸர தேவதையானவர், தாபரைக்குளத்தின் கரையில்வஸித்துக்கொண்டு, தும்பைப் பூக்களினாலே, ஏகாதசருத்திர ஸ்வரூபியான பரமேசுவரனை பூஜித்துக்கொண்டிருப்பவராவார். (தங்கநிறம்) (1)

௮௯. அத² ரக்தாக்ஷிஸம்வத்ஸரஸ்வரூபம்.

[illegible] ।
ஸ்த்ரீபி⁴: க்ரீட³ந் ஸஹர்ஷிதாங்க³: ரக்தாக்ஷீ [illegible]
[illegible] ॥
(ஶ்வேதவர்ண:)

## 89. ரக்தாக்ஷி ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

யௌவந வயதுடையவரும், விபவத்துடன்கூடியவருமான ரக்தாக்ஷி ஸம்வத்ஸர தேவனானவர், ஸமுத்திரத்திற்கு ஸமீபத்தில் ஸுவர்ணமயமான மாளிகையில் மண்டபத்தை அடைந்து, ஆடை, ஆபரணங்களை அணிந்து கொண்டு, ஸ்திரீகளுடன் விளையாடிக்கொண்டிருப்பவராவார். (வெளுப்பு நிறம்) (1)

## ௯௦. அத² க்ரோத⁴நஸம்வத்ஸரஸ்வரூபம்.

க்ரோத⁴ந: க்ருஷ்ணாகார: ரக்தாக்ஷோ ரூக்ஷகேஶயுக் ।
ஸ்தூ²லி: க்ரூரோ விநோதா³க்ஷ: க்ரோத⁴நோ
விக்ருதாநந: ॥
(ரக்தவர்ண:)

## 90. குரோதந ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

குரோதந ஸம்வத்ஸர தேவனானவர், கோணலான சரீரமுடையவரும், சிவப்பு நிறமுடையவரும், கோபமுடையவரும், விகாரமான முகமுடையவரும், பல திசைகளிலும் சுற்றிக்கொண்டிருக்கின்ற பார்வையுடையவரும், மரத்தடியில் நாய்களுடன் விளையாடிக்கொண்டிருப்பவருமாவார். (சிவப்பு நிறம்)

## ௯௧. அத² க்ஷயஸம்வத்ஸரஸ்வரூபம்.

ஶால்மலீவநமத்⁴யஸ்த²: வஸந் ரூக்ஷஶிரா விஷ்டரே ।
க்ரூர: க்ருஷ்ணோ தீ³ர்க⁴நாஸாக்ஷயோ
தீ³ர்கா⁴க்ருதி: ஸ்வாஸ்து ॥
(க்ருஷ்ணவர்ண:)

## 91. அக்ஷய ஸம்வத்ஸர ஸ்வரூபம்.

அக்ஷய ஸம்வத்ஸர தேவதையான புருஷன், கொடூரமான ஸ்வபாவமுடையவரும், கருத்த திருமேனியையுடையவரும், நீண்டமயிர்களையுடையவரும், நீண்ட சரீரமுடையவரும், சால்மலித்தீவை அடைந்து, கருங்கல் ஆஸநத்தில் வஸிப்பவருமாவார். (கருப்பு நிறம்) (1)

அத இத்வத்ஸராதிநாமாநி.

(காலமாதவீயே)

இத்வத்ஸர: இடாவத்ஸர: ஸம்வத்ஸர: பரிவத்ஸர: அநுவத்ஸர: இதி ஸஞ்ஜ்ஞாஸ்து ப்ரபவாதிஷு ஷஷ்டி ஸம்வத்ஸரேஷு ஸூசித: பஞ்சாநாம் பஞ்சாநாம் ஸமேகை கஶ: க்ரமேண ஜ்ஞேயா: ॥ ரு ॥

## இத்வத்ஸராதி நாமாக்கள்.

(காலமாதவீயத்தில்)

இத்வத்ஸரம் 1, இடாவத்ஸரம் 2, ஸம்வத்ஸரம் 3, பரிவத்ஸரம் 4, அநுவத்ஸரம் 5, என்னும் இந்த 5 பெயர்களும், பிரபவ முதலான 60 வருஷங்களில், ஆதிமுதலாக முறையே, 5, 5, வருஷங்களுக்கு தனித்தனியே பெயர்களாம். (5)

கஉ. அத ப்ரபவாதிஷஷ்டி ஸம்வத்ஸரேஷு ஜாதபலாநி.

(ஜாதகாபரணே)

தத்ராதௌ ப்ரபவே —

ஸதாபுத்ரஸ்த்ரீஸம்பத்யுதோ ஸத:
வஸ்த்ராலங்கார தீவ ஸம்ப்ரீதி: ।

ஸவபெஹொமயாதீவஜீவிதொ
ஜாயதெ ஹுலவஸம்ஹவஃ வாஸாது ||

92. பிரபவ முதலான 60 வருஷங்களில்
ஜநித்தவர்களின் குணங்கள்.

(ஜாதகாபரணத்தில்)

அவற்றுள் முதலாவது பிரபவ வருஷத்தில்
பிறந்தவனுடைய குணம்.

பிரபவ வருஷத்தில் பிறந்த புருஷன், ஸகல பதார்த்தங்களையும் ஸம்பாதித்துவைப்பதில் ஆசையுடையவனும், புத்திரஸந்தானமுடையவனும், சிறந்த அறிவுடையவனும், ஸகல போகங்களுடன்கூடிய தீர்காயுஸ்ஸையுடையவனுமாவான்.

விஹவெ —

உத்வஹொத்ரா ஷிரயஃஸஜஸ்ஹு
வஸுாதிஸாஹீ வதரஃ கஸாஜ்ஞஃ |
ஸாஜா ஹவெஷாத்கமெ ஸாஸீஞஃ
விஅாநாஷெஹா விஹவாஜஙா ||

விபவ வருஷ குணம்.

விபவ வருஷத்தில் பிறந்த மனிதன், விளைந்து கிடைப்பதை புஜிப்பவனும், பார்ப்பதற்கு அழகாக இருப்பவனும், வலிமை முதலியவைகளுடன் விளங்குகின்றவனும், ஸாமர்த்தியமுடையவனும், கலைகளையறிந்தவனும், தனது குலத்தில் அரசனாக இருப்பவனும், நல்ல ஸ்வபாவமுடையவனும், கற்றறிந்தவனுமாவான். (1)

ஶுக்லெ —

ஸஷா ஸஷஹெஷுzதிதராஉஷாரொ
ஸக்வாதுஷாரொ விஹவெஷுஜெதஃ |

𑌸𑌦𑌾𑌢𑍍𑌯𑌶𑍍𑌰𑍀𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌨𑌯𑍋𑌪𑌪𑌨𑍍𑌨𑍋
𑌨𑌰𑍋𑌨𑍍𑌨𑌤𑌃 𑌵𑌾𑌗𑍍𑌮𑍀 𑌶𑍁𑌭𑌶𑍀𑌲𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 ॥

சுக்கில வருஷ குணம்.

சுக்கில வருஷத்தில் பிறந்த மனிதன், எப்பொழுதும் ஸந்தோஷமுடையவனும், மிகச் சிறந்த உதாரகுணமுடையவனும், நல்ல புதல்வர்களும் நல்ல மனைவியுமுடையவனும், நிறைந்த செல்வமுடையவனும், சிறந்த பாக்கியம், வித்தியை, வணக்கம் இவைகளுடன் கூடியவனுமாக இருப்பான். நிச்சயம். (1)

𑌪𑍍𑌰𑌮𑍋𑌦𑍂𑌤𑍇 (𑌪𑍍𑌰𑌮𑍋𑌦𑍇) —

𑌦𑌾𑌤𑌾 𑌸𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌯𑍁𑌤𑍋𑌽𑌤𑌿𑌦𑌕𑍍𑌷𑌃
𑌸𑌤𑍍𑌯𑍇𑌨 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌸𑌹𑌿𑌤𑍋 𑌗𑍁𑌣𑍀 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 ।
𑌦𑌕𑍍𑌷𑌶𑍍𑌚 𑌧𑍂𑌰𑍍𑌤𑌃 𑌪𑌰𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑍍𑌤𑌾
𑌪𑍍𑌰𑌮𑍋𑌦𑌜𑌨𑍍𑌮𑌾 𑌚 𑌨𑌰𑍋𑌽𑌭𑌿𑌮𑌾𑌨𑍀 ॥

பிரமோதூத (பிரமோத) வருஷ குணம்.

பிரமோதூத வருஷத்தில் பிறந்த மனிதன், தானம் செய்பவனும் (வேண்டியதையளிப்பவனும்) எப்பொழுதும் ஸந்தோஷமுடையவனும், சிறந்த அழகுடையவனும், எப்பொழுதும் உண்மையுடையவனும், குணங்களுடையவனும், ஸாமர்த்தியமுடையவனும், தூர்த்தனும், (தூர்த்தன் - திருடன், சூதாடுகிறவன், மாயாவீ, விடன்) பிறருடைய காரியத்தைச்செய்கின்றவனும், தானென்ற அபிமானமுடையவனுமாவான். (1)

𑌪𑍍𑌰𑌜𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑍌 —

𑌦𑌾𑌨𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌃 𑌸𑌤𑌤𑌂 𑌦𑌯𑌾𑌲𑍁𑌃
𑌕𑌾𑌮𑌾𑌨𑍁𑌰𑌕𑍍𑌤𑌃 𑌕𑍃𑌷𑌿 𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑌶𑍀𑌲𑌃 ।

தே³வத்³விஜாராத⁴நதத்பரோ விநீத:

உத்பத்³யதே ப்ரஜோத்பத்திஸம்ப⁴வ: ஸதா³ ॥

பிரஜோத்பத்தி வருஷ பலன்.

பிரஜோத்பத்தி வருஷத்தில் பிறந்த மனிதன், தானம் செய்வதில் அபிமானமுடையவனும், மிகுந்த தயாளகுண முடையவனும், குலத்தை (குலதருமத்தை) அநுஸரிப்ப வனும், சிறந்த ஒழுக்கமுடையவனும், தேவதைகளையும் பிராம்ஹணர்களையும் பூஜிப்பதில் விருப்பமுடையவனும், அடக்கமுடையவனுமாவான். (1)

ஆங்கீ³ரஸே —

காருண்யவாந் போ⁴க³யுதஸ்ததா² மாநீ

ப்ரியப்ரவக்தா ப³ஹுபுத்ரயுக்த: ।

ஸ(ஸா)மர்த்²யபு³த்³தி⁴: ஸுசிரஞ்ச ஜீவீ

நரோऽங்கி³ரோவத்ஸரஸம்ப⁴வ: ஸதா³ ॥

ஆங்கிரஸ ஸம்வத்ஸர பலன்.

ஆங்கீரஸ ஸம்வத்ஸரத்தில் பிறந்தவன், மநோஹரனுக வும், எப்பொழுதும் ஸௌக்கியமாக இருப்பவனும், போக பாக்கியங்களையுடையவனும், அபிமானமுடைய வனும், பிரியமாகப் பேசுகின்றவனும், அநேகம் புத்திரர்கள் உடையவனும், புத்தி ஸாமர்த்தியத்தை மறைத்து வைத்திருப்பவனும், நீண்ட காலம் ஜீவித்திருப்பவனு மாவான்.

ஸ்ரீமுகே² —

ஸ்ரீமாந் ப்ரதாபீ ப³ஹுதா⁴ந்யவேத்தா

ஸத்³ஹ்ருஜ்ஜனப்ரிய: ஶாந்திக்ருத் ப³ஹுப்ரியாது ।

ஸஸ்கீர்த்திர்யஶோஉதிதாராஶாஶ:
ஸவேஸ் நர: ஶ்ரீமுகவத்ஸரஸ்ய ॥

ஸ்ரீமுக ஸம்வத்ஸர பலன்

ஸ்ரீமுக ஸம்வத்ஸரத்தில் பிறந்த மனிதன், செல்வம் படைத்தவனும், புகழ்படைத்தவனும், அநேக சாஸ்திரங் அறிந்தவனும், நண்பர்களிடத்தில் அன்புடையவனும், அழகான புத்தியுடையவனும், சிறந்த வலிமையுடையவனும், நற்புகழ்பெற்றவனும், மிகவும் உதாரகுணமுடையவனுமாவான். (1)

பாவே —

ப்ரஶஸ்தவேதா: ஸதாம் யஶஸ்வீ
குணாந்விதோ தைர்யயுதோ விநீத: ।
ஸதா ஸஹர்ஷோ விஶதோ வதாந்யோ
பாவாபிதாநேஶ்வத்ஸரே ஸ்யாத் ॥

பாவ ஸம்வத்ஸர பலன்.

பாவ ஸம்வத்ஸரத்தில் பிறந்த மனிதன், புகழத்தக்க மனமுடையவனும், மிக மிகப் புகழ்பெற்றவனும், சிறந்த குணங்களுடையவனும், தைரியமுடையவனும், வணக்கமுடையவனும், எப்பொழுதும் ஸந்தோஷமுடையவனும், வெகு பேர்களுக்குப் பிடிககாதவனுமாவான். (1)

யுவே —

ப்ரஸந்நசித்த: குணவாந் விநீத:
ஶாஸ்த்ரார்த்தவிதோ நிதாந்தம் ।
ஸதீர்க்கதாயு: ஸுஜநைஸ்ஸமேதோ
ஜாதோ யுவாக்யே வரவத்ஸரேऽஸௌ ॥

## யுவ ஸம்வத்ஸர பலன்.

யுவ ஸம்வத்ஸரத்தில் பிறந்த மனிதன், தூயசரீர முடையவனும், சிறந்த குணங்களுடையவனும், வணக்க முடையவனும், மன அமைதியுடையவனும், அதிகமாக தானம் செய்வதில் விருப்பமுடையவனும், சிறந்த அறிவு படைத்தவனும், வெகுகாலம் ஜீவித்திருப்பவனும், அழகுமான சரீரமுடையவனும், ஸந்தோஷமுடையவனும் ஆவான்.

யாதளா —

ஸவைஙுரொகமணமளாஙவயக்ஷ:
ஸாநறொஉவஹுகிதரா: மாஙாஹக்ஷ: ।
ஸிஜூஷாஹ்ருகாஷஸுஷு ஸாமீஷு:
யாதா(தா)வக்ஷாஙவொ ஹி நர: ஸூாக: ॥

## தாது ஸம்வத்ஸர பலன்.

தாது ஸம்வத்ஸரத்தில் பிறந்த மனிதன், ஸகல ஜீவராசிகளினாலும் கொண்டாடப்படுகின்ற சிறந்த குணங்களும் கௌரவமுமுடையவனும், அழகாக இருப்பவனும், மிகவும் குருபக்தியுடையவனும், சில்ப சாஸ்திரங்களில் ஸாமர்த்தியமுடையவனும், நல்ல ஸ்வபாவமுடையவனு மாவான்.

ஶாஂஷுரெ —

தகஷாஜுஷாஜாதஉஹாவ்ருகொவ:
ஹஷிகாஙிஹீநெ மணவாறு ஷுதாவீ ।
உக்ஷ: கஜுாகளஙஜுஶீஜுஶாஜ்ரீ
உகெஙா ஹவெஷீஷுஙஜாதஜஙா ॥

ஈசுவர வத்ஸர பலன்.

ஈசுவர வத்ஸரத்தில் பிறந்த மனிதன், அது ஸமயத்தி லுண்டான மஹத்தான கோபமுடையவனும், ஸந்தோஷமற்றவனும், குணங்களுடையவனும், புகழ் உடையவனும், ஸாமர்த்தியமுடையவனும், கலைகளில் ஸாமர்த்தியம், நல்ல ஸ்வபாவம், இவைகளுடையவனுமாவான். (1)

஬ஹுதா⁴ந்யே —

வ்யாபாரத³க்ஷ: க்ஷிதிபாலமாநீ
தா³நாபி⁴மாநீ ப³ஹு(ப³ஹு)ஶாஸ்த்ரவேத்தா ।
ப³ஹுப்ரகாரை: ப³ஹுதா⁴ந்யவித்த:
ஸ்யாந்நரோ வை ப³ஹுதா⁴ந்யஜந்மா ॥

பஹுதானிய ஸம்வத்ஸர பலன்.

பஹுதானிய வருஷத்தில் பிறந்த மனிதன், வியாபாரங்களில் ஸாமர்த்தியமுடையவனும், அரசர்களாலே வெகு மதிக்கத்தக்கவனும், தானம் செய்வதில் அதிக அபிமானமுடையவனும், (பற்பல) சாஸ்திரங்களையறிந்தவனும், பலவிதங்களினாலே பலவித தானியங்களையும் தநத்தையும் ஸம்பாதிப்பவனுமாவான். (1)

ப்ரமாதி³நி —

ப்ரயத்நஶூந்ய: ஸததம் ப்ரமாதீ³
யத: ஸதா³ ஶாஸ்த்ரவிரோதி⁴சேஷ்டா ।
க்ரோதீ⁴ நரஸ்ஸ்யாந்நர: க்ருதக்⁴ந:
ப்ரமாதி³ஸம்வத்ஸரஸம்ப⁴வ: ஸ்யாத் ॥

34

பிரமாதி ஸம்வத்ஸர பலன்.

பிரமாதி ஸம்வத்ஸரத்தில் பிறந்த மனிதன், ரதம், துவஜம், குடை. குதிரை, முதலியவைகளுடன் கூடியவனும், சாஸ்திரங்களில் ஆசையுடையவனும், பகைவர்களை அழிப்பவனும் அரசனுக்கு மந்திரியாக இருப்பவனும், செய்நன்றி மறவாதவனுமாவான். (1)

விக்ரமே —

க்ரூரக்ருத்யாபிரதோ நிதாந்தம்
அராதிசக்ராக்ரமணேऽதிதக்ஷ: ।
ஶௌர்யஸ்த்வ தைர்யோதார்யதார்ஷ்யஸார:
பராக்ரமீ விக்ரமவர்ஷஜாத: ॥

விக்கிரம ஸம்வத்ஸர பலன்

விக்கிரம ஸம்வத்ஸரத்தில் பிறந்தவன், மிகக்கொடுமையான செயலில் அதிகமான ஆவலுள்ளவனும், அராதி சக்கிரத்தை ஆக்கிரமித்துக்கொள்ளுவதில் மிகுந்த ஸாமர்த்தியமுடையவனும், (அராதி—பகைவன், சக்கரம், தொகுதி, சேனை, ராஜ்யம். ஆக்கிரமணம் – தனது வசமாக்கிக்கொள்ளுதல்) சூரத்தனமுடையவனும், தீரத்தனமுடையவனும், மிகவும் உதாரகுணமுடையவனும், பகையை வெற்றிகொள்ளுகிறவனுமாவான். (1)

வ்ருஷே —

காயஸ்(ய) வ்ருதாவீ கில நித்யஶீல:
ஸத்யாந்வித: ஸாரஸுகஸ்த்தா ।
ஹஸ்த்யா பஹூநாம் ஸமிந்தோதயஸ்ஸ்வ
ஜாதோ வ்ருஷாப்தே ஸந்தேஜோதிகாஸ்வ: ॥

விருஷ ஸம்வத்ஸர பலன்.

விருஷ வருஷத்தில் பிறந்த மனிதன், (காரியங்களை செய்வதில்) புகழ்பெற்றவனும், நிந்திக்கத்தக்க ஸ்வபாவமுடையவனும், அயோக்கியர்களினுலே பின்பற்றப் பட்டவனும், பிறருடைய காரியங்களை செய்பவனும், பலபேர்களைக் காப்பாற்றுகின்றவனும், மந்தபுத்தியுடையவனும், சோம்பேரியும், அதிகப்பேராசையுடையவனுமாவான். (லுப்தன். பேராசையுடையவன், ஈயாதவன்)

விருஷாப்தே —

விருஷாப்தே ஸ்ம்பவஶ்சைவ ஸுநவயோ

ஸுநவயோஜ்வலயஶாஸ்திதஃ ஸதா ।

வாமஶீலஜநஸங்கமாந்விதஃ

விருஷாஜஜநிதோ ஹி மாநவஃ ॥

சித்திரபாநு ஸம்வத்ஸர பலன்.

சித்திரபாநு ஸம்வத்ஸரத்தில் ஜநித்த மனிதன், பலவர்ணங்களுடன் கூடிய ஆடை, புஷ்பங்களை தரிப்பதில் அதிக ஆவலுள்ளவனும், எப்பொழுதும் பலவிதமான மனோபாவங்களையுடையவனும், அழகிய ஸ்வபாவங்களுடன் விளங்குகின்ற கலைகளுடன் கூடியவனுமாவான்

ஶ்லோகம் —

சாருமுகோஜ்ஜ: ஸதய: ஸகாந்தி:

ஜிதாரிவர்கோ உதிதாநு விநீத: ।

வ்யஸநஶக்தி: ஸஜ்ஜநஶக்தி:

ஶ்லோகஸம்வத்ஸரஜோ நர: ஸ்யாத் ॥

ஸ்வபாநு ஸம்வத்ஸர பலன்.

ஸ்வபாநு ஸம்வத்ஸரத்தில் பிறந்தமனிதன், சுருட்டை மயிருடையவனும், ஸாலபமானவனும், நல்ல அழகுடைய வனும், பகைவர்களை வென்றவனும், சிறந்த அறிவுடைய வனும், வணக்கமுடையவனும், தூய்மையான சரீரமுடைய வனும், ஸமமான பிரசித்தியும் பெருமையுடையவனு மாவான். (1)

தாரணெ —

யஶுதஒஹ்ஸு ஶஶிரஃ வவஜுஃ கஜாஜகூஃ
ஸாநிஷ்ெதா ஶஹிஒ தகஉஒகதஒா ।
உத்துஹொக்ஷா ஜுஷிணெ நயகூஃ
ஸூாசு தாரணாஜொஜுவஶாநவொ யஃ ॥

தாரண ஸம்வத்ஸர பலன்.

தாரண வருஷத்தில் பிறந்த மனிதன், அயோக்கியத்தன முடையவனும், சௌரியமுடையவனும், சஞ்சலபுத்தி யுடையவனும், கலைகளையறிந்தவனும், அதிக உறுதியுடைய வனும், இகழத்தக்க காரியங்களைச் செய்கின்றவனும், உண்டானவற்றை (தன்னுடைய பூமியில் விளைந்தவைகளை) உண்பவனும், செல்வமுடையவனுமாவான். (1)

வாயிஒவெ —

ஶுயஉஒகஉஒாஷிரதொ நிதாஜும்
ஸாக்ஷாதுவாரஜுஉதாஉாவெதஃ ।
கஜாகஜாவெ காஶஜொ விஜுாவீ
யஃ வாயிஒவாஜெ காஜுவாயிஒவஃ ஸூாசு ॥

## பார்த்திவ வருஷ பலன்.

பார்த்திவ வருஷத்தில் பிறந்தவன், தன்னுடைய தர்மத்திற்கூறிய காரியங்களை மிகுதியாகச்செய்கின்றவனும், சிறந்த க்ஷத்திரியனுடைய தர்மத்தின் எல்லையை அறிந்தவன் தன்மையையுடையவனும், பற்பல கலைகளிலும் ஸாமர்த்தியமுடையவனும், சிறப்புடன் விளங்குகின்றவனும், அரசகுலத்தில் பிறந்தவனுமாவான். (1)

வ்யயே —

ஸௌக்யாதிரிக்தோ வ்யஸநாபிபூத:
பீதோ நகிஞ்சித் க்ருஹணாதிகர்ணஸ: ।
ஜாத: ப்ரஸந்நஸ்திரசித்தவ்ருத்தி:
வ்யயாபிதாநே வ்யயக்ருத்மநுஷ்ய: ॥

## வியய வருஷ பலன்.

வியய வருஷத்தில் பிறந்தவன், ஸௌக்கியமற்றவனும், துன்பங்களினாலே பீடிக்கப்பட்டவனும், பயந்த ஸ்வபாவமுடையவனும், கடன் வாங்குவதின்றி வேறொன்றுமறியாதவனும், நிலையற்ற மனமுடையவனும், (எப்பொழுதும்) செலவு செய்பவனுமாவான். (1)

ஸர்வஜிதி —

ராஜமௌரவமஹோத்ஸவ: ஸதா
மாநவ: ப்ரியதமாநந: மஹாசிந்தக: ।
வைரிவர்க்கவிஜயோத்யத: ஸதா
ஸர்வஜித்பரிதி ஸம்பவ: ப்ரஜாது ॥

## ஸர்வஜித்து வருஷ பலன்

ஸர்வஜித்து வருஷத்தில் பிறந்த மனிதன்,

அரசனுடைய கௌரவமும் மஹோத்ஸவமுமுடையவனும், மாசற்றவனும், பருத்த உடம்புடையவனும், அதிக சரீர காந்தியுடையவனும், எப்பொழுதும் பகைவர்களின் தொகுதிகளை வெற்றிகொள்ளுவதில் முயற்சியுடையவனுமாவான். (1)

ஸவஷயாஸிணீ —

ஸஃதிஹுது஬ஹுஹொமஸஂயுதஃ
ஸாநுஸ்ஹ உயாஸாஜஹாகூ ஸஷா ।
யீஸஅ(ஸ)ஜ்ஹணயஹொzதிஷாஸணஃ
ஸவஷயாஸிணீ ச யஸு ஸஂஹவஃ ॥

ஸர்வதாரி வருஷ பலன்

ஸர்வதாரி வருஷத்தில் பிறந்தவன், செல்வம், வேலையாட்கள், அதிகமான போகங்கள் இவைகளுடன் கூடியவனும், சிறந்த அழகுடையவனும், எப்பொழுதும், மதுரமான அந்நத்தை புஜிப்பவனும், (மதுரம்-தித்திப்பு, சுவையுள்ளது) தைரியமும், நற்குணங்களுமுடையவனும், மிகவும் கொடியவனுமாவான். (1)

விரோயிநி —

ஸக்ஷோ விஷெஶாடநதாஂ ஹவஜஃ
கூடுஂபஸளவுாவவயொzதியஃதஷஃ ।
ஜநெநந ஸாகஂ மதவித்தவுத்திஃ
விரோயிவஷஹஸவொ நரஃ ஸுாகு ॥

விரோதி வருஷ பலன்

விரோதி வருஷத்தில் பிறந்த மனிதன், ஆசையுடையவனும், அல்லது சிவப்பு நிறமுடையவனும், தேசாந்தரங்

களில் ஸஞ்சரிப்பவனும், குடும்ப ஸௌக்கியமற்றவனும், அதிகமாக அயோக்கியத்தனமுடையவனும், ஜனங்களோடு செல்லுகின்ற மனோபாவத்தையுடையவனுமாவான். (ஜனங்களின் மனோபாவத்தை அனுஸரித்து நடப்பவன், ஸ்வபுத்தியில்லாதவன் என்பது பொருள்)

விக்ருதள —

ப்ரியபூர்வ: கிரு காராருதாம் மத:
தீவ்ரவர்வஹார்மவர்வஸம்யுத: |
வாரஸ்வாஸிரஹிதோவஜிக்ருத:
ஜாதவோ விக்ருதிவர்ஷஸம்பவ: ||

விகிருதி வருஷ பலன்.

விகிருதி வருஷத்தில் பிறந்த மனிதன், செல்வமற்றவனும், பயங்கரத்தன்மையையடைந்தவனும், நீண்ட பர்வாக்களையும் (பர்வ-கணுக்கள்) அதிக கர்வத்தையுமுடையவனும், நல்ல புத்தி இல்லாதவனும், பகைமையுடையவனுமாவான்.

வரே —

காமாதுரோ மலிஸகாயகாந்தி:
கடோரதீர்க்கஸ்வரஹருவாக்ய: |
க்ஷ்மீ வ ஜ்ஞாவியிவஜித: ஸ்யாத்
நர: வராப்தஸம்ஹவோ2 திதீர்க்க: ||

கர வருஷ பலன்.

கர வருஷத்தில் பிறந்த மனிதன், காமாதுரனும், அழுக்கடைந்த சரீரகாந்தியையுடையவனும், கொடூரமாக நீண்ட ஒலியுடன்கூடிய ஸாரமற்ற வாக்கியங்களையுடைய

வனும், கஷ்டப்படுகின்றவனும், லஜ்ஜையற்றவனும், விதி (கட்டுப்பாடு) இல்லாதவனும், அதிக உயரமுடையவனுமாவான். (1)

நந்தநே —

தடாகவாபீக்ருஹகூபகர்தா
ஸதாந்நதாநாபிரதஃ ஸுசீஃ ஸ்யாத் ।
விலாஸிநீநந்தநஜாதஹர்ஷஃ
நரோ ஹி வர்ஷே நந்தநவர்ஷஜந்மா ॥

நந்தன வருஷ பலன்.

நந்தன வருஷத்தில் பிறந்த மனிதன், குளங்கள், குட்டைகள் வீடுகள், கிணறுகள் இவைகளை நிர்மாணம் செய்கின்றவனும், எப்பொழுதும் அன்னதானம் செய்வதில் ஆசையுடையவனும், மாசற்றவனும், மனைவியாலும் மகனாலும் ஸந்தோஷமடைகின்றவனுமாவான். (1)

விஜயே —

ஸங்க்ராமதீரஃ ஸததம் ஸுசீலஃ
ஸபாசதுர்யேண வதாம் வரேண்யஃ ।
தாதா தயாளுஃ கில வைரிஹந்தா
யஸ்ய ப்ரஸூதிர் விஜயாபிதாநே ॥

விஜய வருஷ பலன்.

விஜய வருஷத்தில் பிறந்தவன், போரிடுவதில் தைரியமுடையவனும், மிகவும் நற்குணங்களுடையவனும், அரசனாலே வெகுமதிக்கப்படுகின்றவனும், பேச்சாளிகளில் சிறந்தவனும், தானம் செய்கின்றவனும், இரக்கமுடையவனும், பகைவனை வதைப்பவனுமாவான். (1)

ஜயே —

ஶாஸ்த்ரப்ரஸங்கே விதுஷாம் விஷாதீ
ஶஷ்ரோ வதாந்யோ ரிபுதர்பஹந்தா |
ஜயாபிலாஷீ விஷயாநுரக்த:
ஜாதோ ஜயாப்தே மநுஜோ மஹௌஜா: ||

ஜய ஸம்வத்ஸர பலன்.

ஜய வருஷத்தில் பிறந்த மனிதன், வித்துவான்கள் சாஸ்திரங்களை பிரஸங்கம் செய்யும்பொழுது வருந்துகின்றவனும், வெகுமதிக்கத்தக்கவனும், அளவற்று வழங்குகின்றவனும், பகைவர்களின் கர்வத்தை அழிப்பவனும், வெற்றியை விரும்புகின்றவனும், காமத்தில் ஈடுபட்டவனும், நிகரற்ற பெருமையுடையவனும், அல்லது மனோவலிமையுடையவனுமாவான். (1)

மந்மதே —

ஸம்ஸாரஸாரைகவிபூஷணாட்யோ
விலாஸிநீலோலவிகாஸக்தஜ்ஞ: |
ஸுதீர்த்தநிருத்தாபிரத: ஸுபோக்தா
யோ மந்மதாப்தே ஜநநம் ப்ரபந்ந: ||

மந்மத வருஷ பலன்.

மந்மத வருஷத்தில் பிறந்தவன், ஸாதாரணமான அணிகளையும், சிறந்த அணிகளையும் அணிந்திருப்பவனும், ஸ்திரீகளுடன் விளையாடும் ஸ்வபாவமுடையவனும், அமுதத்திற்கொப்பான வாக்கையுடையவனும், கலைகளைக் கற்றறிந்தவனும், நல்ல கானம், நிருத்தியம் இவைகளில் விருப்பமுடையவனும், நன்கு ஆகாரம் செய்புவனுமாவான்,

துர்முகி —

க்ரூரோऽயோக்யோ நிந்த்யபுத்திர் துராஶோ
வக்ராஸ்யபாஹ்வங்க்ரிரூபவபு: ஸபாப: ।
விரூபபாஷீ பஹுதோஷசேஷ்ட:
யோ மாநவோ துர்முகிநாம்நி ஜாத: ॥

### துர்முகி வருஷ பலன்

துர்முகி வருஷத்தில் பிறந்தவன், கொடுமையும் அயோக்கியத்தனமும் உடையவனும், இகழத்தக்க புத்தியுடையவனும், மிகுந்த பேராசையுடையவனும், கோணலான முகம், கை, கால்களையுடையவனும், பாபச் செயலில் ஆசையுள்ளவனும், விபரீதமாகப் பேசுகின்றவனும், அதிகமாக கெடுதலான காரியங்களைச் செய்கின்றவனும் ஆவான். (1)

ஹேமலம்பி —

துரங்கஹேமாம்பரதாந்யரத்நை:
யுதோ நிதாந்தம் ஸுததாரயுக்த: ।
ஸமஸ்தவஸ்தூச்சயநைகபுத்தி:
யோ ஹேமலம்பிப்ரபவ: ஸதா ஸதாஶ: ॥

### ஹேமலம்பி வருஷ பலன்

ஹேமலம்பி ஸம்வத்ஸரத்தில் பிறந்த மனிதன், ஏராளமான குதிரைகள், தங்கம், (நிறைந்த செல்வம்) ஆடைகள், தானியம், ரத்தினங்கள் இவைகளுடன் கூடியவனும், மனைவி மக்களுடன் கூடியவனும், ஸகல வஸ்துக்களையும் சேகரித்து வைப்பதில் ஒன்றிய புத்தியையுடையவனுமாவான்.

வி(ள)லம்பிநி —

யஸ்யோத்பத்தாவ்ருத்தௌ ஸ்வல்பமதிஸ்தாம் ப்ரபஞ்ச:
ஶ்ரேஷ்டாயிந: ஸகலவிவர்ஜிதஶ்ச |
ப்ராரப்தகார்யேऽதிதராம் ப்ரலாபீ
விலம்பிஸம்வத்ஸரஸம்பவ: ஸ்யாத் ||

விலம்பி வருஷ பலன்.

விலம்பி வ்ருஷத்தில் பிறந்தவன், அயோக்கியனும், அதிகப்பேராசையுடையவனும், அல்லது மிகவும் அல்ப புத்தியுடையவனும், சோம்பேறித்தனமுள்ளவனும், சிலேஷ்மம் மேலிட்டவனும், பலமற்றவனும், துவக்கிய காரியத்தில் அதிகமாகப் புலம்புகின்றவனுமாவான்.

விகாரிணி —

துராக்ரஹீ ஸகலகலாப்ரவீண:
ஸவஞ்சக: சஞ்சலதீஸ்து துஷ்ட: |
அநல்பஜல்ப: ஸ்வஸுஹ்ருத்விகல்ப:
விகாரிஸம்வத்ஸரஜோ நர: ஸ்யாத் ||

விகாரி வத்ஸர பலன்.

விகாரி ஸம்வத்ஸரத்தில் பிறந்த மனிதன், கெட்ட காரியத்தில் பிடிவாதமுள்ளவனும், ஸகல கலைகளையும் கற்றறிந்த ஸாமர்த்தியமுடையவனும், ஏமாற்றுவதில் சிறந்தவனும், நிலையற்ற புத்தியுடையவனும், அயோக்கியத்தனமுடையவனும், அதிகமாகப் பேசுகின்றவனும், தனது நண்பர்களிடத்தில் விபரீதமான மனோபாவமுடையவனுமாவான். (1)

𑌶𑌾𑌰𑍍𑌵𑌰𑍍𑌯𑌬𑍍𑌦𑌮𑍍 —

𑌵𑌾𑌣𑌿𑌜𑍍𑌯𑌕𑌾𑌰𑍍𑌯𑍇 𑌕𑍁𑌶𑌲𑍋 𑌵𑌿𑌲𑌾𑌸𑍀
𑌨𑍈𑌵𑌾𑌨𑍁𑌕𑍂𑌲𑌸𑍍𑌸𑍁𑌹𑍃𑌜𑍍𑌜𑌨𑌾𑌨𑌾𑌮𑍍 ।
𑌅𑌨𑍇𑌕𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌗𑍍𑌰𑌹𑌣𑌾𑌨𑍁𑌰𑌕𑍍𑌤𑌃
𑌸𑌂𑌵𑌤𑍍𑌸𑌰𑍇 𑌶𑌾𑌰𑍍𑌵𑌰𑌿𑌨𑌾𑌮𑍍𑌨𑌿 𑌜𑌾𑌤𑌃 ॥

சார்வரி வருஷ பலன்.

*சார்வரி வருஷத்தில் பிறந்தவன், வியாபாரம் செய்யும் கலையில் ஸாமர்த்தியமுடையவனும், விளையாட்டு ஸ்வபாவமுடையவனும், நண்பர்களுக்கு அனுகூலமாக இல்லாதவனும், அநேகவிதமான வித்தைகளைக்கற்பதில் ஆவல் உடையவனுமாவான். (1)*

𑌪𑍍𑌲𑌵𑍇 —

𑌕𑌾𑌮𑍀 𑌪𑍍𑌰𑌕𑌾𑌮𑌂 𑌬𑌹𑍁𑌵𑌿𑌤𑍍𑌤𑌶𑌾𑌲𑍀
𑌸𑍇𑌵𑌾𑌦𑌰𑍋 𑌦𑌾𑌰𑌹𑍃𑌦𑌯𑌾𑌨𑍁𑌵𑍃𑌤𑍍𑌤𑌃 ।
𑌸𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌾𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑍀 𑌚𑌲𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌃
𑌪𑍍𑌲𑌵𑌾𑌭𑌿𑌧𑌾𑌨𑌾𑌬𑍍𑌦𑌭𑌵𑍋 𑌨𑌰𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 ॥

பிலவ வருஷ பலன்.

*பிலவ வருஷத்தில் பிறந்த மனிதன், காமாதுரனும், ஏராளமான செல்வமுடையவனும், அடிக்கடி சேவக விருத்தியை விரும்புகின்றவனும், மனைவியின் மனம்போல நடப்பதில் திருப்தியுடையவனும், தன்னுடைய மனோபாவங்களை வெளியிடாதவனும், நிலையற்றஸ்வபாவமுடையவனுமாவான். (1)*

शुभकृति —

सौभाग्यविद्याविनयैः समेतः
पुण्यैरगण्यैरपि दीर्घजीवी ।
स्यान्मानवः सन्तनयो धनाढ्यश्च
यस्य प्रसूतिः शुभकृत्समायाम् ॥

சுபகிருத்து வருஷ பலன்.

சுபகிருத்து வத்ஸரத்தில் பிறந்த மனிதன், ஸௌபாக்கியம்—கல்வி—அடக்கம்—இவைகளுடன் கூடியவனும், அளவற்ற புண்ணிய கர்மாக்களினலே வெகுகாலம் ஜீவித்திருப்பவனும், பிள்ளைகளும், அதிகமான செல்வமும் உடையவனுமாவான். (1)

शोभकृति —

सर्वोत्तमः चारुगुणो दयालुः
सत्कर्मकर्ता विजयी विशेषात् ।
कान्तो विनीतः शुभकृच्च प्रवीणो
यः शोभकृद्वत्सरसंभवः स्यात् ॥

சோபகிருத்து வருஷ பலன்.

சோபகிருத்து வருஷத்தில் பிறந்தவன், ஸகலவிதத்திலும் மேன்மையுடையவனும், அழகான குணங்களுடையவனும், தயாள குணமுடையவனும், நல்ல காரியங்களை செய்கின்றவனும், விசேஷித்து ஜயமுடையவனும், அழகானவனும், அடக்கமுடையவனும், மங்களகரமான காரியங்களை செய்கின்றவனும், ஸாமர்த்தியமுடையவனும் ஆவான். (1)

க்ரோதிநி —

க்ரூரேக்ஷண: க்ரூரதரஸ்வபாவ:
ஸ்த்ரீவல்லப: பர்வததுல்யகர்வ: |
பரார்த்தஹந்தா பரகார்யகாலே
க்ரோதீ பவேத் க்ரோதிஸமுத்பவ: ||

குரோதி வருஷ பலன்.

குரோதி வருஷத்தில் பிறந்தவன், கொடூரமான பார்வையுடையவனும், மிகவும் கொடுமையான ஸ்வபாவமுடையவனும், ஸ்திரீகளுக்குப் பிரியமானவனும், மலைபோன்ற (அளவற்ற) கர்வமுடையவனும், பிறருடைய காரியங்கள் கைகூடும் ஸமயத்தில், அதற்கு இடையூறாக நிர்ப்பவனும், கோபமுடையவனுமாவான். (1)

விஶ்வாவஸு —

ஸத்புத்ரதார: ஸததப்ரதாதா
ஸதாசாரவாந் தைர்யஶீல: |
இஷ்டாந்நபோக்தா ஸகலகுணாதிகஶ்ச
விஶ்வாவஸௌ யஸ்ய பவேத் ப்ரஸூதி: ||

விசுவாஸு வருஷ பலன்

விசுவாஸு வருஷத்தில் பிறந்தவன், நல்ல புதல்வனும் நல்ல மனைவியுமுடையவனும், அதிகமாக தானம் செய்பவனும், சிறந்த குணங்களுடையவனும், ஸதாசாரங்களை அநுஷ்டிப்பவனும், அதிக தைரியமுடையவனும், தனக்குப் பிரியமான ஆகாரத்தை புஜிப்பவனும், ஸகல குணங்களாலும் மேன்பாடுடையவனுமாவான். (1)

[illegible] —

[illegible]

[illegible] ।

[illegible]

[illegible] ॥

பராபவ வருஷ பலன்.

பராபவ வருஷத்தில் பிறந்தவன், தனம், தானியம் இவைகளை சிறிதும் ஸம்பாதித்து வைக்காதவனும், மிகவும் கொடுமையான வாக்கியங்களையுடையவனும், ஸ்வல்பமான ஆசாரமும், அயோக்கியத்தனமுமுடையவனுமாவான். (1)

[illegible] —

[illegible]

[illegible] ।

[illegible]

[illegible] ॥

பிலவங்க வருஷ பலன்.

பிலவங்க வருஷத்தில் ஜனித்த மனிதன், எப்பொழுதும் நிலையற்ற மனோநிலையையுடையவனும், நல்ல காரியத்தில் பிரவிருத்தி இல்லாதவனும், அயோக்கியத்தனமுடையவனும், ஸதாசார நல்ல (ஒழுக்க)மற்றவனுமாவான். (1)

[illegible] —

[illegible]

[illegible] ।

ஷூஹுராஂஷி ஸ ஸ்னாஷ்ரவ *ஜஂபவதியாநு
ஜாமெதாஉ ரிக்நூ கிஜ கீஜகாஜெ ॥

கீலக வருஷ பலன்

கீலக வருஷத்தில் பிறந்தவன், நடுத்தரமான அழகு உடையவனும், பிரியமாகப்பேசுகின்றவனும், தயாளகுண முடையவனும், அடிக்கடி ஜலத்தை விரும்புகின்றவனும், பருத்த கால்களும் அழகான சிரஸ்ஸுமுடையவனும், அலம்பரியனும், (பகைவர்களிடம் அகப்பட்டுக்கொள்ளாதவனும்) பகைவர்களை பிடிங்கிக்களைபவனுமாவான்.

ஸௌஜெ —

வஂஷிதொ ஷி யஜவாநு பஹுஹொஜீ
ஜெவதாதிமிரஷிநூ ஶுசிஃ ஸூாகஃ ।
ஸாகவிகஃ க்ரூரகஹைவஶயஷிஃ
ஸௌஜ்ஜவதஸரஹவெ உஜஜஷூ ॥

ஸௌமிய வருஷ பலன்.

ஸௌமிய வருஷத்தில் பிறந்த மனிதன், பாண்டித்திய முடையவனும், செல்வமுடையவனும், பலவிதமான போகங்களை அநுபவிப்பவனும், தேவதைகளிடத்திலும் அதிதிகளிடத்திலும் (அதிதி—விருந்தாடி) அன்புடையவனும், தூய்மையுடையவனும், ஸத்துவகுணமுடையவனும், இளைத்த சரீரத்தையுடையவனுமாவான்.

ஸாயாரணெ —

ஜ தஜூ தஜெஷிமெதாஉ ஜஜக்ஷொ
ஶிஷிஜியாயாஂ கஶஜொ விவெகீ ।

* ஸஜஂஹதியஃ உக்தி பொமிதஃ வாஂஃ கயஜிஜ ஶஂமஜெ
தெதி ஶாதி ।

ക്രോധീ ശുചിഃ ഭോഗനിവൃത്തചേതാഃ
പ്രാണീ ഹി സാധാരണജഃ പ്രസിദ്ധഃ ॥

ஸாதாரண வருஷ பலன்.

ஸாதாரண வருஷத்தில் பிறந்த மனிதன், இங்கு மங்குமலைகின்றவனும், ஆசையுடையவனும், எழுத்து வேலைகளில் (சித்திரங்கள் எழுதுவதில்) ஸாமர்த்தியமுடையவனும், பகுத்தறிவு படைத்தவனும், கோபமுடையவனும், தூய்மையுடையவனும், போகங்களிலிருந்து விலகிய மனதுடையவனுமாவான். என்று கூறப்பட்டிருக்கின்றது.

വിരോധികൃതി —

ഉമേശ്വരാരാധനതത്പരഃ സ്യാത്
ക്രോധീ വിരോധീ സതതം പരേഷാം ।
പരാങ്മുഖഃ താതവചസ്സ്വതീവ
വിരോധികൃന്നാമ്നി ഹി ജന്മ യസ്യ ॥

விரோதிகிருத்து வருஷ பலன்.

விரோதிகிருத்து வருஷத்தில் பிறந்த மனிதன், பரமேசுவரனை ஆராதிப்பதில் ஈடுபட்டவனும், கோபம் உடையவனும், எப்பொழுதும் பிறருக்கு விரோதமான காரியங்களை செய்பவனும், தகப்பனுடைய வார்த்தையை மிகவும் வெறுப்பவனுமாவான். (1)

പരിധാവിനി —

വിചാരശീലശ്ച കലാപ്രവീണഃ
സത്യീ ച ശാന്തോ വദാന്യായിതാനാം ।
35 പ്രാപാരസംപ്രാപ്തഗൃഹപ്രതിഷ്ഠഃ
പ്രാജ്ഞോ ഭവേച്ച പരിധാവിനാമ്നി ॥

## பரிதாவி வருஷ பலன்.

பரிதாவி வருஷத்தில் பிறந்த மனிதன், வித்தையைக் கற்றறிந்தவனும், நல்ல ஸ்வபாவமுடையவனும், கலைகளில் சிறந்த அறிவு படைத்தவனும், சிறந்த புத்தியுடையவனும், அரசர்களாலே வெகுமதிக்கத்தக்கவனும், வியாபாரத்திலே பெரும்புகழையடைந்தவனுமாவான். (1)

ப்ரமாதிநி —

துஷ்டாபிசாரீ கலஹாநுரக்த:
துஷ்ட: குடும்பாபிரதஶ்ச தீந: ।
ஸ்வல்பார்தபுத்தி: கர்ஹிதகர்மகர்தா
ப்ரமாதிஜாதோ மநுஜ: ப்ரமாதீ ॥

## பிரமாதி(தீச) வருஷ பலன்.

பிரமாதி(தீச) வருஷத்தில் பிறந்த மனிதன், துஷ்டர்களிடத்தில், அல்லது கெட்ட காரியங்களில் அபிமானமுடையவனும், கலஹம் செய்வதில் ஆசையுடையவனும், துஷ்ட ஸ்வபாவமுடையவனும், குடும்பத்தில் அதிகப் பற்றுள்ளவனும், இறக்கப்படத்தக்கவனும், ஸ்வல்ப புத்தியுடையவனும், இகழத்தக்க காரியங்களைச் செய்கின்றவனும், பிழைகள் செய்பவனுமாவான். (1)

ஆநந்தே —

ஸ்வாத்யாயஶீலாந்விததர்மதக்ஷ:
ஶஶ்வச்ச ஸந்தாநஹிதப்ரவ்ருத்த: ।
ப்ராஜ்ஞ: க்ருதஜ்ஞ: ஸததம் விநீதோ
ஹ்யாநந்தஜாதோ மநுஜோ வதாந்ய: ॥

## ஆநந்த வருஷ பலன்.

ஆநந்த வருஷத்தில் பிறந்த மனிதன், அதிகமாக தானம் செய்பவனும், சாதுரியமுடையவனும், அதிக ஸாமர்த்திய முடையவனும், அடிக்கடி பிள்ளைகளின் நற்குணங்களால் உண்டாகின்ற ஸந்தோஷாதிகத்தினாலே பூரிப்படைகின்றவனும், மேதாவியானவனும், நன்றியுடையவனும், மிகுந்த வணக்கமுடையவனும், அதிகமாக தானதர்மங்கள் வழங்குகின்றவனுமாவான். (1)

ராக்ஷஸெ —

ஸ்ராசு க்ரூரகஊபா கருஹமாநாரகூ:

ஸாத்ருக்ஷஸஈஊவிசாரஸார: |

உயாவிஹீநஸு ஸஸாஹஸொவி

ஹவெஹரொ ராக்ஷஸவஷஜநா ||

## ராக்ஷஸ வருஷ பலன்.

ராக்ஷஸ வருஷத்தில் பிறந்த மனிதன், கொடூரமான செய்கைகளுடையவனும், கலஹங்கள் விளைவிப்பதில் விருப்பமுடையவனும், நல்ல காரியங்களை அறிந்து செய்யாதவனும், தயையற்றவனும், ஸாஹஸமுடையவனும், (ஸாஹஸம்—திருடுதல், பொய் சொல்லுதல், பரதார கமனம் செய்தல் முதலிய தீஞ்செயல்கள்) ஆவான். (1)

நமெ —

ஸாவாஸிரார்ஜீ ஜஹஸஸஸம்

செசுஸ்ராநவ்யஜ்தள காஸஜ: ஸாஸீஜ: |

ஸ்ராஉஜுவிதெ்தா ஸஹவாஜகஸு

ஜாதொநஜாஸெ வவஜொ உஜஷ்: ||

நல வருஷ பலன்.

நல வருஷத்தில் பிறந்த மனிதன், சிறந்த அறிவுடன் விளங்குகின்றவனும், ஜலம், பயிர், செல்வம், வைசியர்கள் இவைகளை அநுஸரித்து நடப்பதில் ஸாமர்த்தியமுடையவனும், நல்ல ஸ்வபாவமுடையவனும், குறைந்த செல்வமுடையவனும், பலரைக்காப்பாத்துகின்றவனும், சஞ்சல ஸ்வபாவமுடையவனுமாவான்.

விஜூரெ —

ஷிஜெக்ஷணொ மஹி-உதகஉ-உகஉதஉா
ஸஹாஉ ஷுபிதஃ வக்ஷுமெவெஹவாஸூஃ ।
தூாஹ் ஙஹொZதூஂதகஃொாஙவாகூஃ
ஜாதொ நஙஃ விஜூஙுநாஉயெயெ ॥

பிங்கல வருஷ பலன்.

பிங்கல வருஷத்தில் ஜனித்த மனிதன், பொன்னிறமான கண்களையுடையவனும், இகழத்தக்க காரியங்களைச் செய்கின்றவனும், (ஸ்வப்பிரயாஸையாலே) மேன்மையடைந்தவனும், நிலையற்ற விபவங்கள் முதலியவைகளையுடையவனும், (விபவம்—செல்வம்) கொடையாளியானவனும், அயோக்கியத்தனமுடையவனும், அல்லது பிறருக்குத்தெரியாமல் தீங்கு விளைவிப்பவனும், மிகவும் கொடுமையான சொற்களையுடையவனுமாவான். (1)

காறுயக்தூளா —

ஃஙஜுஜுஃ ஷியதாஉவெதஃ
ஸஹஸாயஙஙிஃ வியிநா வியக்தஃ ।
கவிஷுஹஸஂஹஃ கிறு காறுஙவெஃ
யஃ காறுயக்திஷுஹவஃ கூஙாஂஹஃ ॥

காலயுக்தி வருஷ பலன்.

காலயுக்தி வருஷத்தில் பிறந்த மனிதன், அமிதமாகப் பேசுகின்றவனும், பிரியமாக இருக்கின்ற தன்மையை யுடையவனும், சிலாகிக்கத்தக்க புத்தியையுடையவனும், தெய்வபலமற்றவனும், அல்லது கட்டுப்பாட்டிற்கு உட்படாதவனும், கலிகளைப்பற்றி பிரஸங்கம் செய்கிற வனும், கருப்பு நிறமான சரீரமுடையவனும், அல்லது காலனைப்போல் (பயங்கரமாக) இருப்பவனும், இளைத்த சரீரத்தையுடையவனுமாவான். (1)

ஸித்தார்த்தௌ —

உதாரசேதா விபுலஸ்வபாவ:
ரணாங்கணே ப்ராப்தயசா: ஸுகீவிலாஸீச ।
நரேந்த்ரமந்த்ரீ பஹுபாக்யஜிதாயு:
ஸித்தார்த்திஜாதோ மநுஜ: ஸதாயு: ॥

ஸித்தார்த்தி வருஷ பலன்.

ஸித்தார்த்தி வத்ஸரத்தில் ஜனித்த மனிதன், மிகச் சிறந்த அல்லது அள்ளிவழங்குகின்றமனம் படைத்தவனும், யாரிடத்திலும் கருணையுடையவனும், அல்லது விளங்கு கின்ற அருளையுடையவனும், போர்க்களத்தில் அடைந்த புகழையுடையவனும், ஸுகத்தையனுபவிப்பவனும், அரசருக்கு மந்திரியாக இருப்பவனும், அநேகம் விதமாக வெகுமதியாகப்பெற்ற செல்வத்தையுடையவனும், அல்லது அநேக விதமாகப்போற்றத்தக்க செல்வத்தையுடையவனும் ஆவான். (1)

ரௌத்ரே —

பயங்கர: பாலயிதா பசூநாம்
ஸ்தூலஸ்ச ப்ரவாதஸ்ய பரோபகீர்த்யபத்ரு: ।

ஜாதாவகீர்த்தி: ஸஹஸி த்வவ்ருத்தி:
நரோ ஹி ரௌத்ர: ஸஹ ரௌத்ரிஜந்மா ॥

ரௌத்திரி வருஷ பலன்.

ரௌத்கிரி வருஷத்தில் பிறந்த மனிதன், பயத்தை யுண்டுபண்ணுகின்றவனும், பசுக்களை காப்பாற்றுகின்றவனும், அடிக்கடி தெளிந்த மனதையுடையவனும், அல்லது அடிக்கடி அருள் செய்பவனும்: சபலபுத்தியுடையவனும், அதிகமான துஷ்டஸ்வபாவமுடையவனும், அபகீர்த்தியை யடைந்தவனும், அயோக்கியத்தனமுடைய மனோபாவத்தை யுடையவனும், மிகக்கொடியவனுமாவான். (1)

துர்மதௌ —

ஸ்வாக்ய நிர்வாஹ ஸமாதிமாநீ
வ்யவஸாயதோ ஹீநதரோ நர: ஸ்யாத் ।
காமீ வ்யகாரம் துர்மதிவ்ருத்த:
யோ துர்மதி: துர்மதிவர்ஷஜாத: ॥

துர்மதி வருஷ பலன்.

துர்மதி வருஷத்தில் பிறந்தவன், தன்னுடைய வார்த்தையை நிலைநாட்டுவதில் அதிகமான அபிமானம் உடையவனும், தொடர்ந்து கவனிக்கையில் மிகவும் அல்பத்தனமுடைய மனிதனாக இருப்பவனும், அதிகமாக காமத்தில் ஈடுபட்டவனும், கெடுதலில் தொடர்ச்சியாக புத்தியை செலுத்துகின்றவனுமாவான். (1)

துந்துபௌ —

நித்யம் நரேந்த்ராச்ரயமாநவ: ஸ்யாத்
மஜாச்வஸம்பத்ஸஹித: ஸ்ய ।

தளயகுத்ரஞலீதிரதீவஜாதஃ

வெநூாநவொ ஓுடூஷிநாஉவஷெஞு ॥

துந்துபி வருஷ பலன்.

துந்துபி வருஷத்தில் பிறந்த மனிதன், எப்பொழுதும் அரசனுடைய ஆதரவினுல் கௌரவத்தைப்பெற்றவனும், யானைகள், குதிரைகள், பூமி, ஸுவர்ணம் (தனம்) இவைகளுடன் கூடிவனும், நிருத்தம், கீதம், வாத்தியங்களில் அதிகமான பிரியமுடையவனுமாவான். (1)

ரு௱யிரொஜூாரிணீ —

சூரக்தாக்ஷஃ க்ஷிதவி உஹாகாஉடிஃ காதிநீநாம

வ்ராஷுஹஞுவாஉதிகூரபதநுஃ ஜாயதெ

உதூஜரொஷஃ ।

வாஉஷம்செ ஹவதி கூநவீ ஷஸூய௱ஷெமவா

ஷஹாக

பஷூராஷஃவம் வ்ரஜதி ரு௱யிரொஜூாரி

ஜநா உநஷஃ ॥

ருதிரோத்காரி வருஷ பலன்.

ருதிரோத்காரி வருஷத்தில் பிறந்த மனிதன், எவ்விடத்திலாவது சிறிது சிவப்பான கண்களையுடையவனும், காமமுடைய ஸ்திரீகளுக்குக் காமத்தையளிப்பவனும் (காமினிகளை திருப்தியடையச் செய்கின்றவனும்) பிறப்பினுலே மெலிந்த சரீரமுடையவனும், அதிக ரோஷமுடையவனும், இரண்டு கால்கள் அல்லது இரண்டு கைகளிலும் சொத்தை விழுந்த நகங்களையுடையவனும், ஆயுதத்தினுலே வேதனையடைகின்றவனுமாவான். (1)

[illegible] —

[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥

## ரக்தாக்ஷி வருஷ பலன்.

ரக்தாக்ஷி வருஷத்தில் பிறந்தவன், ஆசாரம் (நடத்தை) தருமம் இவைகளில் அதிகப்பற்றுடையவனும், மன்மதனைக் காட்டிலும் அழகுடையவனும், பிறருடைய ஆதிக்கத்தை சிறிதளவும் ஸஹிக்காதவனும், கண்ணில் ரோகம் உடையவனுமாவான். (1)

[illegible] —

[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥

## குரோதந வருஷ பலன்.

குரோதந வருஷத்தில் பிறந்தவன், பிறருடைய காரியத்தில் இடையூராக இருப்பவனும், அதிகமாக தாமத குணமுடையவனாக இருப்பதனாலே பயங்கரமாக இருப்பவனும், பிறருடைய புத்தியைக் கெடுப்பவனுமாவான்.

[illegible] —

[illegible]
[illegible] ।

ஸஞ்சயப்ரோத்க்ருஷ்டஶ்ச ப்ரவ்ருத்தி:
க்ஷயாபியாநே ஜநநம் ஹி யஸ்ய ॥

அக்ஷய வருஷ பலன்.

அக்ஷய வருஷத்தில் பிறந்தவன், தேடிவைத்திருக்கின்ற பொருளை அதிகமாகச் செலவு செய்பவனும், பிறரிடத்தில் ஸேவிப்பவனிடத்தில் குற்றம்கூறும் மனோபாவமுடையவனும், நல்ல காரியங்களில் மிகவும் குறைந்த அளவுக்கு மனதின் ஈடுபாடுடையவனுமாவான். (1)

அத ப்ரபவாதிஷஷ்டிஸம்வத்ஸரநாமாநி.

(தைவஜ்ஞவிலாஸே)

ப்ரபவோ விபவ: ஶுக்ல: ப்ரமோதோ(அ)த ப்ரஜாபதி: ।
ஆங்கிரஸ: ஶ்ரீமுகஶ்ச பாவோ(அ)த யுவவத்ஸர: ॥

தாதேஶ்வரோ பஹுதாந்ய: ப்ரமாதீ விக்ரமோ வ்ருஷ: ।
சித்ரபாநு: ஸுபாநுஶ்ச தாரண: பார்திவோ வ்யய: ॥

ஸர்வஜிச்ச ஸர்வதாரீச விரோதீ விக்ருதி: கர: ।
நந்தநோ விஜயஶ்சைவ ஜயோ மந்மததுர்முகௌ ॥

ஹேமலம்பீ வி(ல)ம்பீச விகாரீ ஶார்வரீ ப்லவ: ।
ஶுபக்ருச்ச ஶோபக்ருச்ச க்ரோதீ விஶ்வாவஸு:
பராபவ: ॥ ௪ ॥

ப்லவங்க: கீலக: ஸௌம்ய: ஸாதாரண(ணோ)
விரோதிக்ருச் ।
பரிதாவீ ப்ரமாதீ ஸ்யாச் சாநந்தோ ராக்ஷஸோ
நல: ॥ ௫ ॥

[illegible] ।

[illegible] ॥

[illegible]

[illegible] ॥

## 60 வருஷங்களின் பெயர்கள்

## (தெய்வஜ்ஞவிலாஸத்தில்)

பிரபவ 1, விபவ 2, சுக்கில 3, பிரமோதூத 4, பிரஜாபதி 5, ஆங்கிரஸ 6, ஸ்ரீமுக 7, பாவ 8, யுவ 9, தாது 10, ஈசுவர 11, பஹுதானிய 12, பிரமாதி 13, விக்கிரம 14, விருஷ 15, சித்திரபாநு 16, ஸ்வபாநு 17, தாரண 18, பார்த்திவ 19, வியய 20, ஸர்வஜித்து 21, ஸர்வதாரீ 22, விரோதி 23, விக்ருதி 24, கர 25, நந்தந 26, விஜய 27, ஜய 28, மன்மத 29, துர்முக 30, ஹேமலம்பீ 31, வி(ம)லம்பீ 32, விகாரீ 33, சார்வரீ 34, பிலவ 35, சுப கிருத்து 36, சோபகிருத்து 37, குரோதி 38, விசுவாஸு 39, பராபவ 40, பிலவங்க 41, கீலக 42, ஸௌமிய 43, ஸாதாரண 44, விரோதிகிருத்து 45, பரிதாவீ 46, பிரமாதீ 47, ஆனந்த 48, ராக்ஷஸ 49, நல 50, பிங்கல 51, காலயுக்தி 52, ஸித்தார்தி 53, ரௌத்திரி 54, துர்மதி 55, துந்துபி 56, ருதிரோத்காரி 57, ரக்தாக்ஷி 58, குரோதந 59, அக்ஷய 60. இவ்விதமாக பிரபவாதி வருஷங்கள் 60 என்பதை புத்திமான்கள் அறிந்துகொள்ளுவார்களாக.

அத ப்ருஹஸ்பதிஷஷ்டிஸம்வத்ஸராபிமானி

தேவதாநாம் நாமானி.

(சைவாகமே)

[illegible] ।

[illegible] ॥ க ॥

கௌமாரீ வைஷ்ணவீ சைவ வாராஹ்யைந்த்ரீ ததைவ ச |
சாமுண்டிகாऽருணஶ்சைவ ப்ராஜ: படர ஏவ ச ||

பதங்க: ஸ்வர்ணரோ ஜ்யோதிஷ்மாந் விபாஸஶ்ச கஶ்யப: |
ரவி: ஸூர்யஶ்ச பாநுஶ்ச கக: பூஷா ததைவ ச ||

ஹிரண்யகர்போऽர்ய மரீச்யாதித்ய: ஸவிதா ததா |
ஶுக்லோ ஹோதா ஹவ்யவாட் ஜாதவேதஸ்ஸஹோஜஸ: | ச ||

ததோऽஜராப்ரஹ்மவேத்ருஶ்ச நயவ்யாவஸாவபி |
வம்ஶீரூப(யா:)விஸவிஶ்ச ஹஸ்தாக்ஷஶ்ச வராஹக: ||

நாரஸிம்ஹோ வாமநஶ்ச ஶ்ரீராமோ ராகவோ ஹரி: |
க்ருஷ்ண: கல்கீ பலபத்ரஶ்ச யாதவ்யாதஶ்ச பைரவ: ||

ஸநத்குமாரோ தாதா ச தாக்ஷாயணீ ருக்மிணீதி ஸ்ம்ருதா: |
அஹிர்புத்ந்ய ஏதேஷாமப்தாநாம் தேவதா: க்ரமாத் ||

பிரபவாதிகளான 60 வருஷங்களின் அபிமாநி
தேவதைகளின் பெயர்கள்.

**( சைவாகமத்தில் )**

*பிரம்ஹா 1, விஷ்ணு 2, மஹேசன் 3, கணேசன் 4, கணபன் 5, ஷடாநநன் 6, வல்லீ 7, கௌரீ 8, பிராம்ஹீ 9, மஹேஶ்வரீ 10, கௌமாரீ 11, வைஷ்ணவீ 12, வாராஹீ 13, இந்திராணீ 14, சாமுண்டை 15, அரோகன் 16, பிராஜன் 17, படரன் 18, பதங்கன் 19, ஸ்வர்ணரன் 20, ஜியோதிஷ்மான் 21, விபாஸன் 22, கசியபன் 23, ரவி 24, ஸூரியன் 25, பாநு 26, ககன் 27,*

பூஷா 28, ஹிரண்யகர்பன் 29, மரீசி 30, ஆதித்தியன் 31, ஸவிதா 32, அருக்கன் 33, பாஸ்கரன் 34, அக்கினி 35, ஜாதவேதன் 36, ஸஹௌஜஸன் 37, அஜராபிரபு 38, வைசுவாநரன் 39, நரியாபஸன் 40, பங்க்திராதஸன் 41, விஸர்பி 42, மத்ஸியமூர்த்தி 43, கூர்மமூர்த்தி 44, வராஹமூர்த்தி 45, நரஸிம்ஹமூர்த்தி 46, வாமநமூர்த்தி 47, ஸ்ரீராமன் 48, பரசுராமன் 49, பலராமன் 50, கிருஷ்ணன் 51, கல்கிமூர்த்தி 52, புத்தர் 53, துர்கை 54, யாதுதாநன் 55, பைரவர் 56, ஹநூமான் 57, சாரதை 58, தாக்ஷாயணீ 59, லக்ஷ்மீ 60 என்று கூறப்பட்டிருக்கின்றவர்கள், முறையே பிரபவ முதலான 60 வருஷங்களின் அபிமானி தேவதைகளாவார்கள், (7) (60)

௯௨ தத்ராதௌ ப்ரபவாப்திநோ ப்ரஹ்ம த்யானம்,

அக்ஷாத்யங்கிதபாணிபத்மமபயம் சிந்முத்ரிகாம் ஹஸ்தயோ:,
பிப்ராணம் சதுராநநம் ப்ரவிகஸத்
பத்மாஸநாதிஷ்டிதம் |
பக்ஷ்மாஹாரவிராஜமாநவிலஸத் ஶ்ரீப்ரஹ்ம
ஸூத்ரோஜ்ஜ்வலம்
வந்தேஹம் ப்ரபவாப்தபம் கமலஜம் ஶ்ரேயோபி
வ்ருத்திப்ரதம் ||
(பத்மபுராணே)

93. அவைகளில் முதலாவது பிரபவ வருஷாபிமாநியான பிரஹ்மாவின் த்யாநம்.

ஜபமாலை முதலியவைகளினாலே அலங்கரிக்கப்பட்ட தாமரைமலர்போன்ற கைகளையுடையவரும், அபயத்தையும் சின்முத்திரையையும் இருகைகளிலும் வஹிப்பவரும், 4 முகங்களையுடையவரும், நன்கு மலர்ந்த பத்மமாகிய

ஆஸநத்திலிருப்பவரும், மார்பில் நன்கு பிரகாசிக்கின்ற பிரஹ்மஸூத்திரத்துடன் பிரகாசிப்பவரும், ச்ரேயஸ்ஸை அபிவிருத்தி செய்கின்றவரும், பிரபவ வத்ஸரத்திற்கு அபிமானி தேவதையாக இருப்பவருமான கமலஜனை (பிரஹ்மதேவனை) நான் வணங்குகின்றேன். (பத்ம வர்ணம்)

௯௪. அத விபவாபிமானி விஷ்ணுதேவதா த்யானம்.

ஸ்ப்புரத்கிரீடம் தர சக்ர சார்ங்க

கதாபிராமம் ஸஹிதம் சதுர்பி: ।

ஸமேதமனந்தாஸனஸந்நிவிஷ்டம்

த்யாயேத்ஸுரேசம் விபவாபிமானம் ॥

(மேகச்யாமவர்ண:)

94. விபவ வருஷாபிமானி விஷ்ணு த்யானம்.

பிரகாசிக்கின்ற கிரீடத்தையுடையவரும், சங்கம், சக்கரம், சார்ங்கம், கதை இவைகளை தரித்து மனோஹரராக இருப்பவரும், 4 கைகளுடன் பிரகாசிப்பவரும், அனந்தாஸனத்தில் வீற்றிருப்பவரும், விபவ வத்ஸரத்திற்கு அதிதேவதையாக இருப்பவருமான லக்ஷ்மீகாந்தனை (மஹாவிஷ்ணுவை) த்யானம் செய்யவேண்டும், (மேகம் போன்ற கருப்பு நிறம்) (1)

௯௫ அத சுக்லாபிமானி ஈச்வர த்யானம்.

ஜடிலம் ஈச்வர மஹோக்ஷ ஸுவாஹிதாங்கம் த்ரிநேத்ரம்

ஸர்பாபரண கூடாங்கம் வ்யாக்ரசர்மோத்தரீயம் ।

வ்ருஷவாஹனாரூடவாஹனம் சுக்லாங்கம் த்ரிசூலம்

பஞ்சவக்த்ரம் சூலபாணிம் நமாமி ॥

(சுக்லவர்ண:)

95. சுக்கில வருஷாபிமாநி மஹேசுவர த்யாநம்.

ஜடையை தரித்துக்கொண்டிருப்பவரும், ஸர்ப்ப ஆபரணத்தை ஆபரணமாக அங்கங்களில் தரிப்பவரும், 3 கண்களுடையவரும், சிரஸ்ஸில் சந்திரனை தரிப்பவரும், புலித்தோலை மேலாடையாக அணிந்திருப்பவரும், சிறந்த விருஷபத்தை வாஹநமாகக்கொண்டவரும், தேவர்களாலேயும், முனிவர்களாலேயும் வணங்கப்பட்டவரும், சூலத்தை கையில் வஹிப்பவரும், சுக்ல வருஷத்திற்கு அதிதேவதையுமான கிரீசனை (பரமேசுவரனை) வணங்குகின்றேன். (வெளுப்பு நிறம்)

௯௬. அத ப்ரமோதூதாப்தாதி கணேஶ த்யாநம்.

கல்யாணவக்த்ரம் ஸஹமேகதந்தம் —
ஜாஜ்வல்யம் ப்ரமோதூத க்ருதாதியாநம் |
ப்ரத்யூஹஸம்ஹாரகராகுவாஹம்
த்யாயேத் ஹ்ருதப்ஜே ஸததம் கணேஶம் ||

(ரக்தவர்ண:)

96. பிரமோதூத வருஷாபிமாநி கணேச த்யாநம்.

மங்களகரமான கஜமுகத்தையுடையவரும், ஒரு தந்தத்துடன் பிரகாசிப்பவரும், பிரமோதூத வருஷத்திற்கு அதிதேவதையாக இருப்பவரும், இடையூறுகளை நீக்குகின்றவரும், மூஞ்சூறு வாஹநத்திலிருப்பவருமான மஹா கணபதியை ஹ்ருதய கமலத்தில் எப்பொழுதும் த்யாநம் செய்யவேண்டும். (சிவப்பு நிறம்)

௯௭. அத ப்ரஜோத்பத்திவத்ஸராதி
கணபதி த்யாநம்.

ஓம் த்ரீம் ஹ்ருத்வக்த்ர கஜித்ராம் வ்ஸ்ருக்தீம்
வதாஹுஜாம் வஹுகுராவதம் வாஸிதம் |
ஹஸ்தேக்ஷுவாயோ நிதி வாணவாஹாம்
வந்தே ப்ரஜோத்பத்தி க்ருதாதியாநாம் ||

(ரக்தவர்ணா)

97. பிரஜாபதி வத்ஸராபிமாநி சக்தி கணபதி த்யாநம்.

யானையின் முகமுடையதும், சிறந்த தேவீஸ்வரூப முடையதும், 4 கைகளுடையதும், சந்திரகலையை சிரோ பூஷணமாகக் கொண்டதும், பக்தர்களின் விருப்பமாகிய ஸமுத்திரத்திற்கு பூர்ணசந்திரனைப்போலிருப்பதும், பிரஜோத்பத்தி என்று பெயருடையதுமான பிரஜோத்பத்தி வத்ஸராதி தேவதையை வணங்குகின்றேன். (சிவப்பு நிறம்) (1)

௯௮. ஆங்கீரஸாபிமாநி ஷண்முக த்யாநம்.

ஶக்த்யுஜ்வலைகபாஹும்
ஶஶாங்கரேகாங்கித ஶேகரோஜ்வலம் |
ஆங்கீரஸாநாமகம்
ஷண்முகவீரம் ஸுரேந்த்ர ஸேநாநீம் ||

(ரக்தவர்ண:)

98. ஆங்கீரஸ வருஷாபிமாநி ஷண்முக த்யாநம்.

ஒரு கையில் சக்தியாயுதத்தை தரித்திருப்பவரும், சந்திரகலையை சிரத்தில் தரிப்பவரும், மயிலின்மீது வீற்றிருப்பவரும், ஆங்கிரஸன் என்று பெயருடையவரும் (ஆங்கிரஸ வருஷத்திற்கு அதிதேவதையாக இருப்பவரும்) தேவேந்திரனுடைய ஸேநாபதியாக இருப்பவருமான ஷண்முகனை வணங்குகின்றேன், (1)

௯௯. [illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

([illegible])

99. ஸ்ரீமுக வருஷாபிமாநி வல்லீ தேவதா த்யாநம்.

சந்திரனைப்போன்ற முகமுடையவளும், அழகான கண்களையுடையவளும், கோழியை வாஹநமாகக்கொண்டவளும், எப்பொழுதும் குஹனால் ஆதரிக்கப்பட்டவளும், ஸ்ரீமுக வருஷத்திற்கு அதிதேவதையாக இருப்பவளும், ச்ரேயஸ்ஸைப் பெருக்குகின்றவளுமான ஸ்ரீவல்லீ தேவியை மனதில் த்யாநம் செய்கின்றேன். (பாடல வர்ணம்)

௱. [illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

([illegible])

100. பாவ வருஷாபிமாநி கௌரீ த்யாநம்.

மலைகளின் அரசனான ஹிமவானுடைய புதல்வியாக இருப்பவளும், விருஷப வாஹநத்தின் மீது வீற்றிருப்பவளும், சந்திரகலையை தரிப்பவளும், பரமேசுவரனுடைய ஸந்தோஷமாகிற ஸமுத்திரத்திற்கு பூர்ணசந்திரனைப்போலிருப்பு

வளும், பாவ வருஷத்திற்கு அதிதேவதையாக இருப்பவளு மான அந்த கௌரீதேவியை நான் வணங்குகின்றேன். (மரகதப்பச்சை நிறம்)

ஈக. ஃயெ யாவாஸிஶாநிப்ரா ஹ்ரீஜெவதா ய்யாநம்.

யாவலஂஜ்ஞாஉஹஜீஜெ
ப்ரஹ்ஷீஂ ப்ரஹ்மாதிவதிதாஂ ஹிஂ தாஂ ।
ஹஂஸவாஹ்வாரா ஈஶாஂ
ஶஂஹ உகிதாஹா ஶிவஸவஸாஹாஸ்ராஂ ॥
(கநகவணா)

101. யுவ வருஷாபிமாநி பிராம்ஹீ தேவதா த்யாநம்.

யுவ வருஷத்திற்கு அதிதேவதையாக இருப்பவளும், பிரஹ்மா முதலியவர்களாலே வணங்கப்பட்ட பாதங்களை யுடையவளும், சிறந்த அன்னப்பறவையின் மீது வீற்றிருப்ப வளும், பரமேசுவரனுடைய மனதைக்கவரும் அழகின் பெருமையையுடையவளுமான பிராம்ஹீ தேவியை நான் வணங்குகின்றேன். (தங்க நிறம்) (1)

ஈஉ. ஃயெ யாசுவாஸிஶாநிஶாஹெஶ்வரீ ய்யாநம்.

ஶாஹெஶ்வரீ ஹூஜிஜெ
விஜுவஸதா ஸதஂ வயாதவஂஜ்ஞா ஸா ।
வாஜ்ராவதஂஸவஸஹிதா
ஜெயோ வ்ரஷிவஜாஸா ஶஂஜொ ॥
(ஶுஹ்ரவணா)

102. தாது வருஷாபிமாநி மாஹேசுவரீ த்யாநம்.

36 தாது என்று பெயருடையவளும், (தாது வருஷத்திற்கு அபிமானி தேவதையாக இருப்பவளும்) சந்திரனை சிரோ

பூஷணமாகக்கொண்டவளும், எப்பொழுதும் பரமேசுவரனுக்கு ச்ரேயஸ்ஸின் (ச்ரேயஸ் — தர்மார்த்த காமங்கள்) அபிவிருத்தியையளிப்பவளுமான மாஹேசுவரீ தேவதையானவள், எப்பொழுதும் (என்னுடைய) ஹிருதய கமலத்தில் விளங்கிக்கொண்டிருக்கவேண்டும். (வெளுப்பு நிறம்) (1)

௱௩. அத ஈச்வராபிமாநி கௌமாரீ த்யாநம்.

கௌமாரீ ச்ரியமீடே
ஶுகாரூடாம் ஸதா ஸௌக்யகாரிணீம் ।
ஈச்வராபிமாநாம்
ஶங்கரதோஷதாம் ஸ்மரேத் ॥
(பாடலவர்ணா)

103. ஈசுவர வருஷாபிமாநி கௌமாரீ த்யாநம்.

செல்வத்தையளிப்பவளும், எப்பொழுதும் கிளியின் மீது வீற்றிருப்பவளும், ஈசுவர வருஷத்திற்கு அதிதேவதை என்று வழங்கப்படுகின்றவளும், தனது அழகினாலே பரமேசுவரனுக்கு ஸந்தோஷத்தையளிப்பவளுமான கௌமாரீ தேவியை நான் வணங்குகின்றேன். (பாடலவர்ணம்) (1)

௱௪. அத பஹுதாந்யாபிமாநி வைஷ்ணவீ த்யாநம்.

பஹுதாந்ய நாமதேயாம்
ஸததம் ஹ்ருதயே ந வைஷ்ணவீம் கலயே ।
ஶங்கசக்ராங்கஹஸ்தாம்
நதாபீஷ்டார்த்ததாயிகாம் நித்யம் ॥
(ஶ்யாமவர்ணா)

104. பஹுதாந்யாபிமாநி வைஷ்ணவீ த்யாநம்.

பரமேசுவரனுடைய இடது மடியில் வீற்றிருப்பவளும், வணங்கியவர்களுக்கு எப்பொழுதும் விரும்பியதையளிப்பவளும், பஹுதாந்ய வருஷத்திற்கு அபிமானி தேவதை என்று பெயர் படைத்தவளுமான வைஷ்ணவீ தேவியை எப்பொழுதும் மனதில் த்யாநம்செய்கின்றேன். (மேகநிறம்)

௱௫. அத ப்ரமாத்யபிமாநி வாராஹீ த்யாநம்.

வாராஹீம் ப்ரணமாம:

யஜ்ஞபதிஹர்ஷவார்தி பூர்ணசந்த்ராம் தாம் |

ஶ்ரேயோபிவ்ருத்திதாத்ரீம்

க்ருதநிஜநாம்நீம் ப்ரமாதீதி || (ஸ்ரக்வ்ருத்தம்)

105. பிரமாதி வருஷாபிமாநி வாராஹீ த்யாநம்.

பரமேசுவரனுடைய ஸந்தோஷக்கடலுக்கு பூர்ண சந்திரனைப்போலிருப்பவளும், ச்ரேயஸ்ஸை அபிவிருத்தி செய்பவளும், (ச்ரேயஸ்—தர்ம அர்த்தகாமங்கள்) பிரமாதி வருஷாதி தேவதை என்று பெயர் படைத்தவளுமான வாராஹீ தேவியை வணங்குவோமாக, (பச்சை நிறம்)

௱௬. அத விக்ரமாபிமாநிந்த்ராணீ த்யாநம்.

ஸஹஸ்ராக்ஷீம் ஶ்ரயாமோ

விக்ரமஸம்ஜ்ஞாம் வர்ஷாபிமாநிநீம் |

ஹாஸஸ்ய ஶக்ரகிரீடாம்

ஹஸ்தாஹிதவஜ்ராம் ஹயாம் ஶசீந்த்ரம் ||

(ககுபவ்ருத்தம்)

106.- விக்கிரம வருஷாபிமாநி இந்திராணீ த்யாநம்.

விக்கிரம வருஷத்திற்கு அபிமாநி தேவதையாக இருப்பவளும், விருஷப வாஹநத்தில் வீற்றிருப்பவளும், பிரகாச மான சந்திரனை கிரீடத்தில்தரிப்பவளும், பக்தர்கள் விரும்பு வதை அளிப்பவளுமான மாஹேந்திரீ தேவியை, பயங்கள் நீங்கும் பொருட்டு த்யாநம்செய்வோமாக. (தங்கநிறம்) (1)

ாஎ. அய விஷு(வ்ருஷ)வஸ்ஸராபிமாநி வாஉணா ய்யாநடி.

வாஉமாஸா வாவஹம்ஸிம்

அஹஸிஹவதெ வ்ருஷாவஸநாஉஸாம் ।
விஷு(வ்ருஷ)நாதீம் வஉாவதூரம்
லெதூகாஞுயும்வகாரிணீஉதிமஹ ॥
(கூஷவணா)

107. விஷு (விருஷ) வருஷாபிமாநி சாமுண்டா த்யாநம்.

அழகு நிறைந்த அங்கங்களையுடையவளும், விருஷப வாஹநத்தின்மீது வீற்றிருப்பவளும், விஷு வருஷத்திற்கு அபிமாநி தேவதையாக இருப்பவளும், தேவர்களாலே வணங்கப்பட்டவளும், அஸுர குலத்தையழிப்பதற்குக் காரணமாக இருப்பவளுமான சாமுண்டா தேவியை, நான் இங்கு எப்பொழுதும் வணங்குகின்றேன். (கருப்பு நிறம்)

ாஅ. அய சித்ரூஹாநு ஸம்வஸ்ஸராபிமாநு ரொமதெவதாய்யாநடி.

அரொமாஹூயவெஹம் சித்ரூஹாநும் ஸஜா உஷெ ।
தாஜுஉவாஸம் உகாடொஜூஉஹுகடி ॥
(ஈகூவணூ)

108. சித்திரபாநு வருஷாபிமாநி அரோகதேவதா த்யாநம்.

சிறந்த குதிரையின் மீது வீற்றிருப்பவரும், கிரீடத்திலே பிரகாசிக்கின்ற சிரத்தையுடைய அரோகன் என்று பெயருடையவருமான சித்திரபாநு வருஷாதி தேவதையை நான் எப்பொழுதும் ஸந்தோஷத்தின் பொருட்டு வணங்குகின்றேன். (சிவப்பு நிறம்) (1)

௱அ. அத ஸ்வபாநுவத்ஸராபிமாநி
ப்ராஜதேவதா த்யாநம்.

ஶ்ரேயோதம் விஶ்வஜந்தூநாம் ஸ்வபாநும் ப்ராஜஸஞ்ஜ்ஞகம் |
கஜாரூடம் ஶக்திகேடஹஸ்தம் நமாம்யஹம் ||

(ரக்தவர்ண:)

109. ஸ்வபாநு வத்ஸராபிமாநி பிராஜ தேவதா த்யாநம்.

மனிதர்களுக்கு ரோகமின்மையையளிப்பவரும், யானையின் மீது வீற்றிருப்பவரும், கத்தி, கேடயம், இவைகளை கைகளில் தரிப்பவரும், பிராஜன் என்ற பெயருடையவருமான ஸ்வபாநு வருஷாபிமாநி தேவதையை நான் வணங்குகின்றேன். (சிவப்பு நிறம்)

௱௯. அத தாரணாபிமாநி படதேவதா த்யாநம்.

ஸூர்யாநுகாமிநம் ஶூலம் ததாநம் படநாமகம் |
தாரணம் வத்ஸராதீஶம் ஸர்வகாமப்ரதம் பஜே ||

(ரக்தவர்ண:)

110. தாரண வருஷாபிமாநி படதேவதா த்யாநம்.

சூரியனைத்தொடர்ந்து செல்லுகின்றவரும், சூலத்தை ஏந்தி பிரகாசிக்கின்ற கையையுடையவரும், படரன் என்று

பெயருடையவருமான தாரண வருஷாதி தேவதையை ஹிருதயகமலத்தினுள் எப்பொழுதும் த்யாநம் செய்கின்றேன். (சிவப்பு நிறம்)

ககக. அய வாயிஷுவ(வ)வதூராஹிஜாநி வதஜூெவதா யூாநழ.

வதஜூ° வரஷஹாரசிஸ° வாயிஷுவாஹூயஜாஶ்ரயெ ।
ஶங்வசகூயார° ஷிவூவீதாம்வாஉஹ° ஹஜெ ॥
(ரகூவணஃ)

111. பார்த்திவ வத்ஸராபிமாநி பதங்க தேவதா த்யாநம்.

விருஷப வாஹநத்தில் வீற்றிருப்பவரும், பார்த்திவ வருஷத்திற்கு அதிதேவதையாக இருப்பவரும், சங்கம், சக்கரங்களை தரிப்பவரும், திவ்வியமான (சிறந்த) பீதாம்பரத்தை உடுத்தி இருப்பவருமான பதங்கன் என்ற தேவதையை நான் அடைக்கலமாக அடைகின்றேன். வணங்குகின்றேன். (சிவப்பு நிறம்)

ககஉ. அய வூயாஹிஜாநி ஸூணஃரசெவதா யூாநழ.

ஸூணஃர° கொகிஹாரசிஸ° வூயஸ°ஜூகஜாஶ்ரயெ।
வாஆ்ரவதஂஸ° ஜடியு° த்ரிணெத்ரா° ஶசிஹாஸஶர ழ ॥
((ரகூவணஃ)

112. விபப வருஷாபிமாநி ஸ்வர்ணர தேவதா த்யாநம்.

குயிலின் மீது வீற்றிருப்பவரும், விபய வருஷத்திற்கு அபிமாநி தேவதையாக இருப்பவரும், சந்திரனை சிரோபூஷணமாகக் கொண்டவரும், சடையை தரித்தவரும், 3 கண்களையுடையவரும், சூலத்தை தரித்து விளங்குகின்ற

வருமான ஸ்வரணரன் என்பவரை அடைக்கலமாக அடைகின்றேன். (சிவப்பு நிறம்) (1)

௧௧௩. 𑌅𑌥 𑌸𑌰𑍍𑌵𑌜𑌿𑌦𑍍𑌵𑌤𑍍𑌸𑌰𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌿
𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑍍𑌮𑌦𑍍𑌦𑍇𑌵𑌤𑌾 𑌧𑍍𑌯𑌾𑌨𑌮𑍍.

𑌸𑌰𑍍𑌵𑌜𑌿𑌤𑍍𑌸𑌂𑌜𑍍𑌞𑌕𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑍍𑌮𑌚𑍍𑌛𑍀𑌰𑍍𑌷𑌕𑌮𑍍 |
𑌶𑌾𑌰𑍍𑌙𑍍𑌗𑍀𑌂 𑌪𑌾𑌶𑌹𑌸𑍍𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰𑌾𑌰𑍂𑌢𑌂
𑌤𑍍𑌰𑌿𑌲𑍋𑌚𑌨𑌮𑍍 ||
(𑌰𑌕𑍍𑌤𑌵𑌰𑍍𑌣𑌃)

**113.** ஸர்வஜித்து வத்ஸராபிமாநி ஜியோதிஷ்மத் தேவதா த்யாநம்.

ஸர்வஜித்து வருஷத்திற்கு அதிதேவதை என்று பெயருடையவரும், விருப்பியதையளிப்பவரும், பிருசுண்டி என்னும் ஆயுதம், பாசம் இவைகளைக்கையில் தரிப்பவரும், புலியின்மீது வீற்றிருப்பவரும், 3 கண்களுடையவருமான ஜியோதிஷ்மான் என்னும் தேவதையை வணங்குகின்றேன். (சிவப்பு நிறம்)

௧௧௪. 𑌅𑌥 𑌸𑌰𑍍𑌵𑌧𑌾𑌰𑍍𑌯𑌭𑌿𑌮𑌾𑌨𑌿
𑌵𑌿𑌭𑌾𑌸𑌦𑍇𑌵𑌤𑌾 𑌧𑍍𑌯𑌾𑌨𑌮𑍍.

𑌵𑌿𑌭𑌾𑌸 𑌨𑌾𑌮𑌕𑌂 𑌭𑌾𑌨𑍁𑌂 𑌸𑌰𑍍𑌵𑌧𑌾𑌰𑌿 𑌕𑍃𑌤𑌾𑌶𑍍𑌰𑌯𑌮𑍍 |
𑌉𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌂 𑌸𑌦𑌾 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌸𑌪𑍍𑌤𑌾𑌶𑍍𑌵𑌰𑌥𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 ||
(𑌰𑌕𑍍𑌤𑌵𑌰𑍍𑌣𑌃)

**114.** ஸர்வதாரி வருஷாபிமாநி விபாஸ தேவதா த்யாநம்.

ஸர்வதாரி (வருஷத்திற்கு அபிமாநி தேவதை) என்று பெயருடையவரும், 7 குதிரைகள் பூட்டிய ரதத்தில்

வீற்றிருப்பவருமான விபாஸன் என்று பெயருடைய சூரியனை, விரும்பியதையடையும் பொருட்டு எப்பொழுதும் வணங்குகின்றேன். (சிவப்பு நிறம்)

௧௧௫. 𑌅𑌥 𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌸𑌂𑌵𑌤𑍍𑌸𑌰𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌿
𑌕𑌶𑍍𑌯𑌪𑌦𑍇𑌵𑌤𑌾 𑌧𑍍𑌯𑌾𑌨𑌮𑍍.

𑌶𑍋𑌣𑌂 𑌪𑌦𑍍𑌮𑌾𑌸𑌨𑌸𑍍𑌥𑌂 𑌤𑌂 𑌵𑌿𑌰𑍋𑌧𑍀𑌤𑌿 𑌕𑍃𑌤𑌾𑌹𑍍𑌵𑌯𑌮𑍍 ।
𑌕𑌶𑍍𑌯𑌪𑌂 𑌪𑌞𑍍𑌚𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌂 𑌦𑌶𑌹𑌸𑍍𑌤𑌂 𑌨𑌮𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥
(𑌰𑌕𑍍𑌤𑌵𑌰𑍍𑌣𑌃 । 𑌶𑌿𑌷𑍍𑌟𑌂 𑌸𑍂𑌰𑍍𑌯𑌵𑌤𑍍 ॥ 𑌨𑌿 ௫.)

115. விரோதி வத்ஸராபிமாநி கச்யப தேவதா த்யாநம்.

மஹா மேரு மலையினுச்சியிலிருப்பவரும், விரோதி வருஷத்திற்கு அதிதேவதை என்று பெயருடையவரும், 5 முகங்களுடையவரும், 10 கைகளுடையவருமான காசியபன் என்ற தேவதையை நான் வணங்குகின்றேன். (சிவப்பு நிறம். மற்றது சூரியனைப்போன்றதாம். நிதி 5)

௧௧௬. 𑌅𑌥 𑌵𑌿𑌕𑍃𑌤𑍍𑌯𑌭𑌿𑌮𑌾𑌨𑌿 𑌰𑌵𑌿𑌦𑍇𑌵𑌤𑌾 𑌧𑍍𑌯𑌾𑌨𑌮𑍍

𑌰𑌵𑌿𑌂 𑌵𑌿𑌕𑍃𑌤𑌿𑌨𑌾𑌮𑌾𑌨𑌂 𑌤𑍍𑌰𑌿𑌶𑍀𑌰𑍍𑌷𑌂 𑌷𑌡𑍍𑌭𑍁𑌜𑌂 𑌭𑌜𑍇 ।
𑌪𑌨𑍍𑌨𑌗𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌸𑌨𑌾𑌰𑍂𑌢𑌂 𑌚𑌾𑌰𑍁 𑌪𑍀𑌤𑌾𑌮𑍍𑌬𑌰𑌾𑌵𑍃𑌤𑌮𑍍 ॥
(𑌰𑌕𑍍𑌤𑌵𑌰𑍍𑌣𑌃 । 𑌶𑌿𑌷𑍍𑌟𑌂 𑌸𑍂𑌰𑍍𑌯𑌵𑌤𑍍 ॥ 𑌨𑌿 ௫.)

116. விக்ருதி வருஷாபிமாநி ரவி தேவதா த்யாநம்.

3 தலைகளுடையவரும், 6 கைகளுடையவரும், ஸர்ப ராஜன் மீது வீற்றிருப்பவரும், அழகான பீதாம்பரத்தை உடுத்தி இருப்பவரும், விக்ருதி வருஷத்திற்கு அபிமாநி தேவதை என்று பெயர் பெற்றவருமான ரவி என்ற (சூரியனை) ஸேவிக்கின்றேன். (சிவப்பு நிறம். மற்றவை சூரியனைப்போன்றவைகளாம். நிதி 5.) (1)

௧௧௭. அத² க²ராபி⁴மானி ஸூர்யதே³வதா த்⁴யானம்.

க²ரவாஹம் ஸரோஜாக்ஷம் நீலாம்ப³ரஸமாவ்ருதம் |
ஸூர்யாபி⁴மானம் வந்தே³ சதுர்வக்த்ராஷ்டபா³ஹுகம் ||
(ரக்தவர்ண: | ஶிஷ்டம் ஸூர்யவத் || நி. ௫,)

117. கர வருஷாபிமானி ஸூரிய தேவதா த்யானம்.

சிறந்த கழுதையின் மீது வீற்றிருப்பவரும், நீலநிறமான ஆடையை தரித்திருப்பவரும், 4 முகங்களும், 8 கைகளும் உடையவரும் கரவருஷத்திற்கு அபிமானி தேவதையாக இருப்பவருமான ஸூரியனை வணங்குகின்றேன். (சிவப்பு நிறம். மற்றது ஸூரியனைப்போன்றதாகும். நி. 5) (1)

௧௧௮. அத² நந்த³நாபி⁴மானி பா⁴னுதே³வதா த்⁴யானம்.

பா⁴னும் நந்த³நநாமானம் பா⁴ஸா சாருவிபூ⁴ஷிதம் |
ஸிம்ஹாரூட⁴ம் பஞ்சவக்த்ரம் த³ஶபா³ஹும் ப⁴ஜே ||
(ரக்தவர்ண: | ஶிஷ்டம் ஸூர்யவத் || நி. ௫)

118. நந்தந வருஷாபிமானி பானு தேவதா த்யானம்.

நந்தந வருஷத்திற்கு அபிமானி தேவதையாக இருப்பவரும், ஒளியினாலே அழகுறச்செய்யப்பட்டவரும், சிங்கத்தை வாஹநமாகக்கொண்டவரும், 5 முகங்களுடையவரும், 10 கைகளையுடையவருமான பானு என்னும் ஸூரியனை ஸேவிக்கின்றேன். (சிவப்பு நிறம். மற்றது ஸூரியனைப்போன்றதாகும். நி 5.) (1)

௧௧௯. அத² விஜயாபி⁴மானி ரவிதே³வதா த்⁴யானம்.

ஷண்முக²ம் த்³வாத³ஶபு⁴ஜம் வ்யாக்⁴ரவாஹநஸம்ஸ்தி²தம் |
வ்யாக்⁴ரசர்மாம்ப³ரத⁴ரம் வந்தே³ விஜயஸம்ஜ்ஞகம் ||
(ரக்தவர்ண: | ஶிஷ்டம் ஸூர்யவத் நி. ௫.)

119. விஜய வருஷாபிமாநி ககதேவதா த்யாநம்.

6 முகங்களுடையவரும், 12 கைகளையுடையவரும், புலி வாஹநத்தின்மீது வீற்றிருப்பவரும், புலித்தோல் ஆடையை அணிந்திருப்பவரும், விஜய வருஷத்திற்கு அபிமாநி தேவதை என்று பெயர் பெற்றவருமான (ககன் என்ற ஸூரியனை) வணங்குகின்றேன். (சிவப்பு நிறம். மற்ற லக்ஷணங்கள் ஸூரியனைப் போன்றதாகும். நி. 5)

கஉ0. அத ஜயாபிமாநி வர்ஷதேவதா த்யாநம்.

வர்ஷாணாம் ஜயநாமாநம் வராபம் ரக்தவஸ்த்ரகை: |
ஸம்வத்ஸராங்கிதகராப்ஜம் தம் ஹ்ருதி ஸமாஶ்ரயே ||

(ரக்தவர்ண:)

120. ஜய வருஷாபிமாநி பூஷ தேவதா த்யாநம்

ஜய வருஷத்திற்கு அதிதேவதை என்று பெயருடையவரும், பக்தர்களின் தொகுதிக்கு வரங்களையளிப்பவரும், சங்கம் சக்கரங்களை இரு கைகளிலும் தரிப்பவருமான பூஷா என்பவரை ஹிருதயத்தில் த்யானம் செய்கின்றேன். (சிவப்பு நிறம்) (1)

கஉக. அத மந்மதாபிமாநி ஹிரண்யகர்பதேவதா த்யாநம்.

ஹம்ஸவாஹநாரூடம் வீணாவாதிதஹஸ்தகம் |
ஹிரண்யகர்பம் வந்தேஹம் மந்மதாப்தாதிதேவதம் ||

(ரக்தவர்ண:)

121. மன்மத வருஷாபிமாநி ஹிரண்யகர்ப தேவதா த்யாநம்.

ராஜஹம்ஸத்தின்மீது வீற்றிருப்பவரும், வீணையினாலே

அலங்கரிக்கப்பட்டிருக்கின்ற கைகளையுடையவரும், மன்மத வருஷத்திற்கு அபிமாநி தேவதையாக இருப்பவரும், நான் விரும்புகின்றவைகளையளிப்பவருமான ஹிரண்யகர்பனை நான் வணங்குகின்றேன். (சிவப்பு நிறம்) (1)

௧௨௨. அத² து³ர்முக²வர்ஷாபி⁴மாநி ஆதி³த்யதே³வதா த்⁴யாநம்.

கபிஸ்த²ம் து³ர்முக²வாஸ்யாநம் ச ந்ருப⁴யகாரணாவஹிதம் ।
விவ்ருதாஸ்யம் ஜக³த்³பீ⁴திதா³யகம் ஸம்ஶ்ரயே ஸதா³ ॥
(ரக்தவர்ண: । ஶிஷ்டம் ஸூர்யவத் ॥ நிம் ௫.)

122. துர்முக வருஷாபிமாநி ஆதித்திய தேவதா த்யாநம்.

கோபங்கொண்ட குரங்கின்மீது வீற்றிருப்பவரும், வாயைத் திறந்துகொண்டிருப்பவரும், உலகத்திற்கு பயத்தையுண்டுபண்ணுகின்றவரும், துர்முக வத்ஸரத்திற்கு அதிதேவதையாக இருப்பவருமான மரீசியை ஸந்தோஷத்துடன் வணங்குகின்றேன். (சிவப்பு நிறம். மற்றவை ஸூரியனைப்போன்றதாகும். நி. 5)

௧௨௩. அத² ஹேமலம்பி³வர்ஷாபி⁴மாநி ஆதி³த்யதே³வதா த்⁴யாநம்.

ஆதி³த்யம் தேஜஸஸ்ஸ்தா²நம் ஹேமலம்பி³க்ருதாஹ்வயம் ।
ஸப்தஸப்திஸமாரூட⁴ம் ஜக³தாம் நேத்ரமாஶ்ரயே ॥
(ரக்தவர்ண: । ஶிஷ்டம் ஸூர்யவத் ॥ நிம் ௫.)

123. ஹேமலம்பி வருஷாபிமாநி ஆதித்திய தேவதா த்யாநம்.

ஒளியின் இருப்பிடமானவரும், ஹேமலம்பி வருஷத்திற்கு அபிமாநி தேவதை என்று பெயருடையவரும், ஸப்தாசுவத்தின்மீது வீற்றிருப்பவரும் (7 குதிரைகள்

பூட்டிய ரதத்திலிருப்பவரும்) உலகத்திற்குக் கண்ணாக இருப்பவரும் அல்லது உலகத்தை இயங்க வைப்பவருமான (உலகத்திற்குப் பார்க்கும் சக்தியை அளிப்பவர், அல்லது ஸகல ஜீவராசிகளுக்கும் பிராணபலத்தையளித்து உலகத்தை செயல்படச்செய்பவர் என்று பொருள்) ஆதித்திய தேவதையை வணங்குகின்றேன். (சிவப்பு நிறம் மற்ற லக்ஷணங்கள் ஸூரியனைப்போன்றதாகும். நி 5.)

கஉச. அத விளம்(லம்)பிநாமாபிமாநி ஸவித்ருதேவதா த்யாநம்

வி(ல)ளம்பிஸம்ஜ்ஞா உநஸா ஸவிதாரம் ஸ்மராம்யஹம் ।
சாபபாணதரம் தோஷ்ப்யாம் தரஜவாசவாஹநம் ॥
(ரக்தவர்ண:)

124. வில(மல)ம்பி வருஷாபிமாநி ஸவித்ரு தேவதா த்யாநம்.

விலம்பி வருஷாபிமாநி தேவதை என்று பெயருடையவரும், இரு கைகளினாலேயும் வில், அம்புகளை தரித்தவரும் சிறந்த குதிரையின் மீது வீற்றிருப்பவருமான ஸவிதாவை மனதினால் நினைக்கின்றேன். (சிவப்பு நிறம்) (1)

கஉரு. அத விகாரிநாமாபிமாந்யர்க்கதேவதா த்யாநம்.

அர்க்கம் விகாரிநாமாநம் அர்க்கரூபம் க்ரூரவாயுதம் ।
க்ரூரஸ்வபாவஸம்யுக்தம் மநஸ்த்ரா நமாம்யஹம் ॥
(ரக்தவர்ண:)

125. விகாரி வருஷாபிமாநி அருக்க தேவதா தியாநம்.

விகாரி வருஷத்திற்கு அபிமாநி தேவதை என்று பெயருடையவரும், கொடூரமான ஸ்வபாவமுடையவரும்,

ரம்பத்தை ஆயுதமாகக்கொண்டவரும், பயங்கரமான புலியின்மீது வீற்றிருப்பவரும், ஒரே கண்ணையுடையவருமான அருக்கனை நான் வணங்குகின்றேன். (சிவப்பு நிறம்)

கஉசு அத2 ஶாவ௯்ய௯்லிமாநி ஹாஸ்கர தெ3வதா

த்4யாநம்.

ஹாஸ்கரம் ஶாவ௯ரீஸஂஜ்ஞம் ஹாஸா வ௯்ரித திஜ்ருமுவம் |

வக்ராஜ்ஞஞ்கரம் வநெ ஹாஸ்வஜ்ரயஸமாஸ்ரிதம் ||

(ரக்தவணு:)

126. சார்வரீ அபிமாநி பாஸ்கர தேவதையின் த்யாநம்.

சார்வரி என்ற பெயருடையவரும், தனது ஒளியினாலே திசைகளின் முகங்களை (கோடிகளை) நிறப்புகின்றவரும், சக்கராயுதத்தினாலே சிறந்து விளங்குகின்ற கையையுடையவரும், பிரகாசமான ரதத்தில் வீற்றிருப்பவருமான பாஸ்கரனை வணங்குகின்றேன். (சிவப்பு நிறம்)

கஉஎ. அத2 ப்லவாஹிமாநக்3நி தெ3வதா த்4யாநம்.

அக்3நிம் நமாமி விததஜ்வாலாமாலம் தமோபஹம் |

அஜாரூட4ம் வதுர்ஹஸ்தம் ஷிரீஷம் ப்லவஸஂஜ்ஞகம் ||

(ரக்தவணு: | ஶிஷ்டமக்3நிவத் | நிம் ச.)

127. பிலவ வருஷாபிமாநி அக்கினி

தேவதையின் த்யாநம்.

விரிந்த தீச்சுடரை மாலையாகக் கொண்டவரும், இருளை நீக்குகின்றவரும், செம்மறியாட்டின்மீது வீற்றிருப்பவரும், 4 கைகளையுடையவரும், 2 தலைகளையுடையவரும்,

பிலவ வருஷத்திற்கு அதிதேவதையாக இருப்பவருமான அக்கினிதேவனை வணங்குகின்றேன் (சிவப்பு நிறம். மற்ற லக்ஷணங்கள் அக்கினியைப்போன்றதாகும். நி. 4)

கஉஅ. அத ஶுபக்ருதபிமாநி ஜாதவேதோ
தேவதா த்யாநம்.

ஜாதவேதவஸீதேஹம் ஶுபக்ருந்நாமகம் ஸதா ।
ஶூலதோமிகா ஹஸ்தம் ஸுவேஷம் ஶுபம்.

(ரத்நவணம்:)

128. சுபகிருத்து வருஷாபிமாநி ஜாதவேதோ
தேவதையின் த்யாநம்.

சுபகிருத்து வருஷத்திற்கு அபிமாநி தேவதை என்று பெயர் படைத்தவரும், எப்பொழுதும் ஊஞ்சலில் உட்கார்ந்துகொண்டிருப்பவரும், கத்தி, கேடயம் இவைகளை ஏந்தியிருப்பவரும், மங்களகரமான ஸ்வபாவமுடைய வருமான ஜாதவேதன் என்னும் தேவதையை, நான் வணங்குகின்றேன். (சிவப்பு நிறம்) (1)

கஉகூ அத ஶோபக்ருதபிமாநி ஸஹௌஜோ
தேவதா த்யாநம்

ஸஹௌஜஸம் ஶோபக்ருதம் ஸுவர்ணாதிஷ்டிதாஶ்ரயே ।
ஶிபிகாவாஹநாரூடம் வாஞ்சிதார்த்தப்ரதாயிநம் ॥

(ரத்நவணம்:)

129. சோபகிருத்து வருஷாபிமாநி ஸஹௌஜஸ்
தேவதையின் த்யாநம்.

சோபகிருத்து வருஷத்திற்கு அபிமாநி தேவதையாக இருப்பவரும், மனிதர்கள் விரும்பியதையளிப்பவரும்,

பல்லக்கு வாஹநத்தில் வீற்றிருப்பவரும், இரு கைகளிலும் இரண்டு சாமரங்களை வைத்துக்கொண்டிருப்பவருமான ஸஹௌஜன் என்ற தேவனை வணங்குகின்றேன். (சிவப்பு நிறம்)

௧௩0. அத க்ரோதிவர்ஷாபிமாநீ அஜராப்ரபு தேவதா த்யாநம்.

அஜராப்ரபுமீசேசம் க்ரோதிநி க்ருதநாமகம் ।
கோரதாரூடஸத்ருசம் குந்தோஜ்வலகராம்புஜம் ॥

(ரக்தவர்ண:)

130. குரோதி வருஷாபிமாநி அஜராபிரபு தேவதா த்யாநம்.

குரோதி வத்ஸராபிமானி தேவதை என்ற பெயருடையவரும், எப்பொழுதும் கோரதத்தில் (காளை மாடுகள் பூட்டிய ரதத்தில்) வீற்றிருப்பவரும், குந்தம் என்ற ஆயுதம் தாங்கி பிரகாசிக்கின்ற கையையுடையவருமான அஜராபிரபுவை வணங்குகின்றேன். (சிவப்பு நிறம்)

௧௩௧. அத விஶ்வாவஸு ஸம்வத்ஸராபிமாநி வைஶ்வாநரதேவதா த்யாநம்.

வைஶ்வாநரம் பஜே நித்யம் விஶ்வாவஸு க்ருதாஹ்வயம் ।
நரவாஹநஸாரூடம் வஜ்ரவேத்ரதரம் ஶுபம் ॥

(ரக்தவர்ண:)

131. விசுவாவஸு வருஷாபிமாநி வைசுவாநர தேவதையின் த்யாநம்.

விசுவாவஸு வருஷத்திற்கு அபிமானி தேவதையாக இருப்பவரும், நர வாஹநத்தில் (மனிதர்களாலே தூக்கப்

டுகின்ற பல்லக்கில்) ஏறிக்கொண்டிருப்பவரும், சக்தி, கேடயம் இவைகளை ஏந்தியிருப்பவரும், சுபங்களையளிப்பவருமான வைசுவாநரன் என்ற தேவதையை தினந்தோறும் வணங்குகின்றேன். (சிவப்பு நிறம்)

௧௩௨. அத பராபவாபிமாநி நரியாபஸ
தேவதா த்யாநம்.

பராபவாஹ்வயம் வந்தே நரியாபஸஸம்ஜ்ஞிதம் ।
உத்துங்கதுரகாரூடம் பரஸ்வுஜ்ஜ்வலபாணிகம் ॥
(ரக்தவர்ண:)

132. பராபவ வருஷாபிமாநி நரியாபஸ
தேவதையின் த்யாநம்.

உயர்ந்து திகழுகின்ற ஒளியையுடையவரும், மிகவும் உயரமான குதிரையின்மீது ஏறி வீற்றிருப்பவரும், மழுவை ஏந்தி திகழுகின்ற கையையுடையவரும், பராபவ வருஷத்திற்கு அபிமாநி தேவதையாக இருப்பவருமான நரியாபஸன் என்னும் தேவதையை வணங்குகின்றேன். (சிவப்பு நிறம்)

௧௩௩. அத ப்லவங்காபிமாநி பங்க்திராதஸ்
தேவதா த்யாநம்.

பங்க்திராதஸஸம்ஜ்ஞம் ப்லவங்காதிவிராஜிதம் ।
ஶ்வேதாஶ்வவராரூடம் சார்ங்கபாணதரம் ஸதா ॥
(ரக்தவர்ண:)

133. பிலவங்க வருஷாபிமாநி பங்க்திராதஸ்
தேவதையின் த்யாநம்.

சிறந்த வெண்குதிரையின்மீது ஏறிக்கொண்டிருப்பவரும், எப்பொழுதும் சார்ங்கம் (வில்) அம்பு இவைகளை

தரித்துக்கொண்டிருப்பவரும், பிலவங்க வருஷத்திற்கு அதிதேவதை என்று பிரஸித்திபெற்றவரும், பங்க்திராதஸன் என்று பெயருடையவருமான அக்கினி தேவனை வணங்குகின்றேன். (சிவப்பு நிறம்) (1)

கஙச. அத கீலகாப்தாதி விஸர்ப்பிதேவதா த்யாநம்.

விஸர்ப்பிணம் ஹஸ்தவஹம் கீலகாப்தாதிபம் பஜே |
உத்துங்கநாகாரூடம் ஶூலோத்யத்கராம்புஜம் ||

(ரக்தவர்ண:)

134. கீலக வருஷாபிமாநி விஸர்ப்பி தேவதா த்யாநம்.

உயரமான யானையின்மேலே ஏறிக்கொண்டிருப்பவரும், சூலாயுதத்தை ஏந்தித் திகழுகின்ற கையையுடையவரும், கீலக வருஷத்திற்கு அதிதேவதை என்று பெயர் பெற்றவரும், விஸர்பி என்று பெயருடையவருமான அக்கினி தேவனை சரணமடைகின்றேன். (சிவப்பு நிறம்)

கஙரு. அத ஸௌம்யாப்தாதி மத்ஸ்யதேவதா த்யாநம்.

மத்ஸ்யரூபம் ஹரிம் வந்தே ப்ரியதம் ஸௌம்ய

ஸம்ஜ்ஞகம் |

ஶங்கசக்ராம்புஜகரம் பக்தாபீஷ்டப்ரதாயகம் ||

(ஶ்வேதவர்ண:)

135. ஸௌமிய வருஷாபிமாநி மத்ஸிய தேவதா த்யாநம்.

ஸௌமிய வருஷத்திற்கு அபிமாநி தேவதையாக இருப்பவரும், சங்கு, சக்கரம் இவைகளை ஏந்தித்திகழுகின்ற கைகளையுடையவரும், பக்தர்கள் விரும்புவதை அளிப்பவரும், மத்ஸிய வடிவமுடையவருமான மஹாவிஷ்ணுவைத் வதலையினாலே ணங்குகின்றேன். (வெளுப்பு நிறம்) (1)

### ௧௩௬. அத ஸாதாரணாபிமாநி கூர்மதேவதா த்யாநம்.

கூர்மாக்ருதிம் ஹரிம் வந்தே மந்தராசலதாரிணம் ।
கௌமோதகீ ஶார்ங்கஹஸ்தம் ஸாதாரண க்ருதாஶ்ரயம் ॥
(ஸுவர்ணவர்ண:)

### 136. ஸாதாரண வருஷாபிமாநி கூர்ம தேவதையின் த்யாநம்.

மந்தரமலையை தரித்தவரும், கௌமோதகீ என்னும் கதையையும், சார்ங்கம் என்னும் வில்லையும் கைகளில் தரிப்பவரும், ஸாதாரண வருஷத்திற்கு அபிமானிதேவதையாக இருப்பவரும், கூர்ம வடிவமுடையவருமான மஹாவிஷ்ணுவை நான் வணங்குகின்றேன். (ஸுவர்ணவர்ணம்)

### ௧௩௭. அத விரோதிக்ருதப்தாபிமாநி வராஹதேவதா த்யாநம்.

தம்ஷ்ட்ராக்ரோத்த்ருதபூபாகம் வராபயகரம் ஹரிம் ।
வராஹரூபம் தேவம் (வந்தே) விரோதிக்ருதிதி ஶ்ருதம் ॥
(ஶ்யாமவர்ண:)

### 137. விரோதிகிருத்து வருஷாபிமாநி வராஹதேவதையின் த்யாநம்.

தெத்திப்பற்களில் ஏறிநிற்கின்ற பூபாகத்தையுடையவரும், வரதஹஸ்தம், அப்யஹஸ்தங்களை தரிப்பவரும், விரோதிகிருத்து வருஷத்திற்கு அதிதேவதையாக இருப்பவரும், பன்றி வடிவமுடையவருமான மஹாவிஷ்ணுவை வணங்குகின்றேன். (சியாமவர்ணம், சியாமம்-நீலம் அல்லது பச்சை)

௧௩௮ அத பரீதாவிவர்ஷாபிமாநி ந்ருஸிம்ஹ தேவதா த்யாநம்.

ந்ருகேஸரிதநும் வந்தே ஹரிம் ஸம்ஹாரிணம் ।
ப்ரஹ்லாதஹர்ஷதாதாரம் பரீதாவி க்ருதாஹ்வயம் ॥
(ச்வேதவர்ண:)

138. பரீதாவி வருஷாபிமாநி ந்ருஸிம்ஹ தேவதையின் த்யாநம்.

ந்ருஸிம்ஹ வடிவமுடையவரும், தூணை பிளந்து கொண்டு வந்தவரும், பிரஹ்லாதனுக்கு ஸந்தோஷத்தை யளித்தவரும், பரீதாவி வருஷத்திற்கு அதிதேவதை என்று பெயர்பெற்றவருமான மஹாவிஷ்ணுவை, வணங்குகின்றேன். (வெளுப்பு நிறம்) (1)

௧௩௯. அத ப்ரமாதீசாபிமாநி வாமநதேவதா த்யாநம்.

சத்ரஜ்வலகரம் வந்தே ஹரிம் வாமநரூபிணம் ।
பலிப்ரதாவநகரம் ப்ரமாதீச க்ருதாஹ்வயம் ॥
(ச்யாமவர்ண: தூர்வாதளவத் ॥)

139. பிரமாதீச வருஷாபிமாநி வாமன தேவதையின் த்யாநம்.

குடையுடன் விளங்குகின்ற கையையுடையவரும், குட்டையான வடிவமுடையவரும், மஹாபலியை தபிக்கும்படி செய்தவரும், பிரமாதீச வருஷத்திற்கு அபிமாநிதேவதை என்று பெயர்பெற்றவருமான வாமந அவதாரம் செய்த மஹாவிஷ்ணுவை வணங்குகின்றேன். (அருகம்புல்லின் இலைகள்போன்ற பச்சை நிறம்)

௧௪௰. அத ஆநந்தாபிமாநி ஸ்ரீராமதேவதா த்யாநம்.

ஜகதாநந்தஜநகம் ஸீதாவக்ஷஸ்தலாஶ்ரயம் ।
ராமமாநந்தநாமாநம் த்யாயேத்கோதண்டஶரதாரிணம் ॥

(ஶ்யாமவர்ண:)

140. ஆநந்த வருஷாபிமாநி
ஸ்ரீ ராம தேவதையின் த்யாநம்.

உலகத்திற்கு ஆநந்தத்தையளிப்பவரும், ஸீதா தேவியின் மணாளராக இருப்பவரும், ஆநந்த வருஷத்திற்கு அபிமாநி தேவதை என்று பெயருடையவரும், வில், அம்பு, இவைகளை தரித்துக்கொண்டிருப்பவருமான ஸ்ரீராமசந்திர மூர்த்தியை தஞ்சமடைகின்றேன். (பச்சை நிறம்) (1)

௧௪௧. அத ராக்ஷஸாபிமாநி ஸ்ரீபரஶுராம
தேவதா த்யாநம்.

குடாரவ்யக்ரஹஸ்தம் ஜடாமண்டலமண்டிதம் ।
பார்கவம் ராமமாஶ்ரயே ராக்ஷஸாபிமதேவதம் ॥

(காஞ்சநவர்ண:)

141. ராக்ஷஸ வருஷாபிமாநி ஸ்ரீபரசுராம
தேவதையின் த்யாநம்

கோடாரியை ஏந்தி எழிலுற்ற கையையுடையவரும், ஜடாமண்டலத்தை தரித்தவரும், ராக்ஷஸ வருஷத்திற்கு அபிமாநி தேவதை என்ற பெயருடையவரும், பிருகு முனிவரின் புதல்வருமான பரசுராமனை சீக்ரமாக வணங்குகின்றேன். (ஸ்வர்ண நிறம்)

௧௪௨. அத நலாபிமானி பலராமதேவதா த்யானம்

ஹலீஶோத்பாஸிகராம்போஜம் நீலாம்பரஸமாவ்ருதம் |
பலராமாக்யம் வந்தே நலாப்தஸ்ய திவாநிஶம் ||
(ஶுப்ரவர்ண:)

142. நள வருஷாபிமாநி பலராம தேவதையின் தியாநம்.

கலப்பையை ஏந்தி விளங்குகின்ற கையையுடையவரும், நீலநிறமான ஆடையையணிந்திருப்பவரும், நள வருஷத்திற்கு அபிமாநி தேவதையாக இருப்பவருமான பலராமனை, அல்லும் பகலும் வணங்குகின்றேன். (வெளுப்பு நிறம்)

௧௪௩ அத பிங்கலாபிமானி க்ருஷ்ணதேவதா த்யானம்

க்ருஷ்ணம் பிஞ்சதராநநம் பாஸிதவபுஷம் ஜ்ஞாநாக்ருதிம் |
நவநீதோஜ்ஜ்வலகரம் ந்ருத்யந்தம் ஹ்ருதி ஸம்ஶ்ரயே ||
(நீலவர்ண:)

143. பிங்கல வருஷாபிமாநி கிருஷ்ண தேவதா தியாநம்.

பிங்கல வருஷாபிமாநி தேவதையாக இருப்பவரும், மயில் தோகையை அணிந்து பிரகாசிக்கின்ற திருமேனியை உடையவரும், வெண்ணையை ஏந்தி ஒளியுடன் விளங்குகின்ற கையையுடையவரும், (ஸந்தோஷத்தால்) கூத்தாடுகின்றவருமான கிருஷ்ணனை ஹிருதயகமலத்தில் சரணம் அடைகின்றேன். (நீல நிறம்) (1)

௧௪௪. அத காலயுக்த்யபிமானி கல்கிதேவதா த்யானம்

ஶ்வேதாஶ்வநிக்ருதவேஷம் காலயுக்தி க்ருதாஹ்வயம் |
ஆஶ்ரயே கல்கிநாமானம் (ஶ்வேதாஶ்வம்) தநுர்பாணதரம் ஸதா ||
(ஶ்வேதவர்ண:)

## 144. காலயுக்தி வருஷாபிமாநி கல்கி தேவதையின் த்யாநம்.

மிலேச்சர்களின் தொகுதியினிடத்தில் பகைமையுடையவரும், (மிலேச்சர்கள் – துருஷ்கர்கள், யவனர்கள் முதலியவர்கள்) காலயுக்தி வருஷத்திற்கு அதிதேவதையாக இருப்பவரும், (குதிரையின்மீது) வீற்றிருப்பவரும், வில் அம்பு இவைகளை தரிப்பவருமான கல்கி மூர்த்தியை எப்பொழுதும் சரணமடைகின்றேன். (வெளுப்பு நிறம்)

௧௪௫. அத² காலயுக்த்யப்³தா³தி⁴பதி கல்கிதே³வதா த்⁴யாநம்.

காலாயுக்தநாஶநம் கல்கரூபிணம் ஹயே ।
நக்³நம் விஶ்வேவவர்ஷம் ஶ்ரீவத்ஸலக்ஷணோத்தமம் ॥
(வாயுபுராணம்)

## 145 ஸித்தார்த்தி வருஷாபிமாநி புத்த தேவதையின் த்யாநம்

ஸித்தார்த்தி வருஷத்திற்கு அபிமாநி தேவதை என்ற பெயருடையவரும், நக்நனாக (ஆடையணியாதவனாக) இருப்பவரும், விகாரமான உருவமுடையவரும், ஸ்திரீகளிடத்தில் ஆண்மையை அடக்குவதற்குக் காரணமாக இருப்பவருமான புத்த வடிவமுடைய தேவனை நான் வணங்குகின்றேன். (வெளுப்புக் கலந்த சிவப்பு நிறம்) (1)

௧௪௬. அத² ஸித்³தா⁴ர்த்²த்யப்³தா³தி⁴பதி பு³த்³த⁴தே³வதா த்⁴யாநம்.

பு³த்³த⁴ம் விவஸ்த்ரம் வந்தே³ ஸித்³தா⁴ர்த்²தி தக்ருதஸஞ்ஜ்ஞகம் ।
த்⁴யாயாமி தே³வம் ஸ்த்ரீணாம் தம் ஸத்த்வாஸ்தம்ப⁴நதத்பரம் ॥
(நீலமதம்)

## 146. ரௌத்ரி வருஷாபிமாநி துர்காதேவியின் த்யாநம்.

ரௌத்திரி வருஷத்திற்கு அதிதேவதை என்ற பெயர் உடையவளும், அஸுரர்களை வதைப்பவளும், ரக்தத்தைக் குடிப்பதில் விருப்பமுடையவளுமான துர்காதேவியை ஆபத்துக்களை உதறி எரியும்பொருட்டு த்யாநம் செய்கின்றேன். (நீலநிறம்) (1)

கசஎ. கூய உ ாஉ-ருத்ஹ ஷிஉா நி யாத ாயா நஷெவதா

யூா நடி.

யாத ாயா நம் வகூஉ ாவம் வெகாக்ஷம் உாரு ணா
கூஜ திம் ।
யூாயாஉஹ நிஷ ஶாஞ்ஹயஂ உ ாஉ-ருதீதி கூஜ தாஹ்வயடி ॥
(நீலவணாஃ)

## 147. துர்மதி வருஷாபிமாநி யாதுதாந தேவதையின் த்யாநம்.

கோணலான முகமுடையவரும், ஒரே கண்ணுடைய வரும், பயங்கரமான வடிவமுடையவ்ரும், துர்மதி வருஷத் திற்கு அபிமாநி தேவதை என்று பெயருடையவருமான யாதுதாநன் என்னும் தேவதையை, துன்பங்கள் நீங்கும் பொருட்டு த்யாநம் செய்கின்றேன். (நீலநிறம்) (1)

கசஅ. கூய உ ாநு ாஹூஷிஉா நி ஹெஶாவஷெவதா

யூா நடி.

உ ாநு ாஹீதி கூஜ தாஹ்வா நம் ஸஉஹூஸிவ ாஹெஶாவம் ।
ஹெஶாவம் ஹ்வஶாரு-ஜம் ஷிஜம்வாஉ ாவாஶுயெ ॥
(ஶூாஉவணாஃ)

148. துந்துபி வருஷாபிமாநி பைரவ
தேவதையின் த்யாநம்.

துந்துபி வருஷத்திற்கு அபிமானி தேவதை என்று பெயர் பெற்றவரும், எல்லாப் பகைவர்களுக்கும் பயத்தை யுண்டுபண்ணுபவரும், சிறந்த நாயின்மீது ஏறிக்கொண்டிருப்பவரும், ஆடையின்றி திகம்பரனாக இருப்பவருமான பைரவமூர்த்தியை தஞ்சமடைகின்றேன். (நீல நிறம்)

கசஅ. ஸுய ரூபிரொஷாய-ஷிமாநி ஹநுமத

ஜேவதா யூாநடி.

ஹநுமநம் வாயுஸூதம் ரூபிரொஷாபிஸம்ஜ்ஞகம் ।
ஸமுத்ரலங்கநோத்யுக்தம் தீர்கபுச்சம் ஸமாச்ரயே ॥
(கநகவணம்)

149 ருதிரோத்காரி வருஷாபிமாநி ஹநூமத்
தேவதையின் த்யாநம்.

வாயுபகவானின் புதல்வனாக இருப்பவரும், ருதிரோத்காரி வருஷத்திற்கு அதிதேவதை என்ற பெயர் உடையவரும், ஸமுத்திரத்தைத் தாண்டுவதற்கு முயற்சிப்பவரும், நீண்ட வாலையுடையவருமான ஹநுமானை சரணமடைகின்றேன். (தங்க நிறம்)

கருய. ரக்தாக்ஷிஷிமாநி ஸரஸ்வதீதேவதா யூாநடி.

ஸரஸ்வதீம் ஹாஸவதநாம் வீணாஜ்ஞுகராம்புஜாம் ।
ரக்தாக்ஷி ஸம்ஜ்ஞகாம் தேவீம் ஷ்யேத் வாக்ஸித்தயே ॥
(ஷேதவணம்)

150. ரக்தாக்ஷி வருஷாபிமாநி ஸரஸ்வதியின் த்யாநம்.

வீணையைத் தாங்கி பிரகாசிக்கின்ற கைகளையுடைய

வளும், ரக்தாக்ஷி வருஷத்திற்கு அதிதேவதை என்ற பெயர் உடையவளும், வாக்விபவத்தையளிப்பவளும், (சிறப்புடன்) பிரகாசிப்பவளுமான ஸரஸ்வதிதேவியை (தஞ்சம்) அடை கின்றேன். (வெளுப்பு நிறம்)

௧௫௧. அத க்ரோதநாபிமாநி தாக்ஷாயணீ
தேவதா த்யாநம்

தாக்ஷாயணீம் க்ரோதநாவஸ்தாம் தக்ஷக்ரதுவிஹந்த்ரீம் ।
ஶூலதாரிணீம் ஶுகாரூடாம் ஸர்வாபீஷ்டப்ரதாயினீம் ॥
(கநகவர்ணா)

151. குரோதன வருஷத்திற்கு அபிமாநி தேவதையான தாக்ஷாயணீ தேவியின் த்யாநம்.

குரோதன வருஷத்திற்கு அபிமாநி தேவதையாக இருப்பவளும், தக்ஷபிரஜாபதியின் வேள்வியை நாசம் செய்தவளும், கிளியின் மீது ஏறிக்கொண்டிருப்பவளும், சூலத்தை தரிப்பவளுமான தாக்ஷாயணீ தேவியை விருப்பியவைகள் கிடைக்கும் பொருட்டு வணங்குகின்றேன். (தங்க நிறம்) (1)

௧௫௨. அத அக்ஷயாபிமாநி லக்ஷ்மீதேவதா த்யாநம்.

அக்ஷயஸம்ஜ்ஞாம் தாம் லக்ஷ்மீம் க்ஷீராப்தி கந்யகாம் ।
ஹம்ஸவாஹநஸம்ஸ்தாம் வாணீஸம்யுதாம்பஜே ॥
(ஸ்வர்ணவர்ணா)

152. அக்ஷய வருஷாபிமாநி லக்ஷ்மீ தேவியின் த்யாநம்.

அக்ஷய வருஷத்திற்கு அபிமாநி தேவதையாக இருப்ப வளும், பால் கடலிலுதித்தவளும், அன்னபக்ஷி வாஹநத்தில்

வீற்றிருப்பவளும், சந்திரபிம்பத்தைப்போன்ற முகமுடைய வளும், இரண்டு கைகளில் 2 தாமரை மலர்களை வைத்துக் கொண்டிருப்பவளுமான லக்ஷ்மீ தேவியை தஞ்சமடை கின்றேன். (தங்க நிறம்)

௧௫௩. அத² த³க்ஷிணாயந த்⁴யானம்.

(ஶைவாக³மே)

த³க்ஷிணாயநஸம்ஜ்ஞோ தே³வோ ஶ்யாமோऽஸௌ ஹத
லோசந: |
பீதவஸ்த்ராவ்ருத: குண்டம் கணிகாரநிபா⁴
க்ருதி: ||

ஶாலிம் ஶராவாக்²யம் நிஶம் த(ய)ர்கபுஷ்பக: |
பூஜித: ஸித்³தி⁴தோ³ நித்யம் த⁴நதா⁴ந்யஸம்ருத்³த⁴யே ||௨||
(ஶ்ரீதத்வநிதி:)

153. தக்ஷிணாயநத்தின் ஸ்வரூபம்.

பச்சை நிறமாக இருப்பவரும், பார்வை குறைந்தவரும் மஞ்சள் நிறமான ஆடையை அணிந்திருப்பவரும், கோங்கிலவம்பூவைப்போன்ற வடிவமுடைய (அக்கினி) குண்டம், நெல்பயிர், மடக்கு, எருக்கம்பூ இவைகளை எப்பொழுதும் கைகளில் தரிப்பவருமான தக்ஷிணாயநாதி தேவதையை பூஜித்தால், இவர், குறைவற்ற செல்வத்தை யும் தானியங்களையும், ஸித்திகளையும் தந்தருளுவார். (பச்சை நிறம்) (1)

௧௫௪. அத² உத்தராயண த்⁴யானம்.

(ஶைவாக³மே)

உத்தராயணஸம்ஜ்ஞோऽஸௌ ஶங்க²வர்ணாபோ⁴
விஶாலாக்ஷத்⁴ருக் |

மாஞ்ஜிஷ்டவஸநோபேத: ஶ்வேதவர்ணோ விலக்ஷண: ||
புஸ்தகம் தக்ஷிணே ஹஸ்தே வாமே ச ரவி பிம்பகம் |
உபயோர் முக்த்யை ஸந்தோஷ ஸம்பத்ஸு பூஜநீயஸ்து கீர்த்தயே ||௨||

(ஶ்வேதவர்ண:)

## 154. உத்தராயண ஸ்வரூபம்.

### (சைவாகமத்தில்)

உத்தராயணத்திற்கு அதிதேவதையானவர், வெளுப்பு நிறமும், விசாலமான கண்களும், மஞ்சிட்டையின் நிறமுடைய ஆடையுமுடையவராவார். தங்கத்தினலான ஆபரணங்களையும், முத்துக்களாலான ஆபரணங்களையு மணிந்திருப்பவராவார். வலதுகையில் புஸ்தகத்தையும், இடதுகையில் ரவிபிம்பத்தையும் (ரவிபிம்பம்–சூரியனைப் போன்ற வடிவமுடைய ஆயுதம்) வஹிப்பவராவார். இவரை பூஜிக்கவேண்டுமென்று கூறப்படுகின்றது. இவர் முக்தியையும் ஸந்தோஷத்தையும் புகழையுமளிப்பவராவார். (வெளுப்பு நிறம்) (1)

## க௫௫. அத அயநலக்ஷணம்.

(பட்டபாஸ்கரீயே ரத்நமாலாயாம்)

ஶிஶிரபூர்வம்ருதுத்ரயமுத்தரம்
ஹ்யயநமாஹுரஹஶ்ச ததாமரம் |
பவதி தக்ஷிணமந்யத்ருதுத்ரயம்
நிகதிதா ரஜநீ மருதாம் ச ஸா ||

## 155. அயந லக்ஷணம்.

### (பட்டபாஸ்கரீயத்தில் ரத்நமாலையில்)

சிசிருது முதலான 3 ருதுக்கள் உத்தராயணமாகும் என்று கூறுகிறார்கள். அந்த 3 ருதுவும் தேவர்களுக்கு பகற்காலமாகும். மற்ற 3 ருதுக்களும் தேவர்களுக்கு இரவாகும் என்று கூறப்பட்டிருக்கின்றது. (1)

அ௰ அயநயொ௱ுவயொ௭௨ாஹ ஸதூ்வ்ரதஃ.

(௨ாயவீ௰ெ)

ஜெவதா ௱ா௨வாவ்ாஜி ஷூதிஷொ௨ஜ௨ஷ௨வெ௱வள ।
௨க்ஷிணாமா௨ூவெ கூவ௰ுது ந தத்ஷுஉவாஷூயாக ॥

வெவாநவ ஸஂஹிதாயாஂ —

௨ாதூ்ஜெலொ௱வவா௱ாஹ ஈ௱ஸிஂஹத்ரிவிகூ்௨ாஃ ।
௨ஹிஷாஸூ௱ஹஂத்ரீ வ ஓஸாவ்ாவெ ௨க்ஷிணாயநெ ॥

௨௨நா௱ெத்ர ஜெ்யாதிஷ்ஷ்ரெ —

௰்ஹஷூவெமஃ த்ரிஉமஷூதிஷா
விவாஹவளஹவ்தவஸுவ௰ுவ௰ு ।
ஸளஜ்ாயநெ கூ௨௰ு மூஹஂ ஷூஜிஷூ
யஜ்ஞஹி௰ுகஂ தக்வஜு௱ ௨க்ஷிணெ ஸ்ாக ॥

ஸத்தியவிரதர் அயநங்களின் உபயோகத்தைக் கூறுகிறார்.

**(மாதவீயத்தில்)**

சூரியன் உத்தராபிமுகமாக இருக்கும் பொழுது (உத்தராயண காலத்தில்) தேவதா பிரதிஷ்டை உத்தியான பிரதிஷ்டை, வாபீ (குட்டை) பிரதிஷ்டை இவைகளை செய்யவேண்டும். சூரியன் தென்திசையிலிருக்கும்பொழுது (தக்ஷிணாயநத்தில்) இவைகளைச் செய்தால், அதற்கு உரிய பலனை அடையமாட்டான். (1)

வைகாநஸ ஸம்ஹிதையில்:—

ஸப்த மாதாக்கள், பைரவர், வராஹமூர்த்தி, நரஸிம்ஹ மூர்த்தி, திரிவிக்கிரமமூர்த்தி, மஹிஷாஸுரமர்திநீ இவர்களை தக்ஷிணாயநத்தில் பிரதிஷ்டை செய்யவேண்டும்.

மதந ரத்நத்தில் ஜ்யோதிஷ சாஸ்திரத்தில்:—

கிருஹப்பிரவேசம், தேவதா பிரதிஷ்டை, விவாஹம், சௌளம், விரதபந்தநம் (உபநயநம்) முதலிய கர்மாக்களை உத்தராயணத்தில் செய்யவேண்டும். என்றும் அப்படிச் செய்வதால் சுபமான பலன் கிடைக்குமென்றும் கூறப் பட்டிருக்கின்றது. அவைகளை தக்ஷிணாயநத்தில் செய்தால் அது கேடு விளைவிக்குமென்றும் கூறப்பட்டிருக்கிறது.

𑌅𑌥 𑌅𑌯𑌨𑌯𑍋𑌃 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌦𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌃.
(𑌦𑌾𑌨𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌕𑌾𑌯𑌾𑌂)

𑌤𑌤𑍍𑌰 𑌉𑌤𑍍𑌤𑌰𑌾𑌯𑌣𑍇 𑌦𑌾𑌨𑌾𑌨𑌿.
(𑌸𑍍𑌕𑌾𑌨𑍍𑌦𑍇)

𑌧𑍇𑌨𑍁𑌂 𑌤𑌿𑌲𑌮𑌯𑍀𑌂 𑌰𑌾𑌜𑌨𑍍 𑌦𑌦𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌸𑍍𑌤𑍂𑌤𑍍𑌤𑌰𑌾𑌯𑌣𑍇 ।
𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌕𑌾𑌮𑌾𑌨𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑍇 𑌪𑌰𑌮𑌂 𑌸𑍁𑌖𑌮𑍍 ॥

𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌧𑌰𑍍𑌮𑍋𑌤𑍍𑌤𑌰𑍇 —

𑌉𑌤𑍍𑌤𑌰𑍇 𑌚𑌾𑌯𑌨𑍇 𑌵𑌿𑌪𑍍𑌰 𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑌦𑌾𑌨𑌂 𑌮𑌹𑌾𑌫𑌲𑌮𑍍 ।
𑌤𑌿𑌲𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑌨𑌡𑍍𑌵𑌾𑌹𑌂 𑌦𑌤𑍍𑌤𑍍𑌵𑌾 𑌰𑍋𑌗𑍈𑌃
𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

உத்தராயணத்தில் தாநங்கள்

(ஸ்காந்தத்தில்)

ஹே அரசனே! உத்தராயணத்தில் திலதேநுவை (கம்பளியினாலே பசுவின் வடிவத்தைக்கல்பித்து அதனுள்

ள்ளைப்போட்டு அந்தப்பசுவை) தாநம் செய்யவேண்டும். அப்படிச்செய்தால் விரும்பிய எல்லாவற்றையுமடைவான், மேன்மையான ஸுகத்தையடைவான். (1)

விஷ்ணு தர்மோத்தரத்தில்—

ஹே அந்தணர்களே! உத்தராயணத்தில் வஸ்திர தாநம் செய்வது ஏராளமான பலன்களையளிக்கும். எள்ளு நிறைந்த காளைமாட்டை தானம் செய்பவன் ரோகங்களிலிருந்து விடுதலையடைவான்.

சுய உக்ஷிணாயநெ ஊாநகஉாணி.

(ஹவிஷெ்யாத்தரெ)

ஸதிலெ௩ஹஸஂஸுமெ௩ஶெவஂ வ௱ஜயெசு
உக்ஷிணாயநெ ।
வூ தாஹிஷெகஂ வா கூயூாசு உஹாலாணு
ஸமெ௩ஹயா ॥ க ॥

வூ தவ௱ணெூந ஹாஂஸெந ஸஹிதெூண
சவஹநிூஶஂ ।
மவெூநாஜெூநவா ஶஂஹொ: ஷூஉஉூாசு
வூதகஂபவுடு ॥ உ ॥

ஸவிூஷாாவகஂ ஈ௩ூஂ கூசவா ஹ௩யொஹி
வூஜயெ ॥

தக்ஷிணாயநத்தில் தாநகர்மாக்கள்.

(பவிஷ்யோத்தரத்தில்)

மஹத்தான புண்ணிய பலத்தை விரும்புகின்றவன், எள்ளு, அரிசி இவைகளைக் கலந்து, பரமேசுவரனை பூஜை செய்யவேண்டும். அல்லது பாண்டத்தில் துவாரம் செய்து அதில் நெய்யை நிரப்பி அந்த நெய்யினாலே இரவும் பகலும் இடைவிடாமல் அபிஷேகம் செய்யவேண்டும்.

ச்ரேயஸ்ஸை விரும்புகின்றவன் (ச்ரேயஸ்ஸு புகழத் தக்க நற்காரியம், தர்மம், அல்லது மோக்ஷம்) பசுவின் வெண்ணெ அல்லது நெய்யுடன், கிருதகம்பளத்தை பரமேசுவரனுக்கு தானம் கொடுக்கவேண்டும் (கிருதகம்பளம் நெய்யும் கம்பளியும் அல்லது நெய்யில் நனைத்த கம்பளி) அல்லது அழகான உருவத்தைச் செய்து அதை நெய்யுடன் கொடுக்கவேண்டும்,

அத அயநயோ: ஜாதபலாநி.

(ஜாதகாபரணே)

ப்ரஸ்வச்சசித்தோ நிதராம் ஸுதஸ்த்ரீகார்யை:
ஸந்தோஷயுக்தோதிதராம் சிராயு: ।
நர: ஸதா ஸ்வாத்மபரோபகாரீ
தீரஶ்ச ஸௌம்யாயநஜாதஜந்மா ॥ ௧ ॥

கலஹப்ரியா: க்ருஷி கர்மஸக்தா
வதர்ஷ்யாம் யோதிகரோஷவித்த: ।
ஸமோஷஸஹோ நந்த ஶாநவாநாம்
யாம்யாயநே யோ ஜநநம் ப்ரபந்ந: ॥

இரண்டு அயநங்களிலும் ஜநித்தவர்களின் குணங்கள்

(ஜாதகாபரணத்தில்)

உத்தராயணத்தில் பிறந்த மனிதன், முற்றிலும் மனத் தெளிவு உடையவனுவான். பிள்ளைகள், மனைவி, இவர்களாலே அதிக ஸந்தோஷமுடையவனுவான். நெடுங்காலம் ஜீவித்திருப்பவனுவான். எப்பொழுதும் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளுகின்றவனுவான். அல்லது எப்பொழுதும் யாவரையும் காப்பாற்றுகிறவனுவான். உயர்ந்தகுணம் அல்லது தாராளமான மனது உடையவன் ஆவான். பயந்த ஸ்வபாவமுடையவனுமாவான். (1)

தக்ஷிணாயனத்தில் பிறந்த மனிதன், தகாத காரியத்தை செய்து, அல்லது ஒரு காரியமும் செய்யாமல் புகழுடைவான். பயிர்த்தொழில் செய்பவனாவான். நாலுகால் பிராணிகளிடத்தில் (ஆடு மாடுகளிடத்தில்) மிகவும் கொடுமையான மனமுடையவனாவான். மனிதர்களாலே பொறுக்க முடியாத அயோக்யனாக இருப்பான். (சடன் - ரஹஸ்யமாக பிறர் அறியாமல் கேடு விளைவிப்பவன்.)

கருசு. அத தக்ஷிணாயநாபிமாநி ஸூர்யதேவதா த்யாநம்.

(ஶைவாகமே)

ஶ்ரேயஸே ஸூர்யதேவம் நித்யம் தக்ஷிணாயநமாஶ்ரயே ।
ஸாஶ்வஸ்யந்தநகம் ஸூர்யம் சந்த்ரநக்ஷத்ரஸம்வ்ருதம் ॥
(ரக்தவர்ண:)

156. தக்ஷிணாயநாபிமாநி ஸூரிய தேவதையின் த்யாநம்.

(சைவாகமத்தில்)

பிரகாசமான தேரில் வீற்றிருப்பவரும், சந்திரன் நக்ஷத்திரங்கள் இவைகளாலே சூழப்பட்டவரும், தக்ஷிணாயநத்திற்கு அதிதேவதையாக இருப்பவருமான ஸூரியனை, அளவற்ற ச்ரேயஸ்ஸை (பெருமையை அல்லது தருமத்தை) அடையும்பொருட்டு சரணமடைகின்றேன்.
(சிவப்பு நிறம்) (1)

கருஎ. அத உத்தராயணாபிமாநி ஸௌரதேவதா ஸூர்யஸ்தவம்.

(ஶைவாகமே)

க்ஷேமாவஹந்தம் நித்யம் உத்தராயணமாஶ்ரயே ।
ஶிவஸ்வரூபமாதித்யம் ஸூர்யம் ஸஹஸம்யுதம் ॥
(ஶ்வேதவர்ண:)

## 157. உத்தராயணாபிமானி ஸோமதேவதா ஸ்வரூபம்.

### (சைவாகமத்தில்)

சிறந்த தேரின்மீது வீற்றிருப்பவரும், ஸூரியன் முதலிய கிரஹங்களுடன் கூடியிருப்பவரும், உத்தராயணத்திற்கு அதிதேவதையாக இருப்பவருமான சந்திரனை, துன்பங்கள் நீங்கும்பொருட்டு, தினந்தோறும் போற்றுகிறேன். (வெளுப்பு நிறம்)

அத² ஶீதருநாம் த்⁴யாநாநி.

(ஶைவாக³மே ஶ்ரீஸிம்ஹப்ராஸாதே³)

கருஎ. உத்தராயண ஸோமதே³வதா த்⁴யாநம்.

ரத²ஸ்த²ம் ஸோமதே³வேஶம் ஸர்வக்³ரஹஸமந்விதம் |
ஸூர்யாதி³க்³ரஹஸம்யுக்தம் ஸோமாக்²யம் உத்தராயணம் || க ||

ஸர்வது:கா²பஹம் ஶ்ரீமத் ஸோமதே³வம் ஸுதா⁴கரம் |
ஸர்வதா³ ப்ராணிநாம் த்⁴யாயே ஸதா³ ஸோமம் நமாம்யஹம் ||

ஶ்வேதாங்க³ம் ரோஹிணீகாந்தம் ஶீதாம்ஶும் ஸம்ஸ்தி²தம் |
ஸர்வலோகஹிதம் தே³வம் ஸோமதே³வம் நமாம்யஹம் ||
(ஶ்வேதவர்ண:)

## 158. ருதுக்களின் ஸ்வரூபங்கள்.

### (சைவாகமத்திலும் ஸ்ரீஸிம்ஹ பிராஸாதத்திலும்)

அவற்றுள் முதலில் வஸந்தருது ஸ்வரூபம்.

புலித்தோலாடையில் உட்கார்ந்திருப்பவரும், கையில் ஜபமாலையை தரித்திருப்பவரும், பஞ்சாக்ஷரத்தை ஜபிப்பதில் ஈடுபட்ட மனமுடையவரும், பூக்குடையின் நிழலில் இருப்பவரும், முதலாவது ருதுவின் அபிமானி தேவதையுமான வஸந்தன் என்று கூறப்படுகின்ற தேவதையை, நான்

வணங்குகின்றேன். ஸகல ஐச்வரியங்களுடனுமிருக்கின்றவரும், வேண்டியவற்றையளிக்கின்றவரும், பத்மாஸனத்தில் வீற்றிருப்பவரும், கிழக்கு முகமாக இருப்பவரும் சிரித்த முகத்துடனிருப்பவரும், வெண்மையான திருமேனியையுடையவரும், சிவந்த கண்களையுடையவரும், பீதாம்பரத்தையணிந்திருப்பவரும், ஸகல அங்கங்களிலும் திருநீற்றைப் பூசிக்கொண்டிருப்பவரும், வஸந்தருதுவிற்கு அதிதேவதையாக இருப்பவருமான அந்த வஸந்தன், எனக்கு ஸந்தோஷத்தையளிப்பாராக. (வெளுப்பு நிறம்)

௧௫௯ அத க்ரீஷ்மர்து த்யாநம்.

க்ரீஷ்மாபிமாநீ த்விதீயர்த்துர் தேவோ ராக்ஷஸமாத்ருக: |
அக்ஷமாலார்க ஹஸ்தஸ்ய சந்த்ராபாதபத்ர
யுக் ॥ ௧ ॥

ரோமஸஞ்ஜாதஸந்நாஹ ஸஞ்ஜநீயோ விபஸ்சிதா |
க்ரீஷ்மம் ப்ராஹு: ஸவிதாஸீநம் ஸிஷ்டோ ஹி ஸர்வ
ஸம்ஜ்ஞிதே ॥ ௨ ॥

ஸம்ஸக்தஜ்ஞாநம் ஸ்தாதி ப்ரஸாதகம் ॥

(ய ஏ த வணரு:)

159 க்ரீஷ்மருது ஸ்வரூபம்.

இரண்டாவது க்ரீஷ்மருதுவின் அபிமானி தேவதையானவர், புழுதி நிறமாக இருப்பவரும், ரூக்ஷமான (ரூக்ஷம்—வரண்டது நைப்பில்லாமல் கடினமாக இருப்பது) சரீரத்தையுடையவரும், ஜபமாலை, ஸூரியன், (ஸூரியனைப் போன்ற வடிவம்) இவைகளை கைகளில் வைத்துக்கொண்டிருப்பவரும், சந்திரனைப்போல வெண்மையான குடையையுடையவருமாவார். அறிவாளியாக இருப்பவன்.

ரோகத்தினாலேயுண்டாகிற தாபம் தீரவேண்டியதற்காக அவரை பூஜிக்கவேண்டும். 1½

முனிவர்களாலே பூஜிக்கப்பட்ட விஷ்டராஸநத்தில் (விஷ்டராஸநம் — தருப்பைப்புற்களாலே செய்யப்பட்ட ஆஸநம்) கிழக்கு முகமாக உட்கார்ந்திருப்பவரும், கமண்டலத்தை (கிண்டியை) கையில் வைத்திருப்பவருமான கிரீஷ்மருது தேவதையை, நான் தினந்தோறும் சிரத்தால் வணங்குகின்றேன். (புகைநிறம்)

௧௬0. அத வர்ஷர்த்தோ ஸ்வரூபம்.

த்ருதீய: தோயதர்த்துஸ்து ஹரிதவர்ண
ஸ்ரோணலக்ஷண: |
தாம்ரவர்ண ஸமாகோபேத: நீலவிஹங்கமஸம்யுத: ||

நீலம்லே(நீலம்லேக்ஷ)தயா தோயம் தோயவர்ண
வடம் விபோ |
தேவதாஸ்துதமேவ விக்ஞாதா நயதீதிதா || ௨ ||

ஹரிதாம்பரதரை: வர்ஜ்ஞை: வர்ஷிவஸந்தர்ஷிவர்ஷயே |
பிரவா பூர்ணதாதத வர்ஷா ஹவர்ஷாதியாயிகா: ||

ப்ர(ப்ர)வீ நிவிஷ்டாஸ்ஸ்தத தக்ஷிணாஸ்ய
தாஸ்திதா: ||
(ஹரிதவர்ண:)

160. வருஷருதுவின் ஸ்வரூபம்.

மூன்றாவது ருதுவான வருஷ ருதுவின் அதிதேவதையானவர், பச்சையான வடிவமும், சிவந்த கண்களும் உடையவராவார். சிவப்பு நிறமான கிளியை வைத்துக் கொண்டிருப்பவராவார். நீலநிறமான பவழத்தினாலாகிய

குண்டலங்களை தரித்திருப்பவராவார். அல்லது நீலம், பவழம் இவைகளாலான குண்டலங்களை அணிந்திருப்பவராவார். இவர் மீனை மடியில் (வலது கையில் மீனை) வைத்துக்கொண்டிருப்பவரும், மற்றொன்றில் (இடது) கையில், நீர் நிறைந்த கடத்தை வைத்துக்கொண்டிருப்பவருமாவார். மேக வரிசைகளாலே சூழப்பட்டவரும், மின்னல்களுடன் கூடியவரும், பிரகாசமான சரீர காந்தியுடையவருமாவார். சரீர புஷ்டி, ஸந்தோஷம் இவைகள் விருத்தியடைவதற்காக, இவரை, ஹரிதாலத்தின் இதழ்களினுலே பூஜிக்கவேண்டும்.

எப்பொழுதும், பிரஸீ என்னும் தர்பாஸநத்தில் வீற்றிருப்பவர்களும், தெற்கு முகமாக இருப்பவர்களும், ஹர்ஷம் (ஸந்தோஷத்தையளிப்பவர்கள்) என்ற பெயர் உடையவர்களுமான வருஷா கால தேவதைகளை, இப்பொழுதும் சிரத்தினுல் வணங்குகின்றேன். (பச்சை நிறம்)

கசுக — அய ஶாரத்ருது ஸ்வரூபம்.

ஶாரதர்து ஸ்வரூபம் சந்த்ரமண்டல ஸம்ஸ்தித: ।
கபோத கௌரகாந்தி கபோலசந்த்ராஸ்தகம்பது: ॥

சந்த்ரபிம்பம் கரே ஶுப்ரம் வாமே கும்பம்
ஸமாஶ்ரிதம் ।
த்யாத: ஸுஜநீயோ ஶரத்ருத்வே ஸமாய ச ॥

ஶாரதோ ஹவிதாஹ்வயஸ் ஹ்ராதிநாஹ்லாதக: ।
ஸிதா: ஸுதர்மாஸீந: ஸாதிகம் வரயம் வஹது ॥

(சந்த்ரமண்டல:)

## 161. சரத்ருது ஸ்வரூபம்.

நான்காவது ருதுவான சரத்ருதுவானது, சந்திரனைப் போன்ற வெளுப்பு நிறமாக இருப்பதும், அழகான கண்களை

யுடையதுமாம். கழுத்தில் முத்துமாலையை தரித்தும், காதுகளில் இந்திர நீலத்தினுலான குண்டலங்களையணிந்து மிருப்பதாம். வலது கையில் சந்திர பிம்பத்தையும், (சந்திர பிம்ப வடிவத்தையும்,) இடது கையில் அமுதம் நிறைந்த கும்பத்தையும், தரித்திருப்பதாகும். இத்தகைய சரத் ருதுவை, ஆயுஸின் அபிவிருத்தியின் பொருட்டும், ஸுகத்தையடைவதற்காகவும், பூஜை செய்யவேண்டும்.

மேற்கு முகமாக உட்கார்ந்துகொண்டிருப்பதும், ஸ்படிக வலயத்தை வஹிப்பதுமான சரத்ருதுவானது, நாம் விரும்புகின்ற பொருள்களை அளிப்பதாக ஆகுமாக. (சரத்ருதுவுக்கு அதிபதியான தெய்வமானது, நாம் விரும்பு கின்றவைகளை அளிக்கவேண்டும் என்பது பொருள்.) (சந்திரனைப்போன்ற வெளுப்பு நிறம்)

ககூஉ. அத ஹேமந்தருது ஸ்வரூபம்.

ஹேமந்த: வஸ்த்ரஸம்வீத: கபில: ஸாக்ஷஸூத்ர: ।
பீதவஸ்த்ரபரீவீத: த்ரிஜட: க்ரூரமோதித: ॥

யாம்யஹஸ்தே கதா ஹஸ்தே வா ஸ்தூல ஸஹாக்ஷக: ।
வஜ்ரமீஷேபு விவேத்ருய: யாம்யவக்த்ர ஸம்யுத: ॥

ஹேமந்தஸ்து ஸமாக்யாத: ஸர்வகாமவராப்ரத: ।
ஸாமியாஜ்யா வரீதீ ச ஸர்வஸௌபாக்யத: ॥ க ॥

(கபிலவர்ண:)

162 ஹேமந்தருது ஸ்வரூபம்.

ஐந்தாவதான ஹேமந்தருதுவின் அதிதேவதையானவர் கபில (மஞ்சளும் சிவப்பும் கலந்த) நிறமானவரும், கொம்புகளும், குண்டலங்களுமுடையவரும், மஞ்சள் நிறமான ஆடையையணிந்திருப்பவரும், 3 சடைகளையுடையவரும்,

கருப்பு நிறமான உடும்பை வைத்துக்கொண்டிருப்பவரும், அல்லது கருப்பு நிறமான நெற்றியையுடையவருமாவார். இவருடைய வலது கையில் நெற்கதிரும், இடது கையில் தானியம் நிறைந்த பாத்திரமுமிருப்பதாம். இவரை நிறைந்த செல்வத்தை வேண்டியும், தானிய ஸம்பத்தின் நிறைவை வேண்டியும் பூஜிக்கவேண்டும். (2)

வடக்கு முகமாக வீற்றிருப்பவரும், குற்றமற்றவரும், யஜ்ஞோபவீதத்தையணிந்திருப்பவரும், ஸகல க்ஷேமங்களையுமளிப்பவருமான ஹேமந்தருதுவின் அதிதேவதையானவர், நமக்கு அருள் செய்வாராக. (கபில நிறம் — சிவப்பும் மஞ்சளும் கலந்த நிறம்) (1)

கசுரு. அத² ஶிஶிர த்ருʼது ஸ்வரூபம்.

ஶிஶிரா வேதா³ய ஷஷ்ட²ஸ்ஸ் ஹரிச்சந்தா³ங்க³
ராக³ லக்ஷண: ।
பீதகாம்ஸ்யுகண்ட²ஸ்த² கர்ணவிப்⁴ரூ ஷணாயுக: ॥

உப⁴யகக ஸ்ப்ருʼஹம் நாங்க: வாத்ருʼகக்ஷம் காராம்பு³ஜே ।
வாமே யா ந்யஸ்தாரவம் ச யாஸ்ய வஸிஷ்ட² வ்யஞ்ஜயே ॥ உ ॥

ஶிஶிரம் ஶிரஸா நௌமி பீதாஜதம் (ஜாதம்) ஷ்யதம் ।
ஸங்க³ம்வாஹ்ருதகரம் வக்ஷாக்ஷர ஜவொத³யதம் ॥
(ஹரிவம்ஶ:)

163. சிசிரருது ஸ்வரூபம்.

ஆறாவது ருதுவான சிசிரருதுவின் அதிதேவதையானவர், ஓரங்கள் கருத்து சிவப்பு நிறமான கண்களையுடையவரும், மஞ்சள் நிறமான (தங்கத்தினாலான) குண்டலங்களை காதுகளிலணிந்திருப்பவரும், கழுத்தில் பவழமாலையையணிந்திருப்பவரும், அழகான மதாக

புஷ்பத்தை (மதூகபுஷ்பம்–இலுப்பப்பூ) அடையாளமாகக் கொண்டவரும், (வலது கையில்) சூரியனைப்போன்ற வடிவமுள்ள அல்லது எருக்கம் பூக்களுடன் கூடிய பாத்திரத்தையும் இடது கையில் தானியத்துடன் கூடிய மடக்கையும் வைத்துக்கொண்டிருப்பவருமான இவர், விரும்பியவற்றை பெருமளவிலளிப்பாராக.

ஆகாயத்திலிருப்பவரும் (ஆகாயத்தை நோக்கிக் கொண்டிருப்பவரும்) ஸூரிய பிம்பத்தை கையில் தரிப்பவரும், பஞ்சாக்ஷரத்தை ஜபித்துக்கொண்டிருப்பவருமான சிசிரருது தேவதையை சிரத்தால் வணங்குகின்றேன். (பச்சை நிறம்) (1)

[அத்ர ஷட்ருதூநாம் ரூபேண தத்ஸ்வரூபே ரூபேசோக்தம் ஶ்லோகத்வயம் ஶைவாகமே ஶாந்தி ப்ரகரணே, அந்திமஶ்லோகோக்தம் ப்ரதிமாலக்ஷணம் து நருஸிம்ஹ ப்ராஸாதே ச ப்ரதிபாதிதம் | ஏவம் ச ஏதேஷாம் ப்ரதிமாயா: ஸ்வரூபே த்வே | அத: யஸ்ய யதுசிதம் லக்ஷணம் தத் க்ராஹ்யமித்யாஶயேந உபயோ ரூபயோர்க்ரஹணம் ||]

[6 ருதுக்களின் ஸ்வரூபத்தைக்கூறுகையில் முதல் 2 சுலோகங்களில் கூறப்பட்டுள்ள தேவதா ஸ்வரூபமானது சைவாகமத்தில் சாந்தி பிரகரணத்தில் கூறப்பட்டிருப்பதாகும்.

இறுதியில் ஒரு சுலோகத்தில் கூறப்பட்டிருக்கின்ற மற்றொரு விதமான லக்ஷணமானது, நிருஸிம்ஹ பிராஸாதத்தில் கூறப்பட்டிருப்பதாகும்.

எனவே இந்த ருதுக்களின் ஸ்வரூபலக்ஷணமானது 2 விதமாகும். இவ்விரண்டுகளில் எவரெவர்க்கு எந்த எந்த பிரதிமாலக்ஷணம் மனதுக்குப் பிடித்தமானதோ அந்த

லக்ஷணத்தின்படி பிரதிமைகளைக் கல்பித்துக்கொள்ளலாம் என்பதற்காக 2 விதமான லக்ஷணங்களும் கூறப்பட்டிருக்கின்றன ]

அத வஸந்தாதிஷு ருதுஷு தாநாநி.

(தாநசிந்தாமணௌ விஷ்ணுதர்மோத்தரே ச)

ஸ்நாநார்ஹாணி த்ரவ்யாணி வஸந்தே தாநமர்ஹதே ।
வாஸகாநாம் ததா ஸ்ரேஷ்டம் வஸ்த்ராணாம்
தக்ஷிணாம்(சு) ॥

தேவீபுராணே —

யஃ வஸந்தவ்யதிஷு வஸ்த்ர தேவீமுத்திஸ்ய வ்யாவ்ருஷி ।
விஸேஷம் விப்ர க்ருத்வாஸ் திவாதீஷு ஸம்ப்ர யச்சதி ॥

தஸ்ய ஸா துஷ்டிமாப்நோதி பரீக்ஷ்யைவ தம் விஷ்யா ।

விஷ்ணுதர்மோத்தரே —

ஸர்வஸ்ய ஸூஜஸ்ய வஸ்த்ராணாமபி தேவதே ।
விஹ்ருத்வா நரஃ க்ருத்வா ஸம்யுத்திஸ்ய
தேவதயே ॥ க ॥

ஸிஸிரம்(சு) ஸததம் வஹ்நிம் தவயிக்வா ததா திநேஃ ।
காஷ்டாஷம் ஸர்வஜ்தம் தத்வா யதாஸக்த்யா த்விஜாதிஷு ॥

காயாக்நிதீப்திவ்யாகுலம் ஸத்ருணாஸம் ச விந்ததி ।

வஸந்தம் முதலிய ருதுக்களில் செய்யவேண்டிய தாநங்கள்.

**(தாநசிந்தாமணியிலும், விஷ்ணு தர்மோத்தரத்திலும்)**

வஸந்தருதுவில், ஸ்நாநம் செய்யும்பொழுது சரீரத்தில் பூசித்தேய்த்துக் குளிப்பதற்குரிய வாஸநாதிரவியங்களை தாநம் செய்யவேண்டும்.

கிரீஷ்மருதுவில், தாஹசாந்தியையளிக்கக்கூடிய பானகம் நீர்மோர், தண்ணீர், முதலியவற்றை தானம் செய்ய வேண்டும்.

அதை அடுத்துள்ள வருஷருதுவில், குடைகளை தானம் செய்யவேண்டும். (1)

தேவீ புராணத்தில்:—

ஹே குமந்தாய்! எவனொருவன் தேவியின் ஸந்தோஷத்தைக்கருதி, பிராம்ஹணர்களுக்கும், பிராம்மண கந்நிகைகளுக்கும், முறையுடன் எள்ளை தானம் செய்கின்றானோ, அவனுடைய வித்தியா கௌரவத்தினாலே, தேவியானவள் சீக்கிரமாக அவனிடம் ஸந்தோஷமடைகின்றாள்.

விஷ்ணு தர்மோத்தரத்தில்—

தர்மத்தையுணர்ந்தவனே! மனிதன், சரத்காலத்தில் அந்ந தானமும் வஸ்திர தானமும் செய்யவேண்டும்.

ஹேமந்தருதுவில், உதயகாலத்தில் ஸூரியனை உத்தேசித்து வந்ஹிதானத்தை (தீபதானத்தை) செய்ய வேண்டும்.

சிசிரருதுவில், எப்பொழுதும் எள்ளுகளினாலே ஹோமம் செய்து அக்நிபகவானை திருப்தி செய்யவேண்டும். தன் சக்திக்கு ஏற்றபடி, பிராம்ஹணர்களுக்கு கஞ்சியை தானம் செய்யவேண்டும்.

இவ்விதமான தானங்களை செய்பவன், தீச்சுடரைப் போல் பிரகாசமான சரீரகாந்தியையுடையவனாவான். பகைவர்களை அழித்து வெற்றிபெறுவான். (2½)

அமுர வஸஂதாதிஷு ஜாதநாணா:

(ஜாதகாஹரணெ)

தத்ராதிள வஸஂதெ —

கத்வ-ரூபொ உதிமாநு வுராவீ
வஸஂகீதஶாஸ்த்ரெ மணிதெ வ வீணா: ।
ஶஸ்த்ராஸ்த்ரவிறுாஉயுவிதவுத்தி:
வஸஂத ஜாதெதா உநுஜ: வ வஸஞ: ॥

## வஸந்தம் முதலிய ருதுக்களில் பிறந்தவனுடைய குணங்கள்.

### (ஜாதகாபரணத்தில்)

வஸந்தத்தின் குணம்.

அவற்றுள், வஸந்தருதுவில் பிறந்த மனிதன், மன்மதனைப்போல் அழகுடையவனும், சிறந்த அறிவுடையவனும், வெற்றியால் புகழுடையவனும், ஸங்கீத சாஸ்திரத்திலும், கணித சாஸ்திரத்திலும் நிறைந்த ஜ்ஞானமுடையவனும், சஸ்திரம் அஸ்திரம் இவைகளைப்பயின்று தெளிவு பெற்ற மனோநிலையையுடையவனும், தெளிந்த முகமுடையவனுமாவான். (1)

஗்ரீஷ்ம —

வெனஷ்யவிஷ்ாயநயாநுயாக்ொ
வக்தா வ ஶுஂவாஉறுகெஶவாஶ: ।
ஹொஂ ஹவெஞாதிவிவாரஶீரொ
யொ ஗்ரீஷ்மகாலெ ஜநநஂ வ வஞ: ॥

கிரீஷ்மருதுவின் குணம்.

கிரீஷ்மகாலத்தில் பிறந்தவன், நிறைந்த செல்வம், தநம், தானியம் இவைகளுடன் கூடியவனும், நன்கு பேசக்கூடியவனும், தொங்குகின்ற தோஷமற்ற நீண்ட தலைமயிரையுடையவனும், ஸுகபோகங்களையுடையவனும், எதையும் அதிகமாக விசாரியாதவனுமாவான்.

வஷ-ராவ—

ஸங்ராமயீரொ உதிமாநு யுதாவீ
தாரஜஉவெ்ஜஉ(ர) கூரஃவாரவஃ ।
கஹோ நிரூாதா மூநாவிநூாவீ
வஷெராஜூவெ வெவ வாராஷஃஸஹஷ்ரஃ ॥

வருஷருதுவின் குணம்.

வருஷருதுவில் பிறந்த மனிதன், சண்டையில் தீரனாகவும், சிறந்த புத்திமானாகவும், புகழுடையவனாகவும், குதிரைகளிடத்தில் அன்புடையவனாகவும், (குதிரைகளை செலுத்துவதில் ஸாமர்த்தியமுடையவனாகவும்) நல்ல அழகு வாய்ந்தவனாகவும், கபமும் வாதமும் அதிகமான சரீரத்தை யுடையவனாகவும், ஸ்திரீகளுடன் விளையாடுகின்றவனாகவும், ஸந்தோஷமுடையவனாகவுமிருப்பான். (1)

ஶரதி —

கூவணரொஷஃ வாராஷொZநிரூாதா
ஊநீ யநீ யஉராவிஃ ஶாவிஃ ஸுாஜ ।
ரணவியொ வாஹநவஸயாதஹ
ஜாதஃ ஶரஹா஼ீவ ஜஃந யஸு ॥

சரத்காலத்தின் குணம்

சரத்காலத்தில் பிறந்த மனிதன், நிறைவுபெறாத ரோஷமுடையவனாகவும், வாதாதிகமான சரீரமுடையவனாகவும் மானமுடையவனாகவும், செல்வமுடையவனாகவும், தருமத்தில் ஆசையுடையவனாகவும், தூய்மையுடையவனாகவும், போர் புரிவதில் ஆசையுடையவனாகவும், வாஹனங்களோடிருப்பவனாகவுமிருப்பான். (1)

ஹேமந்தே —

நரேந்த்ரமந்த்ரீ வதராஶுதாரா:
நரோ ஹவேத் வாரஶோணாவபவ:ஹ: |
ஸத்கர்யகார்யா நாரதோ ரநஸ்ரீ
ஹேமந்தஜாத ஸ்ரத ஸதாவிநீத: ||

ஹேமந்தத்தில்.

ஹேமந்தருதுவில் பிறந்த மனிதன், அரசனுக்கு மந்திரியாகவும், ஸாமர்த்தியமுடையவனாகவும், அழகிய குணங்களோடுகூடியவனாகவும், எப்பொழுதும் நல்ல காரியங்களையும் தருமகாரியங்களையும் செய்ய விருப்பம் உடையவனாகவும், வணக்கமுடையவனாகவும் இருப்பான்.

ஶிஶிரே —

ஶ்ரேஷ்டாஶநபாநாரதோ விநீதோ
ஶாஸ்த்ர ப்ரிய: ஸ்த்ரு ஸுத ஸுவத்ஸல்ய: |
ஸத்கர்யவேஷ: ஸரோஷஸ்ரோஷ:
ஸஹாதிஶாலீ ஶிஶிர ஜந்மா ||

சிசிரருதுவில்.

சிசிரருதுவில் பிறந்த மனிதன், நிறைய அன்னம் பானங்களை அருந்துகின்றவனாகவும், வணக்கமுடையவனாகவும், குருவினிடத்தில் அன்புடையவனாகவும், பிள்ளைகளிடத்திலும் மனைவியினிடத்திலும் நல்ல மனதுடையவனாகவும், நல்ல காரியங்களைச் செய்பவனுக்குரிய வேஷம் உடையவனாகவும், ரோஷமுடையவனாகவும், பலம் முதலியவைகளோடு கூடியவனாகவுமிருப்பான். (1)

அத ஷட்ருத்வபிமாநி தேவதாநாம் நாமாநி —

(சைவாகமே)

௧௬௪. தத்ராதௌ வஸந்தாத்யபிமாநி காமதேவதா ஸ்வரூபம்.

வஸந்தகாலஸ்ய நேதாரம் காமம் காம்யப்ரதாயகம் ।
புஷ்பபாணவிநிர்ஜிதஜகத்த்ரயமஹம் பஜே ॥
(காஞ்சநவர்ண:)

## 6. ருதுக்களின் அபிமாநி தேவதைகளின் பெயர்கள்.

(சைவாகமத்தில்)

164. அவைகளுள் வஸந்தாபிமாநியான காமதேவனின் ஸ்வரூபம்.

வஸந்தகாலத்திற்கு அதிதேவதையானவரும், விரும்பிய பலத்தையளிப்பவரும், புஷ்பங்களாகிய பாணங்களினாலே ஜிளக்கப்பட்ட (வெற்றிகொள்ளப்பட்ட) மூன்று உலகங்களையுமுடையவருமான காமதேவனை, நான் பஜிக்கின்றேன் (ஸேவிக்கின்றேன்) (தங்க நிறம்) (1)

௧௬௫. அத க்ரீஷ்மர்த்வபிமாநி அக்நிதேவதா ஸ்வரூபம்.

சுசிம் க்ரீஷ்மஸ்ய நேதாரம் வஹ்நிம் மேஷகதம் விபும் ।
சக்திஸ்ருக்ஸ்ருவஹஸ்தாட்யம் தேவம் ஸஜ்ஜநப்ரியம் ॥
(ரோஹிதவர்ண:)

165. கிரீஷ்மருதுவின் அபிமாநியான அக்நிதேவதையின் ஸ்வரூபம்.

தூய்மையானவரும், கிரீஷ்ம காலத்திற்கு அதிதேவதையாக இருப்பவரும், ஆட்டுக்கடா வாஹநத்தில்

வீற்றிருப்பவரும், எங்கும் நிறைந்தவரும், சக்தி என்னும் ஆயுதம், ஸ்ருக், ஸ்ருவம், இவைகளை கைகளில் தரிப்பவரும் பக்தஜநங்களிடத்தில் பிரீதியுடையவருமான அக்நிதேவனை வணங்குகின்றேன் (சிவப்பு நிறம்) (1)

கசுசு. ஊய வஷ-ுகவ-ுவிஶா நி வா ◌ணாெவதா ஜ்லா ◌வெடி.

ஓ,ெவதவஸஉஹூ வெஜ வஷ-ுதெ-ுாாயிெஷவதம் ।
நகூ ாா ◌வஸ வாஶவாணிம் ஜொகா நாம் ஜீவநவூ ஷடி ॥
(கநகவண-ு:)

166. வருஷருதுவின் அபிமாநி வருணதேவதையின் ஸ்வரூபம்.

வருஷருதுவின் அதிதேவதையாக இருப்பவரும், மகர மத்ஸியத்தில் அல்லது முதலையின் மீது வீற்றிருப்பவரும், பாசத்தை கையில் வைத்துக்கொண்டிருப்பவரும், உலகத்திற்கு (ஸகல ஜீவராசிகளுக்கும்) ஜீவநத்தை (பிராணனை) அளிப்பவருமான வருணனை, நான் வணங்குகின்றேன். (ஸ◌்வர்ண வர்ணம்) (1)

கசுஎ. ஊய ஶாஉூகவஹிஶா நி கிாிஜாெஷவதா ஜ்லா ◌வெடி.

கிாிஜாம் ஶாஂகாாய-ுாம்ஹீம் ஶாஃகாநாயிெஷவதாம் ।
வெஜ ஜொெகஜநீம் ஷவ-ுாஹீஷூவூஷாயிநீடி ॥
(ஹாிவண-ுா)

167. சரத்ருதுவின் அபிமாநிதேவதை கிரிஜையின் ஸ்வரூபம்.

ஸ்ரீ பரமேசுவரனுடைய பாதி சரீரமாக இருப்பவளும், (மனைவியாக இருப்பவளும்) உலகத்திற்கு ஒரே தாயாக

இருப்பவளும், விரும்புகின்றவைகள் எல்லாவற்றையும் அளிப்பவளுமான கிரிஜா (பார்வதீ) தேவியை வணங்குகின்றேன். (பச்சை நிறம்)

கசூஅ. அயி ஹேமந்தசுவபிமாநி ஸவஜேவதா ஸ்வரூபம்.

அஹிம் ஸவஜுக்கமுூ:யீஶம் ஹேமந்தஸ்யாயிதேவதம் ।
காத்ரவெயம் உஹாஸகும் ஹிெஜ ஊர வாதாஸவஜா ॥
(ஶ்வேதவணா:)

## 168. ஹேமந்தருதுவின் அபிமாநியான ஸர்ப்ப தேவதையின் ஸ்வரூபம்.

ஹேமந்தருதுவுக்கு அதிதேவதையாக இருப்பவரும் கத்ருவின் (ஸர்பங்களின் தாய்) புதல்வனாக இருப்பவரும் மிகமிக வலிமையுடையவரும், ஸர்ப்பகுலங்களுக்கு அரசனாக இருப்பவருமான ஸர்ப்பத்தை (ஆதிசேஷனை) வணங்குகின்றேன். அவர், என்னை எப்பொழுதும் காப்பாற்றுவாராக. (வெளுப்பு நிறம்) (1)

கசூகூ. அயி ஶிஶிரசுவபிமாநீஸ்வரதேவதா ஸ்வரூபம்.

ஶிஶிரஸ்யேஶ்வரம் தேவம் உமேஶம் வ்ருஷஹயஜம் ।
வந்தே த்ரிபுரஸம்ஹாரம் ஸ மேஹிஷ்டம் வ்யயஹதம் ॥
(ஶ்வேதவணா:)

## 169. சிசிரருதுவின் அபிமாநியான ஈசுவரனின் ஸ்வரூபம்.

சிசிரருதுவின் அதிதேவதையாக இருப்பவரும், விருஷபத்தை துவஜமாகக்கொண்டவரும், திரிபுராஸுரனை வதைத்தவருமான ஸ்ரீ பரமேசுவரனை நமஸ்கரிக்கின்றேன்,

அந்த பரமேசுவரன் என்னுடைய விருப்பங்களை யளிப்பாராக. (வெளுப்பு நிறம்)

அத ஸாம்வத்ஸராதீநாம் தேவதாநாம் ஸ்வரூபாணி—
(சைவாகமே)

௧௭௰. தத்ராதௌ தேவதாநாம் ஸ்வரூபம்.

ஸம்வத்ஸராத்மகம் கிரீடோஜ்வலிதமஸ்தகம் ।
ஜகதாநந்தஜநகம் தயாஸாகரமாஸ்ரயே ॥
(ரக்தவர்ண:)

**சாந்திரமாநத்தின் படிக்கு சைத்திரம் முதலான மாதங்களின் ஸ்வரூபங்கள்.**

**(சைவாகமத்தில்)**

170. அவைகளுள் முதலாவது சைத்திரமாஸத்தின் ஸ்வரூபம்.

சங்கம், சக்கரம் இவைகளுடன் திகழுகின்ற கைகளையுடையவரும், கிரீடத்துடன் பிரகாசிக்கின்ற சிரத்தையுடையவரும், உலகத்திற்கு ஆநந்தத்தையளிப்பவருமான மதுமாஸ (சைத்திரமாஸ) தேவதையை வழிபடுவோமாக. (சிவப்பு நிறம்) (1)

௧௭௧. அத சைத்ரமாஸஸ்வரூபம்.

சங்கசக்ரதராம் தேவம் தயாஸம்யுக்தம் ।
மாஸாத்யமாநந்தகரம் வந்தே லக்ஷ்மீஸமந்விதம் ॥
(ஸ்வேதவர்ண:)

171. வைசாகமாஸ ஸ்வரூபம்.

ஸத்வாயாயகாா வ௭ஜஸ்ரா ஷருஃமெபொஷீ த்ரிவாஜிகா ।
ஊர்த்வ-ுகெஶீ விா௭வொக்ஷீ ஸங்க்ராந்திஃ
வாஈஷாக்ருதிஃ ॥
(நீருவணா-ுாஃ)

## 217. ஸங்கிராந்தி ஸாமாந்ய லக்ஷணம்.

### (ஜியோதிஷ ஸங்கிரஹத்தில்)

பொதுவாக ஸங்கிராந்தி தேவதையானது, 8 கைகள் உடையதும், 4 முகங்களுடையதும், 8 காதுகளுடையதும், 8 கண்களுடையதும், 60 யோஜனை அளவு விஸ்தாரமானதும், 100 யோஜனை தூரம் உயரமானதும், 7 ஆயுதங்களை கைகளில் தரித்திருப்பதும், தொங்குகின்ற உதட்டையுடையதும், 3 கால்களையுடையதும், ஊர்துவமுகமான (மேல் நோக்கான) கேசங்களையுடையதும், விகாரமான கண்களையுடையதும், புருஷ வடிவமுடையதுமாகும். இத்தகைய ஸங்கிராந்தி தேவதையானது பூஜிக்கத் தக்கதாகும்.

அய காாணஷருவெஶஹெஉாஷிஶெஷெண
ஞூவஸாஜெகாஉஶ ஷூா௭வாணி.

(ஜொதிஷஸங்ரஹெ)

உகஅ. தத்ராஉள பவகாா௭ணெ ஷரவிஷ்டு
ஸங்க்ராந்தெஃ ஷூா௭வடி.

ஸிஂஹொவவிஷ்ஶூ ஹாஶாஂஷியாஸீ
வாஹாமஶாஜ்ஞாஂபாாவிஞ்ராஉாணி ।
கஷூ௭ரிகாஂ வெவ ஷாஹொஉவாத்ரஂ
அஹஂ வ ஹாஜெக்ஷ ஷஷி பவெ விவஷூாது ॥

(நீருவண-ுஃ)

218. அவற்றுள் பவகரணத்தில் ஸங்கிராந்தி ஸ்வரூபம்.

ஸங்கிராந்தியானது பவகரணத்தில் நிகழ்ந்தால், அப்பொழுது, ஸூரியனானவர், ஸிம்ஹ வாஹநத்தில் வீற்றிருப்பவரும், புசுண்டி என்னும் ஆயுதத்தை வஹிப்பவரும், புன்னைப்பூ, வெளுப்பு வஸ்திரம், பவழம், (பவழமாலை முதலிய ஆபரணங்கள்) இவைகளை தரிப்பவரும், கஸ்தூரியை (கஸ்தூரிப்பொட்டை) தரிப்பவரும், தங்கப் பாத்திரத்தை வைத்திருப்பவரும், அந்நத்தை புஜித்துக்கொண்டிருப்பவருமாவார். (தங்கப் பாத்திரத்தில் அந்நத்தை வைத்துக்கொண்டு புஜித்துக்கொண்டிருப்பவராவார்.) (1)

௨௧௮. 𑌅𑌥 𑌬𑌵𑌕𑌰𑌣𑍇 𑌰𑌵𑌿𑌸𑌂𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑍇𑌃 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑍍

𑌸𑌿𑌂𑌹𑍋𑌪𑌵𑌿𑌷𑍍𑌟𑌾𑌰𑍁𑌣𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑌜𑌾𑌤𑌿
𑌪𑍍𑌰𑌸𑍂𑌨𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌭𑌰𑌣𑌭𑍂𑌷𑌣𑌾𑌨𑌿 ।
𑌕𑌾𑌂𑌸𑍍𑌯𑌂 𑌚 𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌸𑌹𑌸𑌿𑌂𑌬𑌿𑌭𑍍𑌰𑌾𑌣𑌂
𑌯𑌤𑍍𑌰 𑌰𑌵𑌿𑌃 𑌪𑌾𑌯𑌸𑌭𑌕𑍍𑌷𑌕𑌶𑍍𑌚 𑌬𑌵𑍇 ॥

(𑌨𑍀𑌲𑌵𑌰𑍍𑌣𑌃)

219. பாலவ கரணத்தில் ஸங்கிராந்தி ஸ்வரூபம்.

ஸங்கிராந்தியானது பாலவ கரணத்தில் ஸம்பவித்தால் அப்பொழுது சூரியன் புலியின்மீது வீற்றிருப்பவரும், சிவப்புப்பூ, சிவப்பு ஆடை, ஜாதி முல்லைப்பூ, முத்துக்கள் (முத்துக்களாலான மாலை முதலிய ஆபரணங்கள்) சந்தனம் இவைகளையணிந்திருப்பவரும், பிண்டிபாலம் என்ற ஆயுதத்துடன் வெண்கலப்பாத்திரத்தை வைத்துக்கொண்டு இருப்பவருமாவார். பாயஸத்தை புஜித்துக்கொண்டு இருப்பார். (வெண்கலப்பாத்திரத்தில் இருக்கின்ற பாயஸத்தை புஜித்துக்கொண்டிருப்பார்.) (நீல நிறம்) (2)

௨௨0. அத கௌலவகரணஸ்தரவிஸங்க்ராந்தே: ஸ்வரூபம்.

ஸ்திதோ வராஹே பகுலாதி யுக்தோ

விசித்ராம்பர: குங்குமலிப்தஶ்ச ஸஹாஸி: |

ஸபக்ஷ்யபோஜீ ராஜிதபூஷணஶ்ச

ஸதாம்ரபாத்ர: ஸவிதா கௌலவே ஸ்யாத் ||

(நீலவர்ண:)

220. கௌலவ கரணத்தில் ஸங்கிராந்தி ஸ்வரூபம்.

கௌலவ கரணத்தில் ஸங்கிராந்தியானது ஸம்பவித்தால், அப்பொழுது, சூரியனானவர், பன்றி வாஹனத்தில் வீற்றிருப்பவரும், மகிழம்பூ மாலையையணிந்து கொண்டிருப்பவரும், பலவர்ணங்களுடன் கூடிய ஆடையை யணிந்திருப்பவரும், குங்குமத்தை வஹிப்பவரும், கத்தியை தரித்துக்கொண்டிருப்பவரும், பக்ஷியங்களுடன் அந்நத்தை புஜித்துக்கொண்டிருப்பவரும், (பக்ஷியம்-தின்பண்டங்கள்) நன்கு பிரகாசிக்கின்ற ஆபரணங்களை அணிந்திருப்பவரும், தாமிர (தாமிரப்-செப்பு) பாத்திரத்தை வைத்துக் கொண்டிருப்பவருமாவார். (நீல நிறம்) (3)

௨௨௧. அத தைதிலஸ்தரவிஸங்க்ராந்தே: ஸ்வரூபம்.

ஜம்பீரம் கரே கம்பளஸ்ய உஷ்ணீகா

ரூபஸ்தநமேநோதகபீதவஸ்த்ர: |

யஷ்டிர் ஹஸ்தே வாத்ரஸ்ய மேஹாஜநோ

சாணீக்ருஷ்ணபூஷாஷ்வி தைதிலேஷு க: ||

(நீலவர்ண:)

221. தைதுல் கரணத்தில் ஸங்கிராந்தி ஸ்வரூபம்.

தைதுல கரணத்தில் ஸங்கிராந்தி ஸம்பவித்தால், அப்பொழுது, சூரியன், நாவப்பழத்தை கையில் வைத்துக் கொண்டிருப்பவரும், கையில் தண்டத்தை தரித்துக் கொண்டிருப்பவரும், மல்லிகைப்பூ, கோரோஜனை, மஞ்சள் ஆடை, இவைகளை தரிப்பவரும், இருப்பு பாத்திரத்தை தரிப்பவரும் அபூபத்தை (அதிரஸம் முதலிய பக்ஷணங்களை) ஆஹாரம் செய்துகொண்டிருப்பவரும், மாணிக்கக் கற்களாலான ஆபரணங்களை அணிந்துகொண்டிருப்பவரும் ஆவார். (நீலநிறம்) (4)

௨௨௨. அத² க³ரப்ரவிஷ்டஸங்க்ராந்தே: ஸ்வரூபம்.

க³ரஜோ(ஜோ)பி விஷ்டஸ்ய து ஸஹஸ்ராக்ஷ:
கோ³ரோசிகாம் கரண: ஶய: பி³ப⁴ர்தி ।
நீலாநி வஸ்த்ராணி ச ஸீஸபாத்ரம்
ஜவாப்ரஸூநாநி க³ரே த³தா⁴தி ॥
(நீலவர்ண:)

222. கரகரணத்தில் ஸங்கிராந்தி ஸ்வரூபம்.

கரகரணத்தில் ஸங்கிராந்தி ம்பவித்தால், அப்பொழுது சூரியனுனவர், யானையின்மீது வீற்றிருப்பவரும், செம் பஞ்சுக்குழம்பை (கையில்) வைத்துக்கொண்டிருப்பவரும், கோமேதகத்தினுலே செய்யப்பட்ட ஆபரணங்களை யணிந்துகொண்டிருப்பவரும், பாலைப்பருகிக்கொண்டிருப்ப வரும், நீலநிறமான ஆடைகளையணிந்துகொண்டு இருப்பவரும், ஈயப்பாத்திரத்தை வைத்துக்கொண்டிருப்ப வரும், சம்பரத்தம்பூக்களை தரிப்பவருமாவார். (நீலநிறம்)

௨௨௩. அத² வணிக்³ப்ரவிஷ்டஸங்க்ராந்தே: ஸ்வரூபம்.

வணிக்³க³தோऽயம் மஹிஷோபவிஷ்ட:
ஸகம்ப³லோ ரக்தசந்த³நே ச(ந) ।
நீலோத்பலம் நீலமணிம் ச த⁴த்தே
த³த்⁴யந்நபோ⁴க்தா த்ரபுபாத்ரதா⁴ரீ ॥
(நீலவர்ண:)

223. வணிக்கரணத்தில் ஸங்கிராந்தி ஸ்வரூபம்.

வணிக் (வணிஜை) கரணத்தில் ஸங்கிராந்தி ஸம்பவித்தால், அப்பொழுது, சூரியன், எருமையின்மீது வீற்றிருப்பவரும்; கம்பளியில் வீற்றிருப்பவரும், (எருமையின்மீது கம்பளியில் வீற்றிருப்பவரும்) செஞ்சந்தனம், நீலக் கற்களாலான ஆபரணங்கள் இவைகளை தரிப்பவரும், தயிர்சாதத்தை புஜிப்பவரும், தொராப்பாத்திரத்தை தரிப்பவருமாவார். (நீலநிறம்) (6)

௨௨௪. அத² ப⁴த்³ராவஷ்டிஸங்க்ராந்தே: ஸ்வரூபம்.

ப⁴த்³ரே நிகுந்த: துரகோ³பவிஷ்ட:
சர்மாம்ப³ரோ மல்லிகாபுஷ்பவ்ருந்த³ம் ।
த⁴த்தே ஹரித்³ராமபி காம்ஸ்யபாத்ரம்
சித்ராங்க³ராக³: ஸ்வர்ணவிபூ⁴ஷணாட்⁴ய: ॥
(நீலவர்ண:)

224. பத்திரகரணத்தில் ஸங்கிராந்தி ஸ்வரூபம்.

பத்திர கரணத்தில் ஸங்கிராந்தி ஸம்பவித்தால், அப்பொழுது சூரியன் நிகுந்தத்தை (குந்தம் என்னும் ஆயுதத்தை) தரிப்பவனும், குதிரையின்மீது வீற்றிருப்பவனும், (மானுடைய) தோலை ஆடையாக அணிந்திருப்பவனும், குடைமல்லிகைப்பூவை தரிப்பவனும், மஞ்சளையும் வெண்கலப்பாத்திரத்தையும் தரிப்பவனும், சித்திராங்கத்தை

புஜிப்பவனும், ஸுவர்ணமயமான ஆபரணங்களை யணிந்திருப்பவனுமாவான். (நீல நிறம்) (7)

௨௨௫. அத² ஶகுநிப்ரவிஷ்ட ஸங்க்ராந்தே꞉ ஸ்வரூபம்.

ஶாகுநி ஸ்தி²த꞉ பாஶத⁴ரஶ்ச க³ந்தா⁴
ஸிந்தூ³ரவஸ்த்ராம்ப³ரபா⁴ஜநாட்⁴ய꞉ ।
ஸசம்பக꞉ பஶ்சிமதி³ஶி ப்ரயாத꞉
கு³டா³ஶந꞉ ஶாகுநிகே ரவி꞉ ஸ்யாத் ॥

(நீலவர்ண꞉)

225. சகுநியில் ஸங்கிராந்தி ஸ்வரூபம்.

சகுநி கரணத்தில் ஸங்கிராந்தி தோன்றினால், அப்பொழுது சூரியன், பாசத்தை தரிப்பவரும், கந்தை, ஸிந்தூரத்தைப்போல் சிவப்பான வஸ்திரம், வாஸனைச் சாமான்களுடன்கூடிய அல்லது சந்தனத்துடன்கூடிய பாத்திரம் இவைகளுடன் கூடியவரும், சம்பகத்துடன் கூடியவரும், (சம்பக புஷ்பமாலையையணிந்துகொண்டு இருப்பவரும்) வெல்லத்தை (சர்க்கரைப்பொங்கலை) புசிப்பவரும், மேற்கு திக்கில் (மேற்கு திக்கை நோக்கிச்) சென்றுகொண்டிருப்பவருமாவார். (நீலநிறம்) (8)

௨௨௬. அத² சதுஷ்பாத³ப்ரவிஷ்டஸங்க்ராந்தே꞉
ஸ்வரூபம்.

பர்ணாம்ப³ர꞉ பாடலஶாடதா⁴ரீ
பாத்ரம் த³தா⁴ந꞉ கார்ஷாபணாநி ।
யக்ஷே ச ஜ்யேஷ்ட²நாக³த꞉ ஸூர்ய꞉
சதுஷ்பதே³ த்³ருஶ்யதே ரவிஸ்து ॥

(நீலவர்ண꞉)

226. சதுஷ்பாதத்தில் ஸங்கிராந்தி ஸ்வரூபம்.

சதுஷ்பாதத்தில் ஸங்கிராந்தியானது ஸம்பவித்தால் அப்பொழுது சூரியனானவர், இலைகளினாலேயான ஆடையை யணிந்திருப்பவரும், சிவப்பு நிறமுள்ள மாலை, மரப் பாத்திரம் இவைகளை தரிப்பவரும், குசப்புல்லாலான ஆபரணங்களை தரிப்பவரும், அல்லது குசப்புல், ஆபரணங்கள் இவைகளை தரிப்பவரும், ஆட்டுவாஹனத்தில் செல்லுகின்றவரும், நல்ல தூக்கமுடையவரும், தேனை அருந்துகின்றவருமாவார். (நீலநிறம்) (9)

௨௨௭. அத² நாக³வகரணஸங்க்ராந்தே: ஸ்வரூபம்.

வ்ருஷஸ்தி²தோ வஸ்த்ரயுகஸ்த்ரயாணி
ம்ருத்பாத்ரமஸ்த்ரம் வரபூ⁴ஷணானி ।
குண்டா³நி பித்தஜ ஸமஸ்திமாலம்
ஹூந்தே ம்ருதம் நாக³வஸங்க்ரமேऽர்க: ॥
(நீலவர்ண:)

227. நாகவத்தில் ஸங்கிராந்தி ஸ்வரூபம்.

நாகவ கரணத்தில் ஸங்கிராந்தியானது ஸம்பவித்தால், அப்பொழுது சூரியன் விருஷப வாஹனத்திலிருப்பவரும், மர உரியை ஆடையாக அணிந்திருப்பவரும், மண்பாத்திரம், ஆயுதம் (கத்தி) பித்தங்களையினாலே செய்யப்பட்ட ஆபரணங்கள் குண்டங்கள் (சட்டி) இவைகளை தரிப்பவரும் துர்நாற்றம் வீசுகின்ற நெய்யை அருந்துகின்றவருமாவார். (நீலநிறம்) (10)

௨௨௮. கிம்ஸ்துக்⁴நகரணஸங்க்ராந்தே: ஸ்வரூபம்.

கார்ப்பாஸ ஜுஷ்டஹ்ரஸ்வ கஞ்சுகீ
கேதகீ கர்ப்பூரகுங்குமாங்க: ।

ஸகும்பாஹஸ்த தாம்ரஹஸ்தோ‌ஷணோ

வேணுபாத்ரஹஸ்தாம்ப்ரஸங்ஜ்ஞகே ||

(நீலவர்ண:)

228. கிம்ஸ்துக்நத்தில் ஸங்கிராந்தி ஸ்வரூபம்.

கிம்ஸ்துக்ந கரணத்தில் ஸங்கிராந்தி தோன்றினால் அப்பொழுது சூரியன், கோழியின்மீது வீற்றிருப்பவரும், அம்பை வைத்துக்கொண்டிருப்பவரும் சட்டையை அணிந்துகொண்டிருப்பவரும், தாழம்பூ செஞ்சந்தனங்களை தரித்துக்கொண்டிருப்பவரும், சர்க்கரையைத் தின்று கொண்டிருப்பவரும், செம்பால் செய்யப்பட்ட ஆபரணங்களையணிந்திருப்பவரும், மூங்கில் பாத்திரத்தை வைத்துக் கொண்டிருப்பவருமாவார். (நீலநிறம்)

௨௨௯. அத ஶுக்லபக்ஷஸ்ய ஸ்வரூபம்.

(நரஸிம்ஹப்ராஸாதே)

ஶுக்லபக்ஷ நரஶ்ஶுக்ல: ஜடாமகுடஸம்யுத: ।
ஶோணவஸ்த்ரோ ஜடாயுக்த: விஶாலத்ருகலங்க்ருத: ||

ஸவ்யஹஸ்தே அபாநோதயம் வாமே வாமஸ்ய
பிம்பகம் ।
ஸம்பூஜநீயோ மஹாதேவ்யா ஶுக்லபக்ஷம் ஸதோதிதே ||

(ஶ்வேதவர்ண:)

229 சுக்கிலபக்ஷத்தின் ஸ்வரூபம்.

(நிருஸிம்ஹ பிராஸாதத்தில்)

சுக்கிலபக்ஷ அபிமானி புருஷனானவர் சுக்கில பக்ஷத்தில், சடை, மகுடங்களை தரித்திருப்பவரும், சிவப்பு ஆடையை யணிந்திருப்பவரும், சடைகளுடன் கூடிய (சடைகளாலே

மறைக்கப்பட்டிருக்கின்ற) கண்களையுடையவரும் (நெற்றியில்) விசாலமான திலகத்தை தரிப்பவருமாவார். இவர், சந்திரபிம்பத்தை தன்னுடைய இடது பக்கத்தில் தரித்துக்கொண்டு, சூரியனுடைய வலது பக்கத்தில் இருப்பவராவார். இவரை சுக்லம், கிருஷ்ணம் ஆகிய இரண்டு பக்ஷங்களிலும் மிகுந்த பக்தியுடன் பூஜிக்க வேண்டும். (வெளுப்பு நிறம்)

௨௩௦. அத க்ருஷ்ணபக்ஷஸ்ய ஸ்வரூபம்.

(ந்ருஸிம்ஹபுராணே)

ஶ்யாம: க்ருஷ்ணபக்ஷஸ்து ஸிதஶோணாம்பரோ
பலீ ।

ஸவ்யே பத்மம் கரே பிப்ரச்ச வாமே
ஸாரஸம்(ஸ)யயம் ॥

பூஜநீயோ மஹாப்ரேம்ணா ப்ரதிமாஸம் ஸ ஸேவித: ॥

(க்ருஷ்ணபக்ஷ:)

230. கிருஷ்ணபக்ஷ ஸ்வரூபம்.

(நிருஸிம்ஹபுராணத்தில்)

கிருஷ்ணபக்ஷ அபிமானியான புருஷன், பச்சை நிறமாக இருப்பவரும், வெளுப்பும் சிவப்பும் கலந்த நிறமான ஆடையையணிந்திருப்பவரும், அதிகமான வலிமையுடையவரும் (வலது கையில்) சூரியபிம்பத்தையும் இடது கையில் தாமரை மலரையும் தரிப்பவருமாவார். இவரை பலத்தை அடையவேண்டி ஒவ்வொரு மாதத்திலும் பாகுபாடுடன் பூஜிக்கவேண்டும். (சுக்லபக்ஷத்தில் வலது பக்கத்தில் பூஜிக்கவேண்டுமென்று கூறியிருப்பதால், இவரை இடது பக்கத்தில் பூஜிக்கவேண்டுமென்றுகொள்ள வேண்டும்.) (கருப்பு நிறம்)

அத ஶுக்லக்ருஷ்ணபக்ஷயோ꞉ கர்தவ்யதாநாநி.

(தாநசிந்தாமணௌ விஷ்ணுதர்மோத்தரே ச)

புஷ்பாணாம் ச ஸிதே பக்ஷே தாநம் லக்ஷ்மீகரம்
ஸ்ம்ருதம் |
ஃபலாநாம் ச ததா தாநம் க்ருஷ்ணபக்ஷே மஹாஃபலம் ||

**சுக்லபக்ஷம் கிருஷ்ணபக்ஷங்களில் செய்யவேண்டிய தாநங்கள்.**

**(தாநசிந்தாமணியிலும் விஷ்ணுதருமோத்தரத்திலும்)**

சுக்கிலபக்ஷத்தில் புஷ்பங்களை தாநம் செய்வது, செல்வத்தையளிப்பதாகும் என்று கூறப்பட்டிருக்கிறது. அவ்விதமே கிருஷ்ணபக்ஷத்தில் பழங்களை தாநம் செய்வது மிகுந்த பலனையளிப்பதாகும்,

அத ஶுக்லக்ருஷ்ணபக்ஷயோ꞉ ஜாதகுணா꞉.

(ஜாதகாபரணே)

சஞ்சச்சீலாயுஸ்ஸம்பதாம் ஸம்ஶ்ரய꞉
ஶ்ரீமாந் ஸ்ரஷ்டா பூர்ணகாயகாந்தி꞉ |
ஸதா ஸதாநந்தவிநீதகாம꞉
சேஜ்ஜந்மகாலஸ்ஸிதபக்ஷபக்ஷே || க ||

ஹ்ருதாபசீர்ணோ விசலஶ்ச சோர꞉
கலிப்ரிய꞉ ஸ்வீயஜநோஜ்ஜிதஶ்ச |
உந்மாதவாதிக்ஷயதோ நிதாந்தம்
ஸிதேதரே யஸ்ய நரஸ்ய ஜந்ம || உ ||

**சுக்ல, கிருஷ்ண பக்ஷங்களில் பிறந்தவன் குணங்கள்.**

சுக்கில பக்ஷத்தில் பிறந்தவன் சுழலுகின்ற தீர்காயுளை

யுடையவனும், மிகுந்த நற்குணமுடையவனும், செல்வம் பிள்ளைகளையுடையவனும், அழகான தேஹகாந்தியை யுடையவனும், எப்பொழுதும் பிரும்ஹாநந்தத்தில் (பிரம்ஹத்தை த்யாநம் செய்து அதனாலே அடையும் ஆநந்தத்தினாலே) காலத்தைக்கழிப்பவனுமாவான். (1)

கிருஷ்ணபக்ஷத்தில் பிறந்தவன் பெரும் புகழுடையவனும், வலிமையற்றவனும், நிலையற்ற மனமுடையவனும், அல்லது அலைகின்றவனும், கவிகளிடத்தில் பிரியமுள்ளவனும், தனது குலப்பெருமையினாலே கர்வமடைந்தவனும், மிகுந்த காமமுடையவனுமாவான். (2)

௨௩௧. 𑌶𑍁𑌕𑍍𑌲𑌪𑌕𑍍𑌷𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌿 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑍍.

(𑌶𑍈𑌵𑌾𑌗𑌮𑍇)

𑌦𑌿𑌨𑍇 𑌦𑌿𑌨𑍇 𑌚 𑌪𑍂𑌰𑍍𑌯𑌮𑌾𑌣𑌵𑌹𑍍𑌨𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌯𑌮𑌾𑌦𑌿𑌦𑍈𑌵𑌤𑍈𑌃 ।
𑌆𑌪𑍍𑌯𑌾𑌯𑌮𑌾𑌨𑌪𑌕𑍍𑌷𑌾𑌯 𑌨𑌮𑌃 𑌶𑍍𑌵𑍇𑌤𑌵𑌪𑍁𑌷𑍇 ॥

(𑌶𑍍𑌵𑍇𑌤𑌵𑌰𑍍𑌣𑌃)

## 231. சுக்ல பக்ஷாபிமாநி சந்திர ஸ்வரூபம்.

(சைவாகமத்தில்)

அக்கினி, இந்திரன், யமன் முதலிய தேவர்களினாலே நிறப்பப்படுகின்ற சுக்கில பக்ஷத்தையுடையவனும், வெண்மையான சரீரத்தையுடையவனுமான (சுக்கிலபக்ஷ சந்திரனை) தினந்தோறும் வணங்குகின்றேன். (அக்கினி முதலான தேவர்கள், சுக்கிலபக்ஷம் பிரதமை முதல் பௌர்ணமி வரையில், ஒவ்வொரு திதியிலும் ஒவ்வொரு கலைவீதமாக சந்திரனுடைய கலைகளை பூர்த்தி செய்கிறார்கள். அதனால் சுக்கிலபக்ஷத்தில் சந்திரகலையானது நாள்தோறும் வளர்ந்து, பௌர்ணமியன்று சந்திரபிம்பமானது பூரணமாக முழுவட்டவடிவமாக பிரகாசிக்கின்றது என்று வேதத்தில் கூறப்பட்டிருக்கின்றது)

௨௩௨. அத க்ருஷ்ணபக்ஷாபிமானி சந்த்ரஸ்வரூபம்
(ஶைவாகமே)

தினே தினே தேவகணான் புஷ்ணதே(அ)ம்ருததாரயா ।
அஸிதாய நமஸ்துப்யம் பித்ருப்ரீதிகராய தே ॥
(க்ருஷ்ணவர்ண:)

232. கிருஷ்ணபக்ஷாபிமானி சந்திர ஸ்வரூபம்.
(சைவாகமத்தில்)

அமுததாரையினாலே தினந்தோறும் தேவகணங்களைப் போஷிப்பவனும், கருப்பு நிறமுடையவனும், பிதிருதேவதைகளுக்குப் ப்ரீதியையளிப்பவனும் கிருஷ்ணபக்ஷாபிமானி தேவதையுமான ஹே சந்திர, உன்னை வணங்குகின்றேன். (கருப்பு நிறம்)

அத ஶுக்லக்ருஷ்ணபக்ஷவிஶேஷேண த்ரிம்ஶத்ஸங்க்யாக திதீநாம் ஸ்வரூபாணி.
(ந்ருஸிம்ஹப்ரஸாதே)

௨௩௩. தத்ராதௌ திதீநாம் நாமானி.
(ஶைவாகமே)

நாமானி வக்ஷ்யே ப்ரதிபச் த்விதீயா ச த்ருதீயகா ।
சதுர்த்தீ பஞ்சமீ ஷஷ்டீ ஸப்தமீ சாஷ்டமீ ததா ॥ ௧ ॥

நவமீ ச தஶம்யேகாதஶீ த்வாதஶிகா ததா ।
த்ரயோதஶீ சதுர்தஶ்யா பஞ்சதஶிகா
ஶுக்லபக்ஷகா: ॥ ௨ ॥

43

க்ருஷ்ணே சதுர்தஶ ததா தஶ: பஞ்சதஶோ மத: ।
அமாவாஸ்யேதி பக்ஷாப்யாம் மாஸ: த்ரிம்ஶத்திதிக: ॥

## சுக்கிலபக்ஷம் கிருஷ்ணபக்ஷம் என்ற பிரிவுகளினாலே 30 எண்ணிக்கைகளான திதிகளின் ஸ்வரூபங்கள்.

### (ஸ்ரீருஸிம்ஹப்ரஸாதத்தில்)

### 233. அவைகளில் முதலில் திதிகளின் பெயர்கள்.

### (சைவாகமத்தில்)

திதிகளைக்கூறுகின்றேன். *ப்ரதிபத் (ப்ரதமை) 1, துவிதீயை 2, திருதீயை 3, சதுர்த்தீ 4, பஞ்சமீ 5, ஷஷ்டீ 6, ஸப்தமீ 7, அஷ்டமீ 8, நவமீ 9, தசமீ 10, ஏகாதசீ 11, துவாதசீ 12, திரயோதசீ 13, சதுர்தசீ 14, பூர்ணிமை 15* என சுக்ல பக்ஷத்தில் திதிகள் 15 களாம். அவ்விதமாகவே கிருஷ்ணபக்ஷத்தில் ப்ரதமை முதல் சதுர்தசி முடிய திதிகள் 14களாம். 15வது திதியானது தர்சம் (அமாவாஸ்யை) எனப்படும். இவ்விதமாக சுக்லம் கிருஷ்ணம் என்ற இரண்டு பக்ஷங்களைக்கொண்டது, 15+15=30 நாட்களைக் கொண்டது ஒருமாதமாகும்.

௨௩௪ தத்ராதௌ ஸம்ஜ்ஞாஸ்திதீநாம் ஸாரஸௌதே.

திதயோ ஹி ப்ரவக்ஷ்யந்தே ப்ரதிபச்ச த்விதீயகா
த்ருதீயா |
சேஷா ஸம்ஜ்ஞாஸ்து வா ஸ்யாத் ஸ்வேதபக்ஷாதிகா உதா ||
(ஸாரஸ்வதா)

### 234. அவற்றுள் முதலில் சுக்கில ப்ரதிபத்தின் ஸ்வரூபம்.

திதிகளின் ஸ்வரூபங்களைக்கூறுகின்றேன். சுக்லபக்ஷம் ப்ரதமை திதியின் அதிதேவதையான ப்ரதிபத்து என்பவள் 2 கைகளையுடையவளும், சிவப்பு நிறமாக இருப்பவளும், ஆட்டின்மேல் வீற்றிருப்பவளும், சக்தி, பாத்திரம் இவைகளை ஏந்திக்கொண்டிருப்பவளுமாவாள், (சிவப்பு நிறம்)

உருரு அத சுக்லத்விதீயா ஸ்வரூபம்

த்விதீயா ஹம்ஸகா ஸ்வேதா ஸ்வேத புஸ்தகதாரிணீ ।
(ஸ்வேதவர்ணா)

235. சுக்கில துவிதீயையின் ஸ்வரூபம்.

சுக்கிலபக்ஷம் துவிதீயை திதியின் அபிமானி தேவதையானவள், அன்ன வாஹனத்தின்மீது செல்லுகின்றவளும், வெளுப்பு நிறமாக இருப்பவளும், வெண்மையான புஸ்தகத்தை வைத்துக்கொண்டு இருப்பவளுமாவாள். (வெளுப்பு நிறம்)

உருசா. அத சுக்லத்ருதீயா ஸ்வரூபம்.

த்ருதீயா வ்ருஷகா கௌரா ஸ்ரூலபாத்ரகரா ததா ।
(கௌரவர்ணா)

236. சுக்கில திருதீயையின் ஸ்வரூபம்.

சுக்கிலபக்ஷம் திருதீயையின் அதிதேவதையானவள், விருஷப வாஹனத்தில் செல்லுகின்றவளும், வெளுப்பு நிறமாக இருப்பவளும், சூலம், பாத்திரம் இவைகளை கைகளில் வைத்துக்கொண்டிருப்பவளுமாவாள். (வெளுப்பு நிறம்)

உருஎ. அத சுக்லசதுர்த்தீ ஸ்வரூபம்.

நீலோத்பலாபா சதுர்த்தீ கநகஸ்திதா ।
பாஸம் ஸிஹ்ரீ பாத்ரம் பீதவஸ்த்ராவிலம்பதா ॥
(நீலோத்பலவர்ணா)

237 சுக்கிலபக்ஷம் சதுர்த்தியின் ஸ்வரூபம்.

சுக்கிலபக்ஷம் சதுர்த்தீ திதியின் அதிதேவதையானவள், நீலோத்பலத்தின் இதழ்போன்ற திருமேனியையுடைய

வளும், ஸுவர்ண மயமான ஆஸநத்தில் அல்லது ஊமத்தம் பூவில் வீற்றிருப்பவளும், மழுவையும், பாத்திரத்தையும் வைத்துக்கொண்டிருப்பவளும், பீதாம்பரத்தை தரித்துக் கொண்டிருப்பவளுமாவாள். (நீலோத்பலத்தின் நிறம்)

உகூஅ. அத ஶுக்லபஞ்சமீ த்யானம்.

பங்கஜஸ்தா ஶ்வேதஹாரா கர்ணோத்பலகபூஷணா ।
ஶங்கம் முத்ராம் ததா பாத்ரம் பிப்ராணா பஞ்சமீ மதா ॥

(ஶ்வேதவர்ணா)

238. சுக்கிலபக்ஷம் பஞ்சமியின் ஸ்வரூபம்.

சுக்கிலபக்ஷம் பஞ்சமீ திதியின் அதிதேவதையானவள், தாமரை மலரில் வீற்றிருப்பவளும், பவழநிறமான திருமேனியையுடையவளும், கழுத்து, தலை இந்த இடங்களில் ஆபரணங்களையணிந்துகொண்டிருப்பவளும், சங்கம் முத்திரை (ஜ்ஞாநமுத்திரையுடன்) பாத்திரம் இவைகளை தரிப்பவளுமாவாள். (பவழநிறம்)

உகூகூ. அத ஶுக்லஷஷ்டீ த்யானம்.

மயூரயானா ரக்தாங்கா ஷஷ்டீ பாத்ரகுக்குடதாரிணீ ।

(அருணவர்ணா)

239. சுக்கில ஷஷ்டி ஸ்வரூபம்.

சுக்கிலபக்ஷம் ஷஷ்டி திதியின் அதிதேவதையானவள், மயில் வாஹனத்தின் மீதுச் செல்லுகின்றவளும், சிவப்பு நிறமாக இருப்பவளும், பாத்திரம், கோழி இவைகளை தரித்துக்கொண்டிருப்பவளுமாவாள். (சிவப்பு நிறம்)

உசய. அத ஶுக்லஸப்தமீ த்யானம்.

ஶ்வேதவர்ணா வ்ருஷவாஹா ஹம்ஸஸ்தா ஸப்தமீ மதா ।

(ஶ்வேதவர்ணா)

240. சுக்கில ஸப்தமீ ஸ்வரூபம்.

சுக்கிலபக்ஷம் ஸப்தமீ திதியின் அதிதேவதையானவள், புரசமரத்திஞலே செய்யப்பட்ட பாத்திரத்தை வைத்துக் கொண்டிருப்பவளும், மேகத்தைப்போன்ற திருமேனியை யுடையவளும், அன்னபக்ஷியின்மீது வீற்றிருப்பவளும் ஆவாள். (மேகநிறம்)

௨௪௧. அத² ஶுக்லாஷ்டமீ த்⁴யாநம்.

ஶகடாவாஸிநீ கௌரீ கோக்ஷீரஸத்³ருஶாஷ்டமீ।

(க்ஷீரவர்ணா)

241. சுக்கில அஷ்டமீ ஸ்வரூபம்.

சுக்கில பக்ஷம் அஷ்டமியின் அதிதேவதையானவள், மணி, பாத்திரம் இவைகளை தரிப்பவளும், மாட்டுக் கொட்டிலில் வஸிப்பவளும், பசுவின்பாலைப்போன்ற வெண்மையான நிறமுடையவளுமாவாள். (பசுவின்பாலைப் போன்ற நிறம்)

௨௪௨. அத² ஶுக்லநவமீ த்⁴யாநம்.

நவமீ ஸிம்ஹகா³ ஶுப்⁴ரா பாஶபாத்ரத⁴ரா ததா² ।

(ஶ்வேதவர்ணா)

242. சுக்கில நவமீ ஸ்வரூபம்

சுக்கிலபக்ஷம் நவமியின் அதிதேவதையானவள், ஸிம்ஹ வாஹநத்தில் செல்லுகின்றவளும், வெளுப்பு நிறமான திருமேனியையுடையவளும், பாசம், பாத்திரம் இவைகளை தரித்துக்கொண்டிருப்பவளுமாவாள். (வெளுப்பு நிறம்)

௨௪௩. அத² ஶுக்லத³ஶமீ த்⁴யாநம்.

க்ருஷ்ணவர்ணா மஹாகாயா த³ஶமீ த³ண்ட³தா⁴ரிணீ ॥

(க்ருஷ்ணவர்ணா)

## 243. சுக்கில தசமீ ஸ்வரூபம்.

சுக்கிலபக்ஷம் தசமியின் அதிதேவதையானவள், கருப்பு நிறமாக இருப்பவளும், காட்டெருமையின்மீது வீற்றிருப்பவளும், தடியை கையில் வைத்துக்கொண்டு இருப்பவளுமாவாள். (கருப்பு நிறம்)

## ௨௪௪. ஶுக்ல ஏகாதஶீ ஸ்வரூபம்.

ஏகாதஶீ ம்ருகாரூடா துலாகர்த்தரிஸம்யுதா ।
ஸிதாநநா ரக்தவர்ணாக்ஷீ ஶக்ரநீலஸமத்யுதிஃ ॥
(சித்ரவர்ணா)

## 244. சுக்கில ஏகாதசீ ஸ்வரூபம்.

சுக்கிலபக்ஷம் ஏகாதசியின் அதிதேவதையானவள், மான்வாஹனத்தில் வீற்றிருப்பவளும், தராசு, கத்திரிக்கோல் இவைகளை வைத்துக்கொண்டிருப்பவளும், வெளுப்பு நிறமான முகமுடையவளும், சிவப்பு நிறமான கண்களையுடையவளும், இந்திர நீலக்கல்லைப்போன்று நீலமான சரீர காந்தியையுடையவளுமாவாள். (சித்திரவர்ணம்)

## ௨௪௫ ஶுக்ல த்வாதஶீ ஸ்வரூபம்.

த்வாதஶீ தார்க்ஷ்யாரூடா மேகவர்ணாரிபாத்ரிணீ ॥
(மேகவர்ணா)

## 245. சுக்கில துவாதசீ ஸ்வரூபம்.

சுக்கிலபக்ஷம் துவாதசியின் அதிதேவதையானவள், கருடன்மீது வீற்றிருப்பவளும், மேகத்தைப்போன்ற நிறம் உடையவளும், சக்கரம், பாத்திரம் இவைகளை தரிப்பவளும் ஆவாள். (மேகத்தின் நிறம்)

௨௪௬ அத² ஶுக்லத்ரயோத³ஶீ ஸ்வரூபம்.

சாபபா³ணத⁴ரா கௌ³ரா மகரஸ்தா² த்ரயோத³ஶீ ।

(கௌ³ரவர்ணா)

## 246. சுக்கில திரயோதசீ ஸ்வரூபம்.

சுக்கிலபக்ஷம் திரயோதசியின் அதிதேவதையானவள், வில், அம்பு, இவைகளை தரித்துக்கொண்டிருப்பவளும், வெளுப்பு நிறமானவளும், மகரமத்ஸியத்தின் மீது வீற்றிருப்பவளுமாவாள். (வெளுப்பு நிறம்)

௨௪௭ அத² ஶுக்லசதுர்த³ஶீ ஸ்வரூபம்.

அப்³ஜஸ்தா² பாடலாபா⁴ஸா ப²லபாத்ரகரா ததா² ।

நீலகண்டா² ச ரக்தாப⁴நயநா ச சதுர்த³ஶீ ॥

(பாடலவர்ணா)

## 247. சுக்கில சதுர்தசீ ஸ்வரூபம்.

சுக்கில சதுர்தசியின் அதிதேவதையானவள், தாமரை மலரில் வீற்றிருப்பவளும், பாடலவர்ணமாக (பாடலம்—வெண்சிவப்பு) இருப்பவளும், பழம், பாத்திரம் இவைகளை கைகளில் வைத்துக்கொண்டிருப்பவளும், நீலநிறமான கழுத்தையுடையவளும், பட்டுப்பூச்சியைப்போன்ற சிவப்பான கண்களையுடையவளுமாவாள். (பாடலவர்ணம்)

௨௪௮. அத² ஶுக்லபூர்ணிமா ஸ்வரூபம்.

ஶஶாங்கா பூர்ணிமா ஶுப்⁴ரா ஶக்திகாஸாரணான்விதா ।

ஸவ்யாபூர்ணம் பத்³மம் முக்தே வாமே கரேக்ஷ

வித்³யாயகம் ॥

(ஶ்வேதவர்ணா)

248. சுக்கிலபக்ஷம் பௌர்ணிமையின் ஸ்வரூபம்.

பௌர்ணிமையின் அதிதேவதையானவள், முயல் வாஹநத்தில் செல்லுகின்றவளும், வெளுப்பான சரீர காந்தியையுடையவளும், முத்துக்களாலான ஆபரணங்களை யணிந்துகொண்டிருப்பவளும், இடது கையில் அமுதம் நிறைந்த கடத்தையும், வலதுகையில் (அதன்) மூடியையும் தரிப்பவளுமாவாள். (வெளுப்பு நிறம்)

௨௪௮. அத க்ருஷ்ணப்ரதிபத்ஸ்வரூபம்.

யச்சாஸா க்ருஷ்ணபக்ஷாத்யா ஸாரஸஸ்தா சதுர்முகா ।
அஸ்த்ரம் பாத்ரம் ஸ்ருவம் சாபம் கரைர்தத்தே
சதுர்புஜா ॥

(யச்ச உர்வணா)

249. கிருஷ்ணபக்ஷம் பிரதிபத்தின் ஸ்வரூபம்.

கிருஷ்ணபக்ஷம் பிரதமையின் அதிதேவதையானவள், புழுதியின் நிறமாக இருப்பவளும், ஸாரஸபக்ஷியின்மீது வீற்றிருப்பவளும், (ஸாரஸம்—ஊர்க்குருவி என்று சிலரும், நீரில் வாழும் காடை என்று சிலரும் கூறுகின்றனர்) 4 முகங்களையுடையவளும், 4 கைகளுடையவளும், 4 கைகளிலும் அஸ்திரம், (ஆயுதவிசேஷம் அல்லது அம்பு) பாத்திரம், ஸ்ருவம் (ஹோமம் செய்வதற்காக மரத்தினாலே செய்யப்பட்ட முட்டைக்கரண்டி) வில், இவைகளை தரித்துக்கொண்டிருப்பவளுமாவாள். (புகை நிறம்)

௨௫௰. அத க்ருஷ்ணத்விதீயா ஸ்வரூபம்.

த்விதீயா கூர்மவாஹாஸா வ்ருஷ்டிஸா ஸாக்ஷகுண்டிகா ।

(ஸ்வேதவர்ணா)

## 250. கிருஷ்ணபக்ஷம் துவிதீயையின் ஸ்வரூபம்.

கிருஷ்ணபக்ஷம் துவிதீயையின் அதிதேவதையானவள், ஆம்பல் நிறமானவளும், விருஷபத்தின்மீது வீற்றிருப்பவளும், ஜபமாலையும், கமண்டலத்தையும் தரிப்பவளும் ஆவாள். (வெளுப்பு நிறம்)

உருக. அத க்ருஷ்ணத்ருதீயா ஸ்வரூபவர்ணனம்.

த்ருதீயா தாக்ஷிண்யா ஸமா நீலா ஸம்பவா ஸ்ருயரா ஸரூதா ।
(நீலவர்ணா)

## 251. கிருஷ்ண திருதீயையின் ஸ்வரூபம்.

கிருஷ்ணபக்ஷம் திருதீயையின் அதிதேவதையானவள், கருட வாஹனத்தில் செல்லுகின்றவளும், நீலநிறமாக இருப்பவளும், சங்கம், பாத்திரம் இவைகளை தரிப்பவளும் ஆவாள். (நீலநிறம்)

உருஉ. அத க்ருஷ்ணசதுர்த்தீ ஸ்வரூபவர்ணனம்.

சதுர்த்தீ கஜ்ஜலாபா ஸா மஹிஷஸ்தா சதுர்புஜா ।
யஜ்ஞோபவீதிகாம் தண்டம் பாஸம் பாத்ரம் ச தக்ஷிணே ॥
(க்ருஷ்ணவர்ணா)

## 252. கிருஷ்ண சதுர்த்தீ ஸ்வரூபம்.

கிருஷ்ண சதுர்த்தியின் அதிதேவதையானவள், மை போன்ற திருமேனியையுடையவளும், எருமையின் மீது வீற்றிருப்பவளும், 4 கைகளுடையவளும், (வலது கைகளில் ஜபமாலை, தண்டங்களையும், இடது கைகளில் பாசம் பாத்திரங்களையும் வஹிப்பவளுமாவாள். (கருப்பு நிறம்)

உருஙு. அத க்ருஷ்ணபஞ்சமீ ஸ்வரூபவர்ணனம்.

ஶ்ராவஸ்தா சந்த்ரிகா ஶுப்ரா பஞ்சமீ ஸாக்ஷகுண்டிகா ।
(ஶ்வேதவர்ணா)

253. க்ருஷ்ணபஞ்சமியின் ஸ்வரூபம்

க்ருஷ்ணபக்ஷம் பஞ்சமியின் அதிதேவதையானவள், நிலவைப்போன்ற வெளுப்பு நிறமானவளும், ஜபமாலை, கிண்டி இவைகளை தரிப்பவளுமாவாள். (வெளுப்புநிறம்)

௨௫௪ அத² க்ருஷ்ணஷஷ்டீ ஸ்வரூபம்

த்ர்யக்ஷா மயூரகா³ ரக்தா ஶக்திகுக்குடதா⁴ரிணீ ।
ஏகாஸ்யா த்³விபு⁴ஜா ஷஷ்டீ ரக்தவஸ்த்ராவகுண்டி²தா ॥
நீலகுண்ட³லகா வஶ்யா ஜடாசந்த்³ரவிபூ⁴ஷிதா ।

(ரக்தவர்ணா)

254. க்ருஷ்ணபக்ஷ ஷஷ்டீ ஸ்வரூபம்.

க்ருஷ்ணபக்ஷம் ஷஷ்டியின் அதிதேவதையானவள் 3 கண்களுடையவளும், மயில் வாஹநத்தில் செல்லுகின்றவளும், சக்தி, கோழி இவைகளை தரிப்பவளும், ஒரே முகமுடையவளும், 2 கைகளுடையவளும், சிவப்பு ஆடையை அணிந்துகொண்டு பிரகாசிப்பவளும், நீலக்கற்களாலே செய்யப்பட்ட குண்டலங்களையணிந்து கொண்டிருப்பவளும், வசியம் செய்யும் சாமர்த்தியமுடையவளும், அல்லது தன்னடக்கமுடையவளும், ஜடையில் சந்திரகலையை அலங்காரமாக தரித்திருப்பவளுமாவாள். (சிவப்பு நிறம்)

௨௫௫. அத² க்ருஷ்ணஸப்தமீ ஸ்வரூபம்.

க³ஜஸ்தா² ஸப்தமீ கௌ³ரா த்³விபு⁴ஜா வஜ்ரயந்த்ரிணீ ॥

(கௌ³ரவர்ணா)

255. க்ருஷ்ணபக்ஷம் ஸப்தமீ ஸ்வரூபம்.

க்ருஷ்ணபக்ஷம், ஸப்தமியின் அதிதேவதையானவள், யானையின்மீது வீற்றிருப்பவளும், வெளுப்பு நிறமாக

இருப்பவளும், 2 கைகளுடையவளும், வஜ்ஜிராயுதத்தை பிரயோகிப்பதில் ஆற்றலுடையவளுமாவாள். (வெளுப்பு நிறம்)

௨௫௬. அத² க்ருஷ்ணாஷ்டமீ ஸ்வரூபம்.

ப்ரேதகா³ சாஷ்டமீ ரக்தா க்ருஷ்ணக்³ரீவா ஶுபா⁴ ஶுபா⁴ |
அக்ஷம் கேடம் ததா² க²ட்³க³ம் பாத்ரம் த³தே⁴ சதுர்பு⁴ஜா ||
(ரக்தவர்ணா)

256. கிருஷ்ணபக்ஷம் அஷ்டமியின் ஸ்வரூபம்.

கிருஷ்ணபக்ஷம் அஷ்டமியின் அதிதேவதையானவள், பிரேதத்தின் மேலே செல்லுகின்றவளும், சிவப்பு நிறம் உடையவளும், கருப்பான கழுத்தையுடையவளும், மங்கள கரமான குணங்களுடையவளும், 4 கைகளுடையவளும், கைகளில் ஜபமாலை, கேடயம், கத்தி, பாத்திரம் இவைகளை தரிப்பவளுமாவாள். (சிவப்பு நிறம்)

௨௫௭. அத² க்ருஷ்ணநவமீ ஸ்வரூபம்.

ஸர்பகா³ நவமீ தாலத³ம்ஷ்ட்ரிணீ ஶ்யாமளா ஶுபா⁴ |
(ஶ்யாமளவர்ணா)

257. கிருஷ்ணபக்ஷம் நவமியின் ஸ்வரூபம்.

கிருஷ்ணபக்ஷம் நவமியின் அதிதேவதையானவள், ஸர்பத்தின் மீதேறிச்செல்லுகின்றவளும், பனையை (பனமரத்தைப்போன்ற அல்லது பனங்காயைப்போன்ற) தெத்திப்பற்களையுடையவளும், பச்சை நிறமாக இருப்பவளுமாவாள். (பச்சை நிறம்)

௨௫௮. அத² க்ருஷ்ணத³ஶமீ ஸ்வரூபம்.

ஸிம்ஹாஸநஸ்தி²தா ஶுப்⁴ரா த³ஶமீ பீதகஞ்சுகா |

ஜ்ஞாநமுத்ராபயா தேவீ ஸிதவஸ்த்ராபூஷிதா ॥

(ஸுவர்ணா)

258. கிருஷ்ணபக்ஷம் தசமியின் ஸ்வரூபம்.

கிருஷ்ணபக்ஷம் தசமியின் அதிதேவதையானவள், ஸிம்ஹாஸநத்தில் வீற்றிருப்பவளும், வெளுப்பு நிறமான திருமேனியையுடையவளும், மஞ்சள் நிறமான (ஸுவர்ண மயமான) குண்டலங்களை அணிந்திருப்பவளும், ஜ்ஞாந முத்திரை, அபயம் இவைகளையுடையவளும், மஞ்சள் நிறமான ஆடையையணிந்திருப்பவளும், தாமரை மாலையை யணிந்துகொண்டிருப்பவளுமாவாள். (வெளுப்பு நிறம்)

௨௫௯ அத க்ருஷ்ணைகாதசீ ஸ்வரூபம்.

ஏகாதசீ வ்ருஷாரூடா நீலவர்ணா த்ரிசூலிநீ ।

(நீலவர்ணா)

259. கிருஷ்ணபக்ஷம் ஏகாதசியின் ஸ்வரூபம்.

கிருஷ்ணபக்ஷம் ஏகாதசியின் அதிதேவதையானவள், விருஷப வாஹநத்தின் மேலிருப்பவளும், நீல நிறமானவளும், முச்சூலத்தை தரித்துக்கொண்டிருப்பவளுமாவாள். (நீல நிறம்.)

௨௬0. அத க்ருஷ்ணத்வாதசீ ஸ்வரூபம்.

ரக்தவர்ணா ரதாரூடா வாத்யவேதாஸிபங்கஜா ।

த்வாதசீ தேவி ரூபேயம் நீலகம்பளபூஷிதா ॥

(ரக்தவர்ணா)

260. கிருஷ்ணபக்ஷம் துவாதசியின் ஸ்வரூபம்.

கிருஷ்ணபக்ஷம் துவாதசியின் அதிதேவதையானவள், சிவப்பு நிறமானவளும், ரதத்திலேரிக்கொண்டிருப்பவளும்,

பாத்திரம்—கேடயம்—கத்தி—தாமரைப்பூ இவைகளை தரிப்பவளும், வெளுப்பு ஆடையையணிந்துகொண்டிருப்பவளும், நீலத்தினலான குண்டலத்தை தரிப்பவளும் ஆவாள். (கருப்பு நிறம்.)

உசூக. அத க்ருஷ்ண த்ரயோதஶீ ஸ்வரூபம்.

அஶோககுஸுமாபாணசாபபாத்ராயுதா ॥
விஹங்கா சோரகாரூடா க்ருஷ்ணவர்ணா த்ரயோதஶீ ॥
(க்ருஷ்ணவர்ணா)

261. கிருஷ்ணபக்ஷம் திரயோதசியின் ஸ்வரூபம்.

கிருஷ்ணபக்ஷம் திரயோதசியின் அதிதேவதையானவள், அசோகத்தின் பூங்கொத்து—அம்பு—வில்—பாத்திரம் இவைகளை தரித்துக்கொண்டிருப்பவளும், 2 கைகளை உடையவளும், பாம்பின்மீது வீற்றிருப்பவளும், கருப்பு நிறமானவளுமாவாள். (அசோகம்—புரசு, நீர்நொச்சி) (கருப்பு நிறம்.)

உசூஉ அத க்ருஷ்ணசதுர்தஶீ ஸ்வரூபம்.

கட்கம்ருகாதிரூடா நீலா த்விபுஜா ச சதுர்தஶீ ।
(நீலவர்ணா)

262. கிருஷ்ணபக்ஷம் சதுர்தசியின் ஸ்வரூபம்.

கிருஷ்ணபக்ஷம் சதுர்தசியின் அதிதேவதையானவள், கட்கமிருகத்தின்மீது வீற்றிருப்பவளும், (கட்கம்-காண்டாமிருகம்) பெருமையுடையவளும், நீலநிறமாக இருப்பவளும், 2 கைகளுடையவளுமாவாள். (நீலநிறம்.)

உசூ௩.. அத க்ருஷ்ணாமாவாஸ்யா ஸ்வரூபம்.

அமாவாஸ்யா வியாதவ்யா விசேஷாத்கதஶூலா ।

ஹூாஸ கஹூிதா ஞெயம் ஊஹூஷிஂஸயாா கூரமா ॥

(௨௰ கூதவணா-ூா)

## 263. அமாவாஸியையின் ஸ்வரூபம்.

கிருஷ்ணபக்ஷம் அமாவாஸியை திதியின் அதிதேவதை யானவள், 2 கைகளுடையவளும், மரகதப்பச்சைக் கல்லைப் போன்ற சரீர காந்தியையுடையவளும், தர்பைப்புற்களால் ஆன ஆஸநத்தில் வீற்றிருப்பவளும், தர்பைப்புல்லையும், பிண்டத்தையும், தரிப்பவளும், மெலிந்த சரீரத்தையுடையவளுமாவாள். அமாவாஸியை தேவியை இவ்வித லக்ஷணங்களுடன் கல்பிக்கவேண்டும். [எனவே திதி தேவதைகளை, கீழே கூறப்பட்டிருக்கின்ற லக்ஷணங்களுடன் கல்பிக்க வேண்டும் என்று பொருள் கொள்ளவேண்டும்.] (மரகதத்தின் நிறம்.)

அம ஶுக்லப்ரதிவதாதிஷு கதவ்யகூாத்ாநி —

(தைவஜ்ஞவிலாஸே)

தத்ர ப்ரதிவதி.

ஶோஹாஶ்மவ்ருக்ஷஶயநாதி கூரஷிஃ விசித்ரயாஶவி வ ।

ஶஸ்த்ராவகரணம் தத்ர திமள ப்ரதிவதீரிதம் ॥

### சுக்கிலபக்ஷப் பிரதமை முதலான திதிகளில் செய்யக்கூடிய காரியங்கள்.

(தைவஜ்ஞ விலாசத்தில்)

அவைகளுள் பிரதமையில்

உலோகம் கருங்கல், மரம் இவைகளில் சித்திரவேலைகள் செய்தல், பாய்முடைதல் முதலிய படுக்கைகளில் சித்திர வேலைகள் செய்தல், சித்திரங்கள் வரைதல், போர்க்கருவிகளை (கத்தி முதலிய ஆயுதங்களை)ச்செய்தல், இவை

களுக்கு பிரதமை திதியானது சிறந்ததாகும் என்று கூறப்பட்டிருக்கிறது.

த்விதீயாயாம்.

ஸோமீவிவாஹயாத்ராதி ப்ரதிஷ்டா பூஷணாதிகம்।
பௌஷ்டிகவாஸ்த்வாதிகம் கார்யம் த்விதீயாயாம் விதீயதே॥

துவிதீயையில்

துவிதீயையில், முஞ்சிப்புல்லாலே செய்யக்கூடிய வேலைகள் விவாஹம், யாத்திரை, தேவதாபிரதிஷ்டை, ஆபரணங்கள், புஷ்டிகரமான காரியங்கள், வீடுகட்டுவது, முதலான காரியங்களைச் செய்யவேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கின்றது.

த்ருதீயாயாம்.

ஸங்கீதவாத்யசித்ரசிஷ்ப
ஸீமந்தவாஸ்துக்ருஹப்ரதிஷ்டா:।
கார்யம் த்விதீயே திவஸே யதுக்தம்
ததா த்ருதீயே திவஸேபி தச்ச ஸர்வம்॥

திருதீயையில்

ஸங்கீதம், வாத்தியம், ஸகலவிதமான சித்திர காரியங்கள், வீடுகட்டுதல் (கிருஹப்பிரவேசம்) இவைகள், திருதீயைதிதியில் செய்யத்தக்கவைகளாகும். துவிதீயையில் செய்யத்தக்கவைகளாகக் கூறப்பட்டவைகளும் (திருதீயையிலும்) செய்யத்தக்கவைகளாகும்.

சதுர்த்யாம்.

ரிக்தாஸு கர்த்தனவதபந்தனசஸ்த்ர(சஸ்த்ர)
விஷாக்நிகாதாதி ச யாதி ஸித்திம்।

யஜ்ஞயூம் தாவஸ் கூரதம் வ காலெவை
விநாஶகாயாதி தயாநாகாவஸ் ॥

சதுர்தியில்

சதுர்த்தியில், ரிக்தாதிகளில் (ரிக்தா—சதுர்தி, நவமி, சதுர்தசி இந்த 3 திதிகள்) வதம், பந்தனம், சஸ்திரம், (ஆயுதம்) விஷம், அக்கினி, பூதாதிஸித்தி இவைகளைச் செய்தால் அவைகள் ஸித்தியாகும். மங்களகரமான காரியங்களைச் செய்தால், ஒரு மாஸகாலத்தில் அழிவடையும். அவ்விதமே மாதந்தோறும் அழிவடையும்.

வஞ்சம்யாம்.

யாத்ராவ நயநொவா ஹவ்ரதிஷ்டாஶாஞ்திவஶஷ்டிகம் ।
விரஶம் ஷ்திரஶம் ஸவாநுகஉ வஞ்சம்யாம் ஸமாரிதம் ॥

பஞ்சமியில்

பஞ்சமியில், யாத்திரை, உபநயநம், விவாஹம், (தேவதாதி) பிரதிஷ்டை, சாந்திகமான காரியம், புஷ்டிகரமான காரியம், இவைகளை பஞ்சமியில் செய்யவேண்டும். பஞ்சமியில் (துவக்கிச்) செய்யப்படுகின்ற காரியமானது பஞ்சமியில் செய்யப்படும் ஸகல காரியங்களும், வெகுகாலம் நிலைத்திருப்பவைகளாம். என்று கூறப்பட்டிருக்கின்றது.

ஷஷ்ட்யாம்.

ஸேவாஹதேஷணமொவாஸ்ஸஸஉரகூயவிகூயம் ।
ஹதேஷாகஉ வ ஹைஷஜ்யம் ஸவாம் ஷஷ்ட்யாம்
விதீயதெ ॥

ஷஷ்டியில்

ஸேவித்தல் (அண்டிப்பிழைப்பது) பூஷணம்—பசுமாடு—வீடு—யுத்தம்—விலைக்கு வாங்குவது, விற்பது,

பூஷண காரியம், மருந்து, இவை யாவும் ஷஷ்டி திதியில் செய்யவேண்டுமென்று கூறப்பட்டிருக்கின்றது.

ஸப்தம்யாம்.

வாஸ்தூபநயனோத்வாஹப்ரதிஷ்டாசரஸ்திரம் |
க்ருஷிபூஷணஸங்க்ராமம் ஸப்தம்யாம் ஸமாசரேத் ||

ஸப்தமியில்

வீடு கட்டுதல், உபநயனம், விவாஹம், தேவதா பிரதிஷ்டை முதலான சரஸ்திர காரியங்கள், (சரம்—இடம் மாறுவது. ஸ்திரம்—அசைவற்றிருப்பது.) பயிரிடுதல், ஆபரணங்கள், யுத்தம் இவைகளை ஸப்தமியில் செய்ய வேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது.

ப்ரகாராந்தரம் —

த்விதீயாயாம் த்ருதீயாயாம் பஞ்சம்யாம் கதிதானி ச |
தானி ஸித்த்யந்தி கார்யாணி ஸப்தம்யாமபி நித்யஶ: ||

மற்றொருவிதம்

துவிதீயை, திருதீயை, பஞ்சமி இவைகளில் கூறப்பட்டிருக்கின்ற காரியங்கள் யாவும், ஸப்தமியில் செய்வதனால் ஸித்திக்கும்.

அஷ்டம்யாம்.

ஸங்க்ராமயானாயுதவாஸ்துஶில்ப
வ்ருத்தப்ரகோபாயுதவேதனானி |
44 ஸ்த்ரீரத்னபாயுதபூஷணானி
கார்யாண்யகார்யாணி ச ஹஸ்திகாயாம் ||

### அஷ்டமியில்

யுத்தம், தாரியம், ஸகலவிதமான வாஸ்து காரியங்கள், சில்ப காரியங்கள், கோபத்தினால் செய்யப்படுகின்ற காரியங்கள், ஸகலவிதமான லேகநங்கள், ஸ்திரீஸம்பந்தமான காரியங்கள், ரத்நங்கள், பலவிதமான ஆபரணங்கள், இவைகள் ஸம்பந்தமான காரியங்களை அஷ்டமிதிதியில் செய்யலாகாது.

### நவம்யாம்.

விக்ரஹம் நிக்ரஹம் சைவ ஶத்ரூச்சேதநபேதநம் ।
நவம்யாம் பூதகார்யாணி பஹூந்யபி ச காரயேத் ॥

### நவமியில்

போரிடுதல், பகையை சிறையிடுதல், அல்லது விரட்டுதல், சத்துருக்களையழித்தல், பேதநம் செய்தல் (மித்திரர்களாக இருப்பவர்களுள் பேதபுத்தியையுண்டுபண்ணுதல்) பற்பலவிதமான பூதகாரியங்கள் (பூதஸித்தி முதலியவைகள்) இவைகளை நவமியில் செய்யவேண்டும்.

### தஶம்யாம்.

பௌஷ்டிகம் மங்களம் யாத்ரா ப்ரவேஶம் ஜலகர்ம ச ।
தர்ஶநம் க்ருஹகார்யாணி தஶம்யாம் காரயேத் புத: ॥

### தசமியில்

சரீரபுஷ்டியைத்தரக்கூடிய காரியங்கள், மங்களகரமான காரியங்கள், பிரயாணம் செய்தல், மனைபுகுதல், ஜலஸம்பந்தமான காரியங்கள், குறிப்பிட்ட நபரைக் காணுவது, வீட்டுக்காரியங்கள், இவைகளை, புத்திமானாக இருப்பவன் தசமீ திதியில் செய்யவேண்டும்.

ஏகாதஶ்யாம்.

விவாஹக்ருஷிவாணிஜ்யோபவாஸாதி ஹி பூஷணம் ।
வாஸ்துகம் ஶில்பக்ருத்யாத்யமேகாதஶ்யாம் விதீயதே ॥

ஏகாதசியில்

விவாஹம், பயிரிடுதல், வியாபாரம், உபவாஸம் முதலியன, ஆபரணம், வாஸ்து காரியங்கள், சில்ப காரியங்கள் இவைகளை, ஏகாதசியில் செய்யவேண்டும்.

த்வாதஶ்யாம்.

வ்ருத்திவ்யயானி கார்யாணி தர்மவ்ருத்திகராணி ச ।
சரஸ்திராணி த்வாதஶ்யாமன்யத்ர ஶ்ரவணம் வினா ॥

துவாதசியில்

(தநம் தானியம் முதலியவைகளை) பெருக்குவது, செலவு செய்வது ஆகிய காரியங்களையும், தருமமானது நிலைத்திருப்பதற்கான காரியங்களையும், சரகாரியங்கள், ஸ்திர காரியங்கள் இவைகளையும், (சரம்—நிலைமற்றது, ஸ்திரம்—நிலைத்திருப்பது) சிரவண துவாதசி நீங்கலான மற்ற துவாதசியில் செய்யவேண்டும். (சிரவண துவாதசி—சிரவண நக்ஷத்திரத்துடன் கூடிய துவாதசி. சிரவணம்—திருவோணம்.)

த்ரயோதஶ்யாம்.

க்ஷேமம் த்ருவம் ச ஸௌபாக்யம் ஸங்கமம் நாட்ய பூஷணம் ।
அப்யபிஷேகம் ததா சைவம் த்ரயோதஶ்யாம் து காரயேத் ॥

திரயோதசியில்

க்ஷேமகரமான காரியங்கள், நிலைத்திருக்கவேண்டிய காரியங்கள், ஸௌபாக்கியத்தைக் கொடுக்கக்கூடிய

காரியங்கள், மங்களகரமான காரியங்கள், நாட்டியம், ஆபரணங்கள், அசுவசிக்ஷை, எழுதுவது இவைகளை, திரயோதசியில் செய்யவேண்டும்.

சதுர்தஶீப்ரஶஸ்தி.

* உத்ஸவாந்மேகலம் ச ஸாஹஸம் யாத்ராப்ரயாணகம் ।
சதுர்தஶீம் ந குர்வீத ஸர்வகார்யாணி வா ॥

சதுர்தசியில்

பல் துலக்குவது, தைலம், (தேய்த்துக்கொள்ளுவது) மாம்ஸம், (புசிப்பது) யாத்திரை, (செய்வது) உபநயநம், (செய்வது) மற்றும் சுபகாரியங்கள், இவைகளை சதுர்தசி திதியில் செய்யக்கூடாது,

பௌர்ணமாஸீப்ரஶஸ்தி.

யஜ்ஞக்ரியாமங்களபௌஷ்டிகாநி
ஸங்க்ராமயோக்யாநிக்ருஹாணிசைவ ।
உத்வாஹஶில்பாபரணப்ரதிஷ்டாம் (ஷ்டாம்)
குர்யாத்ப்ரதிஷ்டா வரா பௌர்ணமாஸ்யாம் ॥

பௌர்ணமியில்

வேள்விச்சடங்குகள், மங்களகரமான காரியங்கள், சரீர புஷ்டியையளிக்கும் மருந்துண்ணல் முதலிய காரியங்கள், போர்புரிவதற்குவேண்டிய ஸகல காரியங்கள், வீடு ஸம்பந்தமான காரியங்கள், திருமணம், சில்பகலைகள், ஆபரணங்கள், தேவதாபிரதிஷ்டை இவைகளை, பௌர்ணமீ திதியில் செய்யவேண்டும்.

அமாவாஸ்யாயாம்.

அமாயாம் பித்ருகர்மைகம் குர்யாத்பித்ரு தர்பணம் ।

---

* மேகலம் உத்ஸவம் [illegible] யாத்ரா வா: ।

## அமாவாஸியையில்

அமாவாஸியை திதியில், பிதிருக்களுக்குச்செய்ய வேண்டிய காரியத்தை மட்டிலும் செய்யவேண்டும். மற்ற எந்தக்காரியத்தையும் செய்யக்கூடாது.

அத ஶுக்லக்ருஷ்ணப்ரதிபதாதிதிதிஷு விஷநாடீ ப்ரவேஶகால:.

(ஸாராவள்யாம்)

ஶயோ கஅ. ஶயா கச. ஶயோ ககூ நாமா ௬௰
வஸு உச. நாடீ உ௰. வஸு உஉ. வஸு உச |
வஸு உஉ வஸு உச. கவிம் சக. விஷ்ணும் ருச-
ஸாஶும் ௬உ. ஸாகம் கஎ. வியத் கச க்ரமாத் ॥

ப்ரகாராந்தரேண --

(உத்தரகாலாம்ருதே)

திதி கரு. பாணா ரு, ஷட் அ. ஸப்தா எ. ஐ கூ.
வஸு ரு. வேதா ச. ஷட் அ ஸப்தா: எ.।.
த்ரிக கஐ. வஸ்ரோ ௬. கர்ம கஉ. உநா கச. க்ஷோணீஶ்ச எ
வஸவோ அ. வஸ்தா: க்ரமாத் ॥

### சுக்கில–கிருஷ்ண–பிரதமை முதலான திதிகளில் விஷநாடி பிரவேசகாலம்.

(ஸாராவளியில்)

சுக்கிலபக்ஷம் கிருஷ்ணபக்ஷங்களில் பிரதமை முதலான திதிகளில் முறையே பதினெட்டு 18, பதினான்கு 14, பதிமூன்று 13, முப்பது 30, இருபத்திநான்கு 24, இருபது 20, இருபத்திரண்டு 22, இருபத்திநான்கு 24 இருபத்திரண்டு 22, இருபத்திநான்கு 24, நாற்பத்தொன்று 4', ஐம்பத்தி நான்கு 54, முப்பத்திரண்டு 32, பதினேழு 17, பதினான்கு 14

இவைகளில் விஷநாடீ பிரவேசமாம். (இந்த நாழிகை களுக்குப்பிறகு 4 நாழிகை காலம் விஷநாடி காலமாகும் என்று கொள்ளவேண்டும்)

மற்றொரு முறை—(முஹூர்த்த கணபதி என்னும் நூலில்)

பிரதமை முதலிய திதிகளில் முறையே பதினைந்து 15, ஐந்து 5, எட்டு 8, ஏழு 7, ஆறு 6, ஐந்து 5, நான்கு 4, எட்டு 8, ஏழு 7, பத்து 10, மூன்று 3, பன்னிரண்டு 12, பதினான்கு 14, ஏழு 7, எட்டு 8 இந்த நாழிகைகள் விஷநாடீ காலமாம். (இந்த நாழிகைகளுக்குப்பிறகு 4 நாழிகை காலம் விஷநாடீ காலமாகும் என்று பொருள் கொள்ள வேண்டும்.)

உ௬௩. ௬௰ ஸங்க்யா திவஸாதி திதிஷு

ஷட் த்ரிம்சன்னாடி

(நாரதீயஸம்ஹிதாயாம் விஷ்ணுதர்மோத்தரே ச)

ப்ரதிபத்யஷ்டானாம் த்விதீயாயாம் ஸப்ததசஸ்ய ச ।
த்ருதீயாயாம் த்வயம் ஷண்ணாம் சதுர்த்யாம் ரஜதஸ்ய ச ॥
பஞ்சம்யாம் து ஸுராணாம் ச ஷஷ்ட்யாம் ஷண்ணவஸ்ய

நாடிகா: ।

ஸப்தம்யாம் பாலஸாம் சைவ அஷ்டம்யாம் சைவ

ஸுஸஸ்ய ச ॥ உ ॥

நவம்யாம் ஷோடசஸ்ய நவம்யாம் து தசம்யாம் ஹோரநவஸ்ய ச ।
ஏகாதச்யாம் ஸப்தஸ்ய த்வாதச்யாம்

ஸப்தஸ்ய ச ௩ ॥

த்ரயோதச்யாம் ச ஷஷ்டானாம் ஸிதாயாம் ஸப்ததசாம் ।
நாடிம் ச பஞ்சதசஸ்ய பஞ்சதச்யாம் உஹாஹநம் ॥

## சுக்கில பிரதமை முதலிய திதிகளில் செய்யவேண்டிய தானங்கள்.

## (தானசிந்தாமணியிலும், விஷ்ணுதர்மோத்தரத்திலும்)

*பிரதமையில் புஷ்பங்களையும், த்விதீயையில் நெய்யை யும், திருதீயையில் பிரியங்குவையும், (பிரியங்கு—சாமை.) சதுர்த்தியில் வெள்ளியையும், பஞ்சமியில் பழங்களையும் ஷஷ்டியில் ஸ்நானத்தையும், ஸப்தமியில் வஸ்திரங்களையும், அஷ்டமியில் வெல்லத்தையும், நவமியில் குல்மாஷத்தையும் (குல்மாஷம்—மிளகு முதலியவைகளுடன் ருசியாகவும் வாஸனையுள்ளதாகவுமிருக்கின்ற கஞ்சி.) தசமியில் நல்ல போஜனத்தையும், ஏகாதசியில் தங்கத்தையும், துவாதசியில் வஸ்திரத்தையும், திரயோதசியில் வாஸனைதிரவியங்களையும், சதுர்தசியில் கல்கண்டையும், பஞ்சதசியில் பரமான்ன மென்று கூறப்படுகின்ற பாயஸத்தையும், தானம் செய் வதனால் மிகச்சிறந்த பலன் கிடைக்கும்.*

அத ஶுக்லக்ருஷ்ணப்ரதிபதாதி திதிஷு
ஜாதாநாம் குணா:.

(காலப்ரகாஶே) ப்ரதிபதி—

ப்ரதிபத்ஸு யநாட்ய: ஸ்யாச் ஜாத: ஸுண்யரத:
ஸதா ॥

## சுக்கில—கிருஷ்ண பிரதமை முதலிய திதிகளில் பிறந்தவர்களின் குணங்கள்

## (காலப்பிரகாசத்தில்)

(அவற்றுள்) பிரதமையில்.

*பிரதமைதிதியில் பிறந்த மனிதன், செல்வம் நிறைந்தவ னாகவும், புண்ணியமான காரியங்களில் பற்றுதலுடையவ னாகவுமிருப்பான்,*

த்விதீயாயாம் —

விஶோகஶ்ச கவி: காந்த: காமாந்த: கலஹப்ரிய: |
த்விதீயாயாம் தா ஸஞ்ஜாதோ மோயாநாத்யபதி பஶுவேச ||

துவிதீயையில்.

துவிதீயை திதியில் பிறந்தவன், துக்கமற்றவனும், கவியும், அழகுடையவனும், காமமுடையவனும், கலகத்தை விளைவிப்பதில் பிரியமுடையவனும், பசுமாடுகள், தானியங்கள் இவைகளுக்கு அதிபதியுமாவான்.

த்ருதீயாயாம் —

ஜபஶீலோ யநாட்யஶ்ச வாணப்ரஶீல: ஸாதுவவாது |
யோவீ வாக்மோ விஷாது ஜாதஸ்ஸ்லோ ஜயாதியள ||

திருதீயையில்.

திருதீயை திதியில் பிறந்தவன் ஜபம் செய்துகொண் டிருப்பவனும், செல்வமுடையவனும், நல்ல காரியங்களை செய்பவனும், நல்ல அழகுடையவனும், புத்தியில் சிறந்த வனும், நன்கு பேசககூடியவனும், பண்டிதனும், தூய்மை யுடையவனுமாவான்.

சதுர்த்யாம் —

தீக்ஷ்ணவேஷ: க்ரூரஶீலஶ்ச க்ருதவீ மந்த்ரதந்த்ரவித் |
சதுர்த்யாம் ச திதௌ ஜாத: ஸாஹஸாஹவகௌதுக: ||

சதுர்த்தியில்.

சதுர்த்தி திதியில் ஜனித்தவன், வருந்தத்தக்க செய்கை யுடையவனும், கெட்ட ஸ்வபாவமுடையவனும், சொத்தை நகமுடையவனும், மந்திரம், தந்திரங்களையறிந்தவனும்,

நல்லது கெட்டது எல்லாவற்றையும் ஸமமாக நினைப்பவனும், (அசடன் என்பது பொருள்) முரட்டுத்தனமாக காரியங்களை செய்பவனுமாவான்.

ஶ்லோகம் —

ஸஸ்த்ரீ: காமீ கலாஜ்ஞ: க்ஷமீ ஸாஶ்ரிதவத்ஸல: ।
பஞ்சம்யாம் ஜாத: காருண்யாந்வித: கவி: ॥

பஞ்சமீதிதியில்.

பஞ்சமீதிதியில் பிறந்தவன், அழகாக இருப்பவனும், காமமுடையவனும், கலைகளைக்கற்றவனும், பொறுமையுடையவனும், அண்டியவர்களிடத்தில் அன்புடையவனும், கருணை நிறைந்த சரிதையையுடையவனும் (கருணையோடு காரியங்களைச் செய்பவனும்) கவியுமாவான்.

ஶ்லோகம் —

அஜய்யோ ஸுபலோ ஸ்யாத: ஸ்வல்பகோபீ ஜநாதிப: ।
முகபார்ஶ்வோருதிலக: ஷஷ்ட்யாம் ஸஞ்ஜாயதே நர: ॥

ஷஷ்டியில்.

ஷஷ்டி திதியில் பிறந்த மனிதன், ஜயிக்கமுடியாதவனும், சிறந்தபலமுடையவனும், அல்லது மனோபலமுடையவனும், பிரஸித்தியுடையவனும், ஸுலபமாக கோபம் அடையக்கூடியவனும், ஜனங்களுக்கு எஜமானனாக இருப்பவனும், முகம், பிருஷ்டம், துடை இவைகளில் திலகமுடையவனும், (திலகம் — மச்சம்) ஆவான்.

ஶ்லோகம் —

தேஜஸ்வீ ஸுபலோ ஶ்ரீமான் ஸ்வார்ஜிதாத்மக: ।
ஸுரூபீ ஸுத்ருட்தேஹ: ஸ்யாத் ஜாதஸ்ஸப்தம்யாம்
ஸ்ருஜா: ॥

ஸப்தமியில்.

ஸப்தமீ திதியில் பிறந்தவன், சிறந்த புத்திஸாமர்த்திய முடையவனும், ஸத்துவகுண முடையவனும், அல்லது பலம் அல்லது மிகுபலமுடையவனும், நிறைந்த செல்வமுடைய வனும், கருத்த சரீரமுடையவனும், கலைகளின் உருவமாக இருப்பவனும், ஆக்கல், காத்தல், அழித்தல் இவைகளில் ஸாமர்த்தியமுடையவனும், பிரபுவுமாவான். (பிரபு எதையும் செய்யும் ஸாமர்த்தியமுடையவன் எஜமானன். நிறைந்த செல்வமுடையவன் என்பன பொருள்.)

அஷ்டமீ —

ஹ்ருஷ்ட: கஷ்டஸ்ரம ஸ்ரீசாலீவ்ருக்தி: கஷோதக: ।
காரீ கருத்துவாது தாமீ அஷ்டமீ ஜாயதே நர: ॥

அஷ்டமியில்.

அஷ்டமீ திதியில் பிறந்த மனிதன், ஸந்தோஷமுடைய வனும், கஷ்டப்படுகின்றவனும் ஆரோக்கியத்தனமுடைய வனும், அல்லது பிறரறியாமல் தீங்கு செய்கின்றவனும், செல்வமுடையவனும், சீக்ரமான வியாபாரமுடைய வனும், கபாதிகமான சரீரமுடையவனும், காமமுடைய வனும், மனைவியுடனிருப்பவனும், த்யாகம் செய்கின்றவனு மாவான்.

நவமீ —

நாஸ்திகோ நிஹ்யய: வ்யாதோ தீவ்யவேஸீ ச வஞ்சித: ।
ஸூர: கலவாந்துவாது வஸ்ய: நவமீ ஜாயதே நர: ॥

நவமியில்.

நவமீதிதியில் ஜனித்த மனிதன், நாஸ்திகனும், பயமற்றவனும், பிரஸித்தியுடையவனும், நீடித்த வைர

முடையவனும், பாண்டித்தியமுடையவனும், சூரனும், கெட்டபிள்ளையையுடையவனும், வசீகரண ஸாமர்த்திய முடையவனுமாவான்.

ஜ்யோதிஷ –

யாதிஷ்கோ யஜ்ஞவாந்நாஜ்ஞ: வாக்ருதித்ருகஜ்ஞத்ருவாநு ।
நீதிஜ்ஞாநு ஸத்யவாநு விஜ்ஞாநு ஜ்யோதிஷம் ஜாயதெ நர: ॥

தசமியில்.

தசமீ திதியில் பிறந்தவன், தருமம் செய்கின்றவனும், செல்வமுடையவனும், ஸகலவிதமான ஸம்பத்துக்களும், நிறைந்தவனும், புத்திரர்கள், மித்திரர்கள், மனைவி இவர்களுடன் இருப்பவனும், நீதிகளை யறிந்தவனும், ஸத்தியத்தையே பேசுகின்றவனும் வித்துவானுமாவான்.

ஏகாதஶ்யாம் –

விஷ்ணுஶிவாதிஷ்டஸ்ய காயெஷ்டெஷ்டி ஜயொத்ஸுக: ।
யஜ்ஞவாநு ஸ்ஸஹாயஸ்ய ஜாயதெஜொ நர: ॥

ஏகாதசியில்.

விஷ்ணுவுக்கு பிரியமான ஏகாதசீ திதியில் பிறந்தவன், பிதிருக்கள், தேவதைகள் முதலியவர்களிடத்தில் பக்தியுடையவனும், காரியத்தில் முயற்சியுடையவனும், ஜயத்தில் உத்ஸாகமுடையவனும், பணம் படைத்தவனும், பிரபுக்களைப்போல் காரியங்களைச் செய்கின்றவனுமாவான்,

த்வாதஶ்யாம் –

காமீ கனாவீ(ஜ்ஞ:)விஜ்ஞாஜ்ஞ: காஜ்ஞ: ஶாஜ்ஞொ ·
யஜ்ஞாயிவ: ।

தீர்க்கஸ்த்ரீ ஸம்வீ வீரொ த்வாதஶ்யாம் ஜாயதெ நர: ॥

துவாதசியில்.

துவாதசீ திதியில் பிறந்த மனிதன், காமமுடையவனும், சுற்றத்தாருடன் கூடி இருப்பவனும் (கலைகளையறிந்தவனும்) சிறந்த பராக்கிரமமுடையவனும், அழகுடையவனும், சாந்த ஸ்வபாவமுடையவனும், நிறைந்த செல்வமுடையவனும், தைரியமுடையவனும், தியாகம் செய்பவனும், ஸுகமாக இருப்பவனும், வீரமுடையவனுமாவான்.

த்ரயோதஶ்யாம் —

ஸளஜ்ஞ: காமீ ஜயீ வித்வாந் லுப்த: ஸ்தாந
ஸவயுதக: ।
யதவாந் ந்ருத்தயோஷோக்தா த்ரயோதஶ்யாம் து
ஜாதவாந் ॥

திரயோதசியில்.

திரயோதசீ திதியில் பிறந்தவன், அழகுடையவனும், காமியும், ஜயமுடையவனும், வித்துவானும், பேராசையுடையவனும், சஞ்சலமான புத்தியையுடைய பிள்ளையையுடையவனும், தனமுடையவனும், நாட்டியம், பசுமாடுகள் இவைகளையனுபவிப்பவனுமாவான்.

சதுர்தஶ்யாம் —

கோபீ ஸ்வதாரதஸ: க்ருதக்ஞோ நாஸ்திகோ யதீ ।
பரதாரரதிஶ்சைவ சதுர்தஶ்யாம் து மாநவ: ॥

சதுர்தசியில்.

சதுர்தசீ திதியில் பிறந்தவன், கோபமுடையவனும், மனைவசியமுடையவனும், அறிவில்லாதவனும், செய்நன்றியுடையவனும், நாஸ்திகனும், தனமுடையவனும், பிறர் மனைவியிடத்தில் ஆசையுடையவனுமாவான்.

ஸங்க்ரஹே —

தேவத்விஜந்ருபைர் பூஜ்ய: போகீ கோதந தாந்யவாந் ।
புத்ரமித்ரகளத்ராட்ய: ஜாத: பஞ்சதசீதிதௌ ॥

பஞ்சதசியில்.

பஞ்சதசீ திதியில் (பௌர்ணமி—அமாவாஸைகளில்) பிறந்தவன், தேவர்களினாலேயும் பிராமணர்களினாலேயும் அரசர்களாலேயும் பூஜிக்கத்தக்கவனும், போகபாக்கியங்களை யனுபவிப்பவனும் பசுமாடு, தநம், தானியம் இவைகளுடனிருப்பவனும், பிள்ளைகள், சிநேகிதர்கள், மனைவி இவர்களுடனிருப்பவனுமாவான்.

ஜாதகாபரணே —

அத ஶுக்லக்ருஷ்ணப்ரதிபதாதி திதிஷு ஜாதபலாநி.

(ஜாதகாபரணே)

தத்ர ப்ரதிபதி —

பஹுஜநபரிவாரஸ்பாரஸத்கீர்த்தி விபவ:
கநககரணிபூஷா வேஷபாஜீ ஸபர்ய: ।
அதிஶயகுணகாந்திர்க்ரூரதைர்த்தவிக்த:
ப்ரதிபதி யதி ஸூதிர்யஸ்ய ஜந்தோ:॥

மற்றொருவிதமாக — சுக்கிலபக்ஷம் கிருஷ்ணபக்ஷம் பிரதமை முதலிய திதிகளில் பிறந்தவர்களின் குணங்கள்.

(ஜாதகாபரணத்தில்)

பிரதமையில்.

பிரதமை திதியில் பிறந்தவன் பஹுவிதமான சுற்றமுற்றாருடனிருப்பவனும், அழகான வித்துவத்துடையவனும்,

சிறந்த அறிவுபடைத்தவனும், ஸுவர்ணம், ரத்நங்களினு லான ஆபரணங்களை அழகாக அணிந்துகொண்டிருப்பவ னும், நல்ல ஸ்வபாவமுடையவனும், மிகச்சிறந்த அழகு வாய்ந்த சரீரகாந்தியையுடையவனும், அரசனிடத்திலிருந்து கிடைத்த செல்வமுடையவனுமாவான்.

த்விதீயாயாம் —

தாதா தயாலு: குணவாந் ஸுஸம்ப-
த்ஸ்புரத்ஸுதாசாரவிசாரயஜ்ஞ: ।
ப்ரஸந்நமூர்த்திர்பஹுதாஸ்துதகீர்த்தி:
ஜாதோ த்விதீயாதிதிஸம்பவ: ஸ்யாத் ॥

துவிதீயையில்.

துவிதீயை திதியில் பிறந்தவன், கொடையாளியாக இருப்பவனும், தயையுடையவனும், நல்ல குணங்களுடைய வனும், சிறந்த செல்வமுடையவனும், சிறந்து விளங்குகின்ற பிள்ளைகளின் செயல்களையுணர்ந்து பெருமையடைகின்ற வனும், தூயசரீரமுடையவனும், பலவிதமாகத் துதிக்கப் படுகின்ற புகழையுடையவனுமாவான்.

த்ருதீயாயாம் —

காமாதிகஸ்ஸ்யாதநவத்யவித்ய:
பலாந்விதோ ராஜகுலாப்தவித்த: ।
ப்ரவாஸஶீலஸ்து தரோ விநாஸீ
உத்க்ருஷ்டத்ருதீயாப்ரபவோऽதிநீதீ ।

திருதீயையில்.

திருதீயை திதியில் பிறந்த மனிதன், அதிகமான காம முடையவனும், குற்றமற்ற வித்தையையுடையவனும், பலம் படைத்தவனும், அரசகுலத்தில் ஸம்பாதிக்கப்பட்ட செல்வ

முடையவனும், வெளியூர்களுக்குச் செல்லுகின்ற ஸ்வபாவ முடையவனும், ஸாமர்த்தியமுடையவனும், ஆடை ஆபரணங்களை நன்கு அணிந்துகொண்டு பிரகாசிப்பவனும், தானென்ற அபிமானமுடையவனுமாவான்.

சதுர்த்யாம் ---

ருணப்ரவ்ருத்தி: ஸஹஸா ஸஹஸ்ஸ்யாத்
ரணப்ரவீண: க்ருபணோ ஸஹாஸ: ।
த்யூதே ரதி: சஞ்சலசித்தவ்ருத்தி:
வாதீ யதி ஸ்யாஜ்ஜனனே சதுர்த்யாம் ॥

சதுர்த்தியில்.

சதுர்த்திதிதியில் பிறந்தவன், கடன் வாங்குகின்றவனும், அசட்டுத்தனமாக பல காரியங்களைச் செய்கின்றவனும், போர்புரிவதில் ஸாமர்த்தியமுடையவனும், கருமித்தனமுடையவனும், சூதாட்டத்தில் ஆசையுடையவனும், அலைகின்ற மனமுடையவனும், (நிலைத்த மனமில்லாதவனும்) வாதம் செய்கின்றவனுமாவான்.

பஞ்சம்யாம் ---

ஸம்பூர்ணகாத்ரஸ்ஸகலத்ரபுத்ர
மித்ராந்விதோ ஸத்தயாந்விதஶ்ச ।
நரேந்த்ரமான்யோ நரோ வதான்ய:
ப்ரஸூதிகாலே கில பஞ்சமீ ஸ்யாத் ॥

பஞ்சமியில்.

பஞ்சமிதிதியில் பிறந்தமனிதன், ஒவ்வொரு அங்கங்களும் தக்கபடியமைந்த நிறைவுற்ற சரீரமுடையவனும், மனைவி பிள்ளைகள் சிநேகிதர்கள் இவர்களுடன் கூடிய

வனும், ஸகலபிராணிகளிடத்திலும் தயையுடையவனும், அரசர்களாலே வெகுமதிக்கப்பட்டவனும், சிறந்த கொடையாளியுமாவான்.

ஷஷ்ட்யாம்—

ஸத்யப்ரதிஜ்ஞோ தநபுத்ரஸம்பத்
தீர்கோருஜங்கோ ஜநகாந்தமஹௌஜா: ।
ப்ரக்ருஷ்டகீர்திர்குணதோ வரிஷ்ட:
ஷஷ்ட்யாம் ப்ரஜாதோ வ்ரணகீர்ணகாத்ர: ॥

ஷஷ்டியில்.

ஷஷ்டிதிதியில் பிறந்த மனிதன், உண்மையான பிரதிஜ்ஞையையுடையவனும், (தனது சபதத்தை நிறைவேற்றுகின்றவனும்) பணம், பிள்ளைகள், ஸம்பத்து (பூமி, தநம், தானியங்கள் முதலியன) இவைகளையுடையவனும், நீண்ட தொடைகள், கண்டைக்கால்களையுடையவனும், அதிகமான காந்தியையுடையவனும், அதிகப்புகழுடையவனும், குணங்களினாலே மேன்மையுடையவனும், உடம்பு முழுமையும் புண்ணுடையவனுமாவான்.

ஸப்தம்யாம்—

ஜ்ஞாநீ குணஜ்ஞோ ஹி விஶாலநேத்ர:
ஸத்பாத்ரதேவார்சநசித்தவ்ருத்தி:
கந்யாப்ரஜாதா பலவித்தயுக்தா
ஸ்யாத்ஸப்தமீஜோ ரநேஜோ ஜிதாரி: ॥

ஸப்தமியில்.

ஸப்தமீதிதியில் பிறந்த மனிதன், ஜ்ஞாநியாகவும், நற்குணங்களை அறிந்தவனாகவும், (குணவானாகவும்) விசாலமான கண்களையுடையவனாகவும், ஸத்பாத்திரங்கள்,

(தானாதிகள் செய்வதற்குரிய குணங்களுடையவர்கள்) தேவதைகள் இவர்களை பூஜிப்பதில் ஈடுபட்ட மனமுடையவனும், பெண்ணை (தனக்குப்பிடித்தமான கலியாணமாகாத கன்னிகையை) அபஹரித்துச் செல்லுகின்றவனும், பிறநுடைய பணத்தை அபஹரித்துக்கொண்டு செல்லுகின்றவனும், பகைவர்களை அழிப்பவனுமாவான்.

அஷ்டம்யாம் —

நாநாஸம்பத்ஸுதஸௌக்யஸஹித: ராஜாநுக்ருஹீதவித்த: ।
காந்தாப்ரீதி(த)யுக்தசஞ்சலமநா:
யஸ்யாஷ்டம்யாம் ஜாயதே ஜந்துஸ் ஸாக்ஷாத் ॥

அஷ்டமியில்.

அஷ்டமீ திதியில் யாதொருவன் பிறக்கின்றானோ, அவன், பலவிதமான ஸம்பத்துக்கள், பிள்ளைகள் இவைகளாலே ஸௌக்கியமுடையவனும், கருணையுடையவனும், அரசர்களிடத்திலிருந்து கிடைத்த செல்வத்தினாலே நிலைத்த வாழ்வுடையவனும், மனைவியின் அன்புடையவனும், சஞ்சலமான மனோநிலையையுடையவனுமாவான்.

நவம்யாம் —

வராங்கநாஸக்தோ பந்துஜநஸ்ய கார்யே
கடோரவாக்யஸ்ச ஸதாயீ ப்ரோதீ ।
நரஸ்ஸதாவாக்ருதாநஸ்ஸ்யாத்
யஸ்ய ப்ரஸூதி தநௌ நவமீதிதௌஸ்யாத் ॥

நவமியில்.



நவமீ திதியில் பிறந்த மனிதன், பந்துக்களின் காரியங்களில் அனாதரவுடையவனும், கடுமையாகப் பேசுகின்ற

வனும்; நல்ல மேதாவிகளை விரோதித்துக்கொள்ளுகின்றவனும், ஸதாசாரங்களில் (நல்ல ஒழுக்கங்களில்) ஆதரவுடையவனுமாவான்.

ദശമ്യാം —

ധൎമ്മൈകബുദ്ധിഃ ബഹുവൈഭവാഢ്യഃ
പ്രലംബകണ്ഠോ ബഹുശാസ്ത്രവേത്താ ।
ഉദാരവിത്തോ നിതരാം വിനീതഃ
ശക്തശ്ച കാമീ ദശമീഭവഃ സ്യാത് ॥

தசமியில்.

தசமி திதியில் பிறந்தவன், தருமத்திலேயே மனமுடையவனும், பற்பலவிதமான செல்வமுடையவனும், தொங்குகின்ற கழுத்தையுடையவனும், பலசாஸ்திரங்களைக் கற்றவனும், மிகவும் தாராளமான மனோபாவமுடையவனும், மிகுந்த வணக்கமுடையவனும், அழகுடையவனும், காமமுடையவனுமாவான்.

ഏകാദശ്യാം —

ദേവദ്വിജാൎച്ചാവ്രതദാനശീലഃ
സാന്ദ്രശുദ്ധഃ ശരണഃ പ്രവീണഃ ।
വാൎദ്ധൈക്യചിത്തോ ഗാംഭീര്യകാന്തഃ സ്യാത്
ഏകാദശീജാതനരോ നിരോഷഃ ॥

ஏகாதசியில்.

ஏகாதசி திதியில் பிறந்த மனிதன், தேவதைகள், பிராமணர்கள் இவர்களை பூஜிப்பது விரதங்களை அனுஷ்டிப்பது, தானங்கள் செய்வது இவைகளைச் செய்து கொண்டிருப்பவனும், மிகத்தூய மனமுடையவனும், நல்ல

ஸாமர்த்தியமுடையவனும், புண்ணிய கர்மாக்களையே செய்வதில் மனமுடையவனும், குருவின் காரியம் செய்பவனும், மிக மெலிந்தவனும், மிகக்கோபமுள்ளவனும் ஆவான்.

த்வாதஶ்யாம் —

ஜலப்ரியோ பவேத் வ்யவஹாரஶீல:
நீசாலயாவாஸவிநோதஶீல: |
ஸதாந்நதாதா க்ஷிதிபாலவித்த:
ஸ்யாச்ச த்வாதஶீஜோ மநுஜ: ப்ரஜாவாந் ||

துவாதசியில்.

துவாதசீ திதியில் பிறந்த மனிதன், ஜலத்தில் பிரியமுடையவனும், வியவஹாரம் செய்யும் ஸ்வபாவமுடையவனும், அல்பமான அல்லது மட்டமான குடிசை முதலிய வீடுகளில் வஸித்துகொண்டு ஸந்தோஷமாக இருக்கும் ஸ்வபாவமுடையவனும், எப்பொழுதும் அன்னதானம் செய்கின்றவனும், அரசர்களிடத்திலிருந்து கிடைத்த செல்வத்தையுடையவனும், பிள்ளைகளுடையவனுமாவான்.

த்ரயோதஶ்யாம் —

ரூபாந்வித: ஸாத்விகதாவிஹீந:
ப்ரலம்பகண்ட: சரணப்ரஸூதி: |
நரோ(அ)திமாநீ ப்ரஸூதஶ்ச ப்ரகாமம்
த்ரயோதஶீநாமதிதிப்ரஸூத: ||

திரயோதசியில்.

திரயோதசீதிதியில் பிறந்தவன், அழகுடன் கூடியவனும் ஸாத்துவிகமான ஸ்வபாவமற்றவனும், தொங்குகின்ற கழுத்தையுடையவனும், காலால் பிறந்தவனும், (பிறக்கும்

(பாதமுதலில் கால்கள் வெளியே வந்து பிறந்தவனும்) அதிக சூரத்தனமுடையவனும், அதிக ஸாமர்த்தியமுடையவனுமாவான்.

சதுர்தசியில்.

சதுர்தசியில் பிறந்த மனிதன், கொடூரமான ஸ்வபாவமுடையவனும், மிகச்சூரனும், அதிக ஸாமர்த்தியமுடையவனும், (எப்பொழுதும்) சிரித்துக்கொண்டிருப்பவனும், மன்மதலீலைகளில் சுழலுகின்ற மனோநிலையையுடையவனும், ஸஹிக்கமுடியாதவனும், (ஸஹிக்கமுடியாத கெடுதிகளைச் செய்பவனும்) மிகவும் விரோதமாகப்பேசுகின்றவனும், ரோஷமுடையவனுமாவான்.

பௌர்ணமியில்.

பூர்ணிமைதிதியில் பிறந்தவன், மிகவும் அழகான சரீரமுடையவனும், நியாயமான முறையில் ஸம்பாதித்த செல்வத்தையுடையவனும், அநேகம் யுவதிகளுடன் கூடி

யிருப்பவனும், எப்பொழுதும் ஸந்தோஷமாக இருப்பவனும் மிகச்சிறந்த வலிமையுடன் திகழ்கின்றவனும், மிகக்கருணை யுடன் புண்ணியகாரியங்களைச் செய்கின்றவனும், ஸகல குணங்களும் நிறைந்திருப்பவனுமாவான்.

அமாவாஸ்யாயாம் ---

தாந்தோ மநஸ்வீ வித்யாதக்ரஹக்ஷ:
ஶுஶ்ரூஷாவித்த்வ மஹாமஹோஜ்ஜ்வல: |
தாதா ஜநாநாம் ஹுதமாந்யஶீல:
இதி ஶோகஹர்ஷ: ஸ்யாச்ச ஶோகஹர்ஷ: க்ருஶாங்க: ||

அமாவாஸியையில்.

அமாவாஸியை திதியில் பிறந்த மனிதன், அடக்க முடையவனும் (மன அமைதியுடையவனும்) தாராளமான மனதுடையவனும், தாய்-தகப்பனிடத்தில் பக்தியுடைய வனும், கஷ்டப்பட்டுத்தேடிய செல்வத்தையுடையவனும், (பந்துக்களும், சினேகிதர்களும்) வந்துபோவதை விரும்பு கின்றவனும், ஜனங்களுக்கு வெகுமதிக்கத்தக்கவனும், சோபை, ஸந்தோஷம், இவைகளில்லாதவனும், மெலிந்த சரீரமுடையவனுமாவான்.

அத ஶுக்லக்ருஷ்ணபக்ஷதித்யதிதே
தேவதாநாம் பலாநி —

(காலாம்ருதே)

வஹ்நிர்விரிஞ்சோ கிரிஜா கணபதி: ஸர்ப்ப:
குமாரோ ரவி:
மஹேஶோ வஸு நாகயக்ஷஹரய: காம:
ஶஶீந்து பிதா |

வாசெதேவஸ வ-ஷிதாயிவா: ஸ்ரீஃ — —

— — — —

## சுக்கில, கிருஷ்ணபக்ஷதிதிகளின் அபிமாநி தேவதைகளின் பெயர்கள்.

(காலாமிருதத்தில்)

அக்கினி 1, துவஷ்டா 2, கௌரீ 3, கணபதி 4, ஸர்பம் 5, குமாரன் 6, ரவி 7, பரமேசுவரன் 8, வஸு 9, நாகம் 10, தருமதேவதை 11, விஷ்ணு 12, காமன் 13, கலி 14, சந்திரன் 15, பிதிருக்கள் 16, இவர்கள், முறையே, பிரதமை முதலியதிதிகளுக்கு அதிதேவதைகளாவார்கள்.

## ௨௬௪. ஶுக்ல க்ருஷ்ணபக்ஷ ப்ரதமாபிமாநி தேவதா ஸ்வரூபாணி —

தத்ராதௌ ஶுக்லக்ருஷ்ணபக்ஷப்ரதிபதபிமாநிநோ அக்நேர் த்யாநம்.

ஸப்தார்சி ஷம்பாக்ஷமாலாஹஸ்தம் ஶிவம் தேவமதம்
ஹவ்யவாஹநம் ।
ஶாந்திகபுஷ்டி ப்ரஜாபதெ ஜாதம் உதித்யம் ஸமாவிஶ ॥
(ரக்தவர்ணம்)

## 264. சுக்கில இருஷ்ணபக்ஷ பிரதமாபிமாநி தேவதா ஸ்வரூபங்கள்.

அவற்றுள் சுக்கில கிருஷ்ணபக்ஷ பிரதமையின் அபிமாநி தேவதையான அக்கிநியின் த்யாநம்.

தேவர்களை உத்தேசித்து ஹோமம் செய்யப்படுகின்ற ஹவிஸ்ஸை வஹிப்பவரான ஹே அக்கினி பகவானே, நீர் பிரத்தியக்ஷமாக இங்கு வரவேண்டும், சாந்திகமான

கர்மாவில் பூஜிக்கவேண்டியதாக இருப்பதை உத்தேசித்து இந்த மூர்த்தியில் இருக்கவேண்டும். (சிவப்பு நிறம்)

௨௬௫. அத ஶுக்லக்ருஷ்ணபக்ஷத்விதீயாபிமானி த்வஷ்ட்ருதேவதாயா: த்யானம்.

த்வஷ்டர்ஜகத்ரயஸ்யாத: பாஹி தயயா க்ஷிதிம் ।
ப்ரதிமாயாம் சதுர்வக்த்ர த்வம் ஸாந்நித்யம் குருஷ்வ வை ॥
(ரக்தவர்ண:)

265. சுக்கில கிருஷ்ணபக்ஷ துவிதீயையின் அபிமாநி தேவதையான துவஷ்டாவின் த்யாநம்.

மூன்று உலகங்களையும் காப்பாற்றுகின்றவரான ஹே துவஷ்டாவே, (தாங்கள்) தயவினாலே பூமியை புநிதப்படுத்த வேண்டும். நான்கு முகங்களுடையவரே, இந்தப் பிரதிமையில் ஸாந்நித்தியம் செய்யவேண்டும். (சிவப்பு நிறம்)

௨௬௬. அத ஶுக்லக்ருஷ்ணத்ருதீயாபிமானி பார்வத்யா: த்யானம்.

ப்ரதிமாம் ஹிரண்மயீமேஹி பர்வதேந்த்ரகன்யகே ।
சதுர்வர்காப்தயே பாதயுக்மம் தே ப்ரவந்தயே ॥
(பீதவர்ணா)

266. சுக்கில கிருஷ்ண திருதீயாபிமாநி பார்வதீ த்யாநம்.

பர்வதராஜன் மகளான ஹே பார்வதீ தேவி, நீ ஸுவர்ணமயமான இந்த பிரதிமையில் வந்திருப்பாயாக. தருமம், அர்த்தம், காமம், மோக்ஷம் எனப்படும் புருஷார்த்தங்களை அடையவேண்டியதற்காக உன்னுடைய பாதாரவிந்தத்தை வணங்குகின்றேன். (மஞ்சள் நிறம்)

௨௬௭ அத² ஶுக்லக்ருஷ்ணசதுர்த்²யபி⁴மாநி
க³ஜாநநஸ்ய த்⁴யாநம்

விக்⁴நாங்ககால(ப்ரளயகால) பா³லார்காப⁴ம் பார்வதீமலஜம்
ஸஹேவ ।
க³ஜாநநாஹ்வயம் ப்ரத்யக்ஷம் ப்ரதிமாயாம் ஸமாவஹ ॥
([illegible])

267. சுக்கில-கிருஷ்ண சதுர்த்தியின் அபிமாநி
தேவதையான கஜாநநனுடைய த்யாநம்.

விக்கிரமாங்க (விக்நம்—இடையூறு) பிரளய காலத்திற்கு (விக்கிரமாங்க இருளுக்கு) பால சூரியனைப்போல் இருப்பவரும், பார்வதீ தேவியாரின் அழுக்கிலிருந்து ஆவிர்பவித்தவருமான ஹே கஜமுகனே, தாங்கள் அன்புகூர்ந்து, இந்த பிரதிமையை வந்தடைந்து நான் செய்கின்ற பூஜையை ஏற்றுக்கொள்ளவேண்டும். (சிவப்பு நிறம்)

௨௬௮ அத² ஶுக்லக்ருஷ்ணபஞ்சம்யபி⁴மாநி
ஸர்பதே³வதாயா: த்⁴யாநம்

ஸர்பராஜ மயாஹூத: ப்ரதிமாயாம் நிஷீத³ போ⁴ ।
பூஜயாமி பதா³ப்³ஜம் தே ஸர்வஸம்பத்ஸமாப்தயே ॥
([illegible])

268. சுக்கில கிருஷ்ண பஞ்சமியின் அபிமாநியான
ஸர்ப தேவதையின் த்யாநம்.

ஹே ஸர்பராஜனே! என்னாலே அழைக்கப்பட்ட தாங்கள், இந்தப்பிரதிமையில் உட்காரவேண்டும். நான் ஸகலவிதமான ஸம்பத்துக்களையும் அடைவதற்காக தங்களுடைய பாதாரவிந்தங்களைப் பூஜை செய்கின்றேன். (வெளுப்பு நிறம்)

உகூகூ. அத ஶுக்லக்ருஷ்ணஷஷ்டீதிதி
ஷண்முகதேவதாயா: த்யானம்.

ஷண்முக நமஸ்தே சரணாம்புஜயோ: |
ப்ரதிமாயாம் ஹிரண்மய்யாமாஸ்ஸ்வ வல்லீமந:ப்ரிய ||
(ரக்தவர்ண:)

269. சுக்கில-கிருஷ்ண ஷஷ்டியின் அபிமானியான
ஆறுமுக தேவனின் த்யாநம்.

ஹே ஆறுமுகனே, நான் தங்களுடைய சரண கமலங்களை நமஸ்கரிக்கின்றேன். வல்லீ தேவியின் மனதிற்கு பிரியமானவரே, ஸுவர்ண மயமான பிரதிமையில் தாங்கள் வந்து அமரவேண்டும். (சிவப்பு நிறம்)

உஎ0. அத ஶுக்லக்ருஷ்ணஸப்தமீதிதி
ஸூர்யஸ்ய த்யானம்.

ஸஹஸ்ரபானோ வேதாம்ஶோ ப்ரதிமாமேஹி ஸாதரம் |
த்ரயீதனோ நமஸ்தே பூயோ பூய: கரோம்யஹம் ||
(ரக்தவர்ண:)

270. சுக்கில கிருஷ்ண ஸப்தமியின் அபிமானி
தேவதையான ஸூரியனுடைய த்யாநம்.

ஆயிரம் கிரணங்களுடையவரும், வேதங்களின் வடிவமாக இருப்பவருமான (மூன்று வேதங்களின் பொருளாக இருப்பவருமான) ஹே ஸூரியனே, தங்களை நான் மறுபடியும் மறுபடியும் வணங்குகின்றேன். (சிவப்பு நிறம்)

உஎக. அத ஶுக்லக்ருஷ்ணாஷ்டமீதிதி
ஸப்தராஜாதஸ்ய த்யானம்.

ஸத்யோஜாத நமஸ்தேஸ்து கௌரீநாத நமோஸ்து தே ।
ப்ரஸாதம் குரு மே ஶம்போ ப்ரதிமாமேஹி ஸாதரம் ॥

(ஶ்வேதவர்ண:)

271. சுக்கில கிருஷ்ண அஷ்டமியின் அபிமாநியான ஸத்தியோஜாதரின் த்யாநம்.

ஹே ஸத்தியோஜாதரே, தங்களை வணங்குகின்றேன். ஹே கௌரீ தேவியின் கணவனே, தங்களை வணங்குகின்றேன். ஹே சம்போ (ஸகல மங்களங்களையும் அளிப்பவரே) எனக்கு அருள் புரியவேண்டும். அன்புடன் பிரதிமையில் வந்திருக்கவேண்டும். (வெளுப்பு நிறம்)

௨௭௨. அத ஶுக்லக்ருஷ்ணநவம்யபிமாநி
துர்காயா: த்யாநம்.

த்ரிநேத்ரே சந்த்ரகலாங்கிதஶிரோருஹே ।
ஸுராதீஶே ப்ரஸாதம் மே குரு ஶீக்ரம் ஸுரேஶ்வரி ॥

(ஶ்யாமவர்ணா)

272. சுக்கில கிருஷ்ண நவமியின் அபிமாநி தேவதையான துர்கையின் த்யாநம்.

மூன்று கண்களுடையவளும், சந்திரகலையை அணிந்திருக்கின்ற கூந்தலையுடையவளும், தேவர்களுக்கு நாயகியாக இருப்பவளுமான ஹே துர்கா தேவி, இந்தப் பிரதிமையில் வந்திருந்து சீக்கிரமாக எனக்கு அருள் புரிய வேண்டும்.

௨௭௩. அத ஶுக்லக்ருஷ்ணதஶம்யபிமாநி
ஶேஷதேவதாயா: த்யாநம்.

ஸஹஸ்ரஶீர்ஷாய விஷ்ணுபாதாங்கஸம்ஶ்ரயே ।
நமோ நமோஸ்து நாகாய ப்ரதிமாமேஹி ஸாதரம் ।

(ஶுப்ரவர்ண:)

## 273. சுக்கில கிருஷ்ண தசமியின் அபிமாநி தேவதையான ஆதிசேஷனின் த்யாநம்.

பூபாரத்தினாலே வணங்கிய கழுத்தையுடையவரும், விஷ்ணுவின் பாதங்களினாலே அடையாளம் செய்யப்பட்ட சிரஸ்ஸுகளையுடையவரும், ஸர்பஸ்வரூபியாக இருப்பவருமான ஹே சேஷனே, தங்களை வணங்குகின்றேன். தாங்கள் இந்தப் பிரதிமையை வந்து அடையவேண்டும். (வெளுப்பு நிறம்)

௨௭௪. அத ஶுக்லக்ருஷ்ணைகாதஶ்யபிமானி தர்மதேவதாயா: த்யாநம்.

ஶ்ருதிவேத்யஸ்வரூபாய யாகாதிக்ரதுரூபிணே |
பஹுஶ்ரேயஸ்ஸாதநாய தர்மாய மஹதே நம: ||

(நீலவர்ண:)

## 274. சுக்கில கிருஷ்ண ஏகாதசியின் அபிமாநி தேவதையான தருமதேவதையின் த்யாநம்.

வேதங்களினாலே அறியத்தக்க ஸ்வரூபமுடையவரும், யாகம் முதலிய கிரதுக்களின் வடிவமாக இருப்பவரும், ஏராளமான க்ஷேமங்களுக்கு ஸாதநமாக இருப்பவரும், பெருமை வாய்ந்தவருமான தருமதேவனை வணங்குகின்றேன். (நீலநிறம்)

௨௭௫. அத ஶுக்லக்ருஷ்ணதஶம்யபிமானி ஶேஷதேவதாயா: த்யாநம்

பூபாரநம்ரக்ரீவாய விஷ்ணுபாதாங்கமூர்த்தயே |
ஆதிஶேஷ நமஸ்துப்யம் ப்ரதிமாயாம் ஸமாவிஶ விபோ ||

(கநகவர்ண:)

## உத்திர நக்ஷத்திரத்தில்

வஸ்திரம், பட்டாபிஷேகம், ஸீமந்தம், விவாஹம், உபநயனம், கிரஹப்பிரவேசம், தேவதாபிரதிஷ்டை. குதிரை- யானை- வீடு- இவைகளுக்கான காரியங்கள், இவைகளை உத்திரம்- உத்திராடம்- உத்திரட்டாதி- இந்த 3 நக்ஷத்திரங்களில் செய்யவேண்டும்.

தானம் :—

உத்திரம்- உத்திராடம்- உத்திரட்டாதி இந்த 3. நக்ஷத்திரங்களில், நெய்- பால் இவைகளை முறையுடன் கலந்த, மாவு, அன்னம், இவைகளை தானம் செய்கின்றவன், ஸ்வர்க லோகத்தில் பெருமையுடன் வஸிப்பான்.

உத்திரம் முதலிய 3. நக்ஷத்திரங்களில் எந்ததானத்தைச் செய்தாலும், அவன் எப்பொழுதும் அளவு கடந்த பலனை யனுபவிப்பான். நிச்சயம். (10)

𑌹𑌸𑍍𑌤𑍇 —

𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌵𑌾𑌹𑌸𑍀𑌮𑌨𑍍𑌤𑌯𑌾𑌨𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑍋𑌪𑌨𑌾𑌯𑌨𑌮𑍍 ।
𑌕𑍍𑌷𑍌𑌰𑌵𑌾𑌸𑍍𑌤𑍍𑌵𑌭𑌿𑌷𑍇𑌕𑌾𑌶𑍍𑌚 𑌹𑌸𑍍𑌤𑍇𑌕𑍍𑌷𑌣𑌂 𑌶𑍁𑌭𑌾𑌵𑌹𑌮𑍍 ॥

𑌦𑌾𑌨𑌂 —

𑌹𑌸𑍍𑌤𑌯𑍁𑌕𑍍𑌤𑍇 𑌹𑌸𑍍𑌤𑌿𑌰𑌥𑌂 𑌦𑌤𑍍𑌤𑍍𑌵𑌾 𑌯𑌤𑍍𑌨𑌂 𑌸𑌮𑍍𑌪𑍂𑌜𑌿𑌤𑌃 ।
𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌤𑍀𑌰𑍍𑌥𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌨𑌿 𑌕𑍍𑌷𑌯𑌾𑌶𑍍𑌚 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌹𑌿 ॥ ௧௧ ॥

## ஹஸ்த நக்ஷத்திரத்தில்

தேவதாபிரதிஷ்டை, விவாஹம், ஸீமந்தம், பிரயாணம் செய்தல், வஸ்திரம், உபனயநம், க்ஷௌரம், வீடுகட்டுவது,

பட்டாபிஷேகம், ஆபரணங்கள், இவைகளை சூரியனை தேவதையாகக் கொண்ட ஹஸ்த நக்ஷத்திரத்தில் செய்யவேண்டும்.

தானம் :—

ஹஸ்த நக்ஷத்திரத்தில், உபவாஸமிருந்து, 4 யானை களுடன் கூடிய ரதத்தை தானம் செய்கின்றவன், துர்க்கங்களை ஸுலபமாகக் கடப்பான். கத்திமுனை போலவும் மலைகளைப்போலவும் தொல்லையைத் தரக்கூடிய துர்க்கங்களைக் கடந்துசெல்லுவான். அல்லது கஷ்டங்களி லிருந்து விடுதலையடைவான். (11)

சித்ராயாம் —

ப்ரவேசவஸ்த்ரஸீமந்தப்ரதிஷ்டாவ்ரதபந்தனம் |
வாஸ்துகேஹாப்யாஸவித்யா: க்ஷௌராபரணபூஷணே
கார்யம் யத: ||

தானம் —

சித்ராயாம்ருஷபம் தத்வா புண்யான் கந்தாம்ஸ்ததைவ ச |
சரத்யப்ஸரஸாம் லோகே ரமதே நந்தனே வனே || ௰௨ ||

சித்திரை நக்ஷத்திரத்தில்

சித்திரை நக்ஷத்திரத்தில், கிரஹப்பிரவேசம், ஆடை அணிவது, ஸீமந்தம், தேவதா பிரதிஷ்டை, உபனயனம் வாஸ்து வித்தையை அப்யாஸிப்பது, க்ஷௌரம், ஆபரணங் களை அணிவது, இவைகளைச் செய்யவேண்டும்.

தானம் :—

சித்திரை நக்ஷத்திரத்தில், விருஷபத்தையும் புண்ணியமான அங்கங்களையுடைய சிறந்த லக்ஷணங்களுடன் கூடிய அல்லது வெளுப்பு நிறமுடைய பசுவையும் தானம் செய்பவன், அப்ஸரஸ்களுடைய உலகத்தில் (தேவலோகத்தில்) நந்தனவனத்தில் ஸஞ்சரிப்பவனுவான் (12)

ஶாஸ்த்ரம் ---

ப்ரதிஷ்டோபநயோத்வாஹவஸ்த்ரஸீமந்தபூஷணம் ।
பஶ்வம் ஶ்வேபஜலக்ருஷ்யா க்ஷௌரகர்ம ஸ்வாதிபே ॥

தானம் ---

ஸ்வாதீஷ்வத தநம் தத்வா யதிஷ்டம் தஸ்ய சாத்மந꞉ ।
ப்ராப்நோதி லோகாஞ்ஶுபாநிஹ சைவ மஹத்யஶ꞉ ॥

## ஸ்வாதீ நக்ஷத்திரத்தில்

தேவதாபிரதிஷ்டை, உபநயநம், விவாஹம், வஸ்திரம் தரித்துக்கொள்ளுதல், ஸீமந்தம், பூஷணங்களையணிந்து கொள்ளுதல், பசுக்களை வாங்குவது, ஜலம் ஸம்பந்தமான காரியங்கள், குதிரை, யானைகளை வாங்குவது, பயிரிடுவது, க்ஷௌரம் செய்துகொள்ளுவது, முதலிய காரியங்களை, வாயுவை தேவதையாகக்கொண்ட ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் செய்யவேண்டும்.

**தானம் :—**

ஸ்வாதீ நக்ஷத்திரத்தில், பணத்தையும் தனக்கு மிகவும் இஷ்டமான பொருளையும் தானம் செய்கின்றவன் உத்தமலோகங்களையடைவான். இவ்வுலகத்தில் அதிகப் புகழையுமடைவான். (13)

விஶாகாயாம் —

வஸ்த்ரபூஷணவாணிஜ்ய வஸுதாந்யாதிஸங்க்ரஹம் ।
நாட்யாதிகே ந்ருத்தகீதஶில்பமேவ ப்ரகாரயேத் ॥

தாநம் —

விஶாகாயாமநட்வாஹம் தேநும் சாபி ஸவத்ஸகாம் ।
ஸப்ராஸங்கம் ச ஶகடம் ஸதாந்யம் வஸ்த்ரஸம்யுதம் ॥

பித்ரூந் தேவாம்ஶ்ச ப்ரீணாதி ப்ரேத்ய சாநந்த்யமஶ்நுதே ।
ந ச துர்காண்யவாப்நோதி ஸ்வர்கலோகம் ச கச்சதி ।
நாரகீயாம்ஶ்ச ஸங்க்லேஶாந் ந ப்ராப்நோதீதி நிஶ்சய: ॥

## விசாக நக்ஷத்திரத்தில்

இந்திரன், அக்கினி, இவர்களை தேவதையாகக் கொண்ட விசாகா நக்ஷத்திரத்தில், ஆடை, ஆபரணங்களை அணிந்துகொள்ளுவது, வியாபாரம் செய்வது, பணத்தையும் தானியங்களையும் சேமிப்பது, நாட்டியம் கானம் இவைகளைக் கற்பது, சித்திரங்களை எழுதுவது, ஆகிய காரியங்களைச் செய்யவேண்டும்.

தானம் :—

விசாக நக்ஷத்திரத்தில், காளை மாட்டையும், கன்றுடன் கூடிய கறவைப் பசுவையும், தானியம் வஸ்திரம் முதலிய திரவியங்களுடன் கூடிய வண்டியையும் தானம் செய்கின்றவன், பிதிருக்களையும் தேவர்களையும் திருப்தி செய்விப்பவனுவான். பரலோகத்திலும் எல்லையற்ற ஸுக போகங்களையடைவான். கஷ்டங்களையடையமாட்டான். ஸ்வர்க்கலோகத்தையுமடைவான். நரக துக்கத்தையடையமாட்டான், நிச்சயம். (14)

அநூராதாயாம் —

க்ருஹவேஶஸ்தாபநோத்வாஹவ்ரதபந்தாதிமங்கலம் |
வஸ்த்ரபூஷணவாஸ்த்வாத்யம் மைத்ரே ஸந்திவிக்ரஹம் ||

தாநம் —

அநூராதாஸு ப்ராவாரம் வஸ்த்ரோத்தரச்சதம் |
தத்வா யுகஶதம் வாபி நர: ஸ்வர்கே மஹீயதே ||௰௫||

அநுஷ நக்ஷத்திரத்தில்

மித்திரனை தேவதையாகக்கொண்ட அநுஷ நக்ஷத்திரத்தில், கிருஹப்பிரவேசம், தேவதாஸ்தாபனம், விவாஹம் உபநயநம், முதலிய சுப காரியங்களையும், ஆடை ஆபரணங்களை தரிப்பது, வீடு கட்டுவது முதலான காரியங்களையும், ஸந்தி (ஸமாதானம்) ஸ்நேஹத்தை முறிப்பது, ஆகிய காரியங்களையும் செய்யவேண்டும்.

தானம் :—

அனுஷ நக்ஷத்திரத்தில், வஸ்திரத்துடன் போர்வையை தானம் செய்கின்றவன், ஆயிரம் யுகங்கள் ஸ்வர்கலோகத்தில் வஸிப்பான். (15)

ஜ்யேஷ்டாயாம் —

க்ஷௌரஶாஸ்த்ரஶஸ்த்ரவாணிஜ்ய[illegible] ச ||
ஸங்க்ரஹே ந்ருத்தவாதித்ரஶில்ப[illegible] ||

தாநம் —

காலஶாகம் து விப்ரேப்ய: தத்த்வா மர்த்ய: ஸமூலகம் |
ஜ்யேஷ்டாயாம் ருத்திமாப்னோதி கதிமிஷ்டாம் ச கச்சதி ||

## கேட்டை நக்ஷத்திரத்தில்

இந்திரனை தேவதையாகக் கொண்ட கேட்டை நக்ஷத்திரத்தில், க்ஷௌரம் செய்துகொள்ளுவது, அஸ்திரம், சஸ்திரங்களை (போருக்குவேண்டிய ஆயுதங்களைச்) செய்வது வியாபாரம் செய்வது, பசு, எருமைகளை வாங்குவது, ஜல சம்பந்தமான காரியங்களைச் செய்வது, நாட்டியம் கற்றுக் கொள்ளுவது, மிருதங்கம் முதலிய தோல்வாத்தியங்களைக் கற்றுக்கொள்ளுவது, சில்ப கலையைக் கற்றுக்கொள்ளுவது, உலோககாரியங்களைச் செய்வது, கருங்கல் வேலைகளைச் செய்வது, கண்ணுக்கு வைத்தியம் செய்வது முதலியவைகளைச் செய்யவேண்டும்.

தானம் :—

கேட்டை நக்ஷத்திரத்தில், கருணைக்கிழங்குடன் கீரையை பிராமணர்களுக்கு தானம் செய்கின்றவன் மிருத்யுவை வென்று தான் விரும்பும் உலகத்தையடைவான்.

ஜ்யேஷ்டாயாம் —

விவாஹ க்ருஷி வாணிஜ்ய சஸ்த்ராணாஹவ பேஷஜம் ।
ந்ருத்தம் ச க்ருதசில்பாஸ்த்ர ஸங்க்ரஹம் க்ருஹமேவ ச ॥

தானம் —

ஜ்யேஷ்டே ஜ்யேஷ்டர்க்ஷே தத்வா ப்ராஹ்மணேப்யஸ்ஸசாகிகம் ।
ஸஹிதஸ்து ம்ருத்யும் ஜயேச்சைவ கதிமிஷ்டாம் ச கச்சதி ॥

## மூல நக்ஷத்திரத்தில்

விவாஹம், பயிரிடுதல், வியாபாரம் செய்வது, பயங்கரமான போர் புரிவது, மருந்து செய்து உண்பது, நாட்டியம்

கற்பது, சில்பம் கற்பது, ஆயுதங்கள் செய்வது, ஸந்தி (ஸமாதானம்) விக்கிரஹம், (சண்டை செய்வது) எழுதுவது இவைகளை, நிருருதியை தேவதையாகக் கொண்ட மூல நக்ஷத்திரத்தில் செய்யவேண்டும்.

தானம் :—

மூல நக்ஷத்திரத்தில், மனதை அமைதியாக வைத்துக் கொண்டு, கிழங்குகளையும், பழங்களையும், பிராம்ஹணர் களுக்கு தானம் செய்கின்றவன், தனது பிதிருக்களுக்கு பிரீதியையளிப்பவனாவான். தனக்குவிருப்பமான ஸத் கதியையுமடைவான். (17)

வூவஷாஷாஷா —

விவாடிவிஷஶஸ்த்ராக்நிகாரணொக்ராஹவாதிகம் I
வூவஷாஷாஷா கதவஂ ஊாஂவவிக்ரயகஃ வெ II

ஓரஂ —

கூய வூவஷாஷாஷா உயிவாஞ்ஞாணைவொஷிதஃ I
கூவூெதாவவஂவஞெ ஞாஹணெ வெஷவாரமெ II

ஞூாய ஜாயதெ ஶ்ரேஷ்டகூடெ வஹடணொஜ்ஜெ I
வாஞூவளதெஷ்ரூஃ வரிவூதஃ வஶஂஊாது யஜவாது
தயா II ௰அ II

பூராட நக்ஷத்திரத்தில்

55 விவாதம், விஷம், ஆயுதம், அக்கினி, இவைகளின் ஸம்பந்தமுள்ள காரியங்களையும், பயங்கரமாகவும், கொடுமையாகவும் இருக்கிற சண்டை முதலிய காரியங்

களையும், மாமிஸ விக்கிரயமும், பூராட நக்ஷத்திரத்தில் செய்யவேண்டும்.

தானம் :—

பூராட நக்ஷத்திரத்தில் உபவாஸமிருந்து தயிருடன் கூடிய பாத்திரங்களை, நல்ல குலத்தில் பிறந்தவனும், நல்ல நடத்தையுடையவனும், வேதத்தைக் கற்றுணர்ந்தவனுமானபிராமணனுக்கு தானம் செய்கிறவன், பற்பல குணங்களினுலும் பிரகாசமான உத்தமமான குலத்தில் பிறப்பான். பிள்ளைகளுடனும், பேரன்களுடனும் கூடியவனுகவும், பசுக்களுடையவனுகவும், செல்வமுடையவனுகவுமிருப்பான்.

உத்தராஷாடாஸு ஸம்பூஜிதி வ —

வஸ்த்ராபிஷேகஸம்ஸர்கவிவாஹவ்ரதபந்தனம் ।
ப்ரவேஶஸ்தாபனாஶ்சைவ வாஸ்துகர்மோத்தராத்ரயே ॥

தானம் —

உதகும்பம் ஸஸர்பிஷ்கம் ப்ரதத்யாத்ஸஹிரண்யகம் ।
தத்த்வோத்தராஸ்வஷாடாஸு ஸர்வகாமானவாப்னுயாத் ॥

தானம் —

[illegible] ஸம்பூஜிதா யேன தத்தா [illegible] ।
[illegible] ॥

உத்தராஷாடா நக்ஷத்ரே [illegible] ஶ்ரவணஸ-
[illegible] கார்ய: ஸம்பூஜ்ய [illegible]
[illegible] ॥ (கசு)

## உத்திராடம்–அபிஜித் நக்ஷத்திரங்களில்

வஸ்திரம் தரித்துக்கொள்ளுவது, பட்டாபிஷேகம் ஸீமந்தம், விவாஹம், உபநயநம், கிருஹப்பிரவேசம், தேவதாபிரதிஷ்டை, யானை, குதிரை, வீடு ஸம்பந்தமான காரியங்கள் இவைகளை, உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி இந்த நக்ஷத்திரங்களில் செய்யவேண்டும்.

தானம் :—

ஜலம் விட்டுக்கடைந்த தயிர், நெய், ஏராளமாகத் தேன், தேன்பாகு, இவைகளை உத்திராட நக்ஷத்திரத்தில் தானம் செய்கிறவன், உத்தமமான ஸகல லோகங்களையும் அடைவான்.

தானம் :—

அபிஜித் என்னும் நக்ஷத்திரத்தில் தேனும் நெய்யும் கலந்த பாலை, தார்மிகர்களாகவும் வித்துவான்களாகவும் இருப்பவர்களுக்கு தானம் செய்கிறவன், ஸ்வர்க்க லோகத்தில் பெருமையுடன் வஸிப்பவனாவான்.

உத்திராட நக்ஷத்திரத்தின் 4-வது பாதமும், திருவோண நக்ஷத்திரத்தில் முதலாவது 4 நாழிகை காலமும் சேர்ந்த காலத்திற்கு அபிஜித் என்று பெயர். (19)

ஶ்ரவணே —

ஶ்ருதிஷு க்ஷௌரஸீமந்தயாநோபநயநௌஷதம் ।
ஶஸ்த்ராஸ்த்ர(ஶஸ்த்ர ஶாஸ்த்ர)க்ருஹாரம்பம் விஷ்ணோர்கேஹ ப்ர-
வேஶநம் ॥

தாநம் —

ஶ்ரவணே கம்பலம் தத்வா வஸ்த்ராண்யஸிதமேவ ச ।

ஸுகேந யாத்வா யாநேந ஸ்வர்கே லோகே மஹீயதே ॥

## திருவோண நக்ஷத்திரத்தில்

தேவதாபிரதிஷ்டை, க்ஷௌரம், ஸீமந்தம், வாஹனத்தில் செல்லுவது, உபநயநம், ஔஷதம் ஸேவிப்பது, பூந்தோட்டம் வைப்பது (பட்டணம் கிராமம், வீடு, இவைகளை நிர்மாணம் செய்வது) பட்டாபிஷேகம் செய்வது, இவைகளை, விஷ்ணுவை தேவதையாகக் கொண்ட திருவோண நக்ஷத்திரத்தில் செய்யவேண்டும்.

தானம்

திருவோண நக்ஷத்திரத்தில், வஸ்திரத்திற்குள் கம்பளியை வைத்து தானம்செய்கிறவன், வெளுப்பான விமானத்தில் ஏறிக்கொண்டு ஸ்வர்க்கலோகத்தையடைவான். அங்கு பெருமையுடன் வஸிப்பான். (20)

தநிஷ்டாயாம் —

ஸர்வாண்யத்ர நக்ஷத்ராணி தநிஷ்டாயாந்தயேஷஜம் ।
ஸஸ்யலோ வாஸ்துகர்மாணி ஜலப்ரவேசாபூஷணம் ॥

தாநம் —

காயாக்கம் ச தநிஷ்டாஸு யாநம் தத்வா ஸமாஹித꞉ ।
வஸ்த்ரவேஷ்டிதம் தத்வா ப்ரேத்ய ராஜ்யம் ப்ரபத்யதே ॥

## அவிட்ட நக்ஷத்திரத்தில்

வஸ்திரம் தரிப்பது, உபநயனம்செய்வது, க்ஷௌரம் செய்துகொள்ளுவது, தேவதாபிரதிஷ்டைசெய்வது, வாஹ

ன்ங்களில் செல்லுவது, மருந்துண்பது, வீடு கட்டுவது ஸீமந்தம் செய்வது, கிருஹபிரவேசம் செய்வது, குதிரை யானைகளை வாங்குவது. நகைகள் செய்வது, அல்லது வாங்கி அணிவது, இவைகளை அவிட்ட நக்ஷத்திரத்தில் செய்ய வேண்டும்.

தானம் :—

அவிட்ட நக்ஷத்திரத்தில், மாடுகள் பூட்டிய வாஹனத்தை மன அமைதியுடன் தானம் செய்கின்றவனும் இந்த நக்ஷத்திரத்தில் புதிய வஸ்திரத்தை தானம் செய்கின்றவனும், மறு பிறவியில் ராஜியத்தையடைவான். (21)

𑌶𑌤𑌭𑌿𑌷𑌜𑌿 —

𑌪𑍍𑌰𑌵𑍇𑌶𑌸𑍍𑌥𑌾𑌪𑌨𑌾𑌕𑍍𑌷𑍌𑌰𑌜𑍀𑌵𑌨𑌸𑍍𑌨𑌾𑌨𑌭𑍇𑌷𑌜𑌂 ।
𑌅𑌶𑍍𑌵𑌾𑌰𑍋𑌹𑌣𑌵𑌿𑌭𑍂𑌷𑌾𑌵𑌾𑌸𑍍𑌤𑍁𑌕𑌰𑍍𑌮 𑌜𑌲𑌾𑌶𑌯𑍇 ॥

𑌦𑌾𑌨𑌂 —

𑌗𑌨𑍍𑌧𑌂 𑌶𑌤𑌭𑌿𑌷𑌕𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑍇 𑌦𑌤𑍍𑌤𑍍𑌵𑌾 𑌵𑌾𑌸𑌶𑍍𑌚𑌨𑍍𑌦𑌨𑌂 ।
𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑍍𑌯𑌪𑍍𑌸𑌰𑌸𑌾𑌂 𑌲𑍋𑌕𑌂 𑌯𑌤𑍍𑌰 𑌗𑌨𑍍𑌧𑌾𑌂𑌶𑍍𑌚
𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌾𑌨𑍍 ॥

சதய நக்ஷத்திரத்தில்

கிருஹப்பிரவேசம், தேவதாபிரதிஷ்டை, க்ஷௌரம், உபனயனம், மருந்துண்பது, குதிரை வாங்குவது, ஏறுவது, ஆபரணம் செய்வது அணிவது, ஸீமந்தம், வீடு கட்டுவது, இவைகளை வருணனை தேவதையாகக் கொண்ட சதய நக்ஷத்திரத்தில் செய்யவேண்டும்.

தானம் :—

சதய நக்ஷத்திரத்தில், சந்தனம் அல்லது மணங்கமழும் வாஸனை திரவியம், கருங்காலிச் சந்தனம், (செஞ்சந்தனம்).

இவைகளை தானம் செய்கின்றவன், அப்ஸரஸ் ஸ்திரீகள் வஸிக்கும் உலகத்தையடைவான். எப்பொழுதும் நறு மணங்கமழும் சந்தனத்தையுமடைவான். (22)

பூர்வப்ரோஷ்டபதாயாம் —

விவாதவிஷஶஸ்த்ராக்நிதாருணோக்ராஹவாதிகம் ।
பூர்வப்ரோஷ்டபதேஷ்வேவம் கார்யம் மாம்ஸவிக்ரயணாதிகம் ॥

தானம் —

பூர்வப்ரோஷ்டபதாயோகே நாநாபக்ஷ்யப்ரதாயகே ।
ஸர்வபக்ஷ்யஸமோபேதம் ஸமைஃ ஸுகீ பவேத் ॥ ௨௩ ॥

பூரட்டாதி நக்ஷத்திரத்தில்

**விவாதம் (வியவஹாரம் செய்வது) விஷஸம்பந்த மான காரியங்கள், சஸ்திர (ஆயுதங்கள்) ஸம்பந்தமான காரியங்கள், அக்கினி ஸம்பந்தமான காரியங்கள், பயங்கர மான காரியங்கள், கொடூரமான காரியங்கள், சண்டை போடுவது, முதலிய காரியங்களையும், மாம்ஸம் விற்பது, முதலிய காரியங்களையும், பூரம், பூராடம், பூரட்டாதி, இந்த நக்ஷத்திரங்களில் செய்யவேண்டும்.**

**தானம் :—**

**பூரட்டாதி நக்ஷத்திரத்தில், ஸகல விதமான பக்ஷணங் களுடனும், பழவகைகளுடனும் மொச்சையை தானம் செய் கின்றவன், பரலோகத்தில் அல்லது மறுபிறப்பில் ஸகலவித மான ஸுகபோகங்களையுமடைவான். (23)**

உத்தரஹாத்ரபதாவஸ்—

வஸ்த்ராபிஷேகஸீமந்தவிவாஹவ்ரதபந்தநம் ।
ப்ரவேசஸ்தாபநாஸ்வாஹஸ்தி கர்மோத்தராத்ரயே ॥

தாநம்—

ஔரப்ரஞ்சோத்தராயோகே யஸ்ய மாம்ஸம் ப்ரயச்சதி ।
பித்ரூந் ப்ரீணாதி ஸகலாந் ப்ரேத்ய சாநந்த்ய

மச்நுதே ॥ உச ॥

உத்திரட்டாதி நக்ஷத்திரத்தில்

வஸ்திரம் அணிந்துகொள்ளுவது, பட்டாபிஷேகம் செய்வது, ஸீமந்தம், விவாஹம், உபனயனம், கிருஹபிரவேசம், தேவதா பிரதிஷ்டை, இவைகளைச் செய்வது, குதிரை யானை ஸம்பந்தமான காரியங்கள், வீடு கட்டுவது, இவைகளை, உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, இந்த நக்ஷத்திரங்களில் செய்யவேண்டும்.

தானம் :—

உத்திரட்டாதி நக்ஷத்திரத்தில், வெள்ளாட்டு மாமிஸத்தை தானம் செய்கின்றவன், ஸகல பிதிருக்களையும் திருப்தி செய்விப்பவனாவான். பரலோகத்தில் எல்லையற்ற ஸுகபோகங்களை யடைவான். (24)

ரேவத்யாம் —

விவாஹவ்ரதபந்தாஸ்வ ப்ரதிஷ்டாயாநஹேக்ஷணம் ।
ப்ரவேசவஸ்த்ரஸீமந்தக்ஷௌரஹேஷஜமந்த்ரஹே ॥

தாநம் —

காம்ஸ்யோபதோஹநீம் தேநும் ரேவத்யாம் ய: ப்ரயச்சதி |
ஸ ப்ரேத்ய காமாநாதாய தாதாரமுபதிஷ்டதே || ௨௫ ||

## ரேவதீ நக்ஷத்திரத்தில்

விவாஹம், உபநயநம், தேவதா பிரதிஷ்டை, வாஹன மேறுவது ஆபரண மணிந்துகொள்ளுவது, கிருஹப்பிரவேசம், வஸ்திர முடுத்திக்கொள்ளுவது, ஸீமந்தம், க்ஷௌரம் செய்து கொள்ளுவது, மருந்துண்பது, இவைகளை ரேவதீ நக்ஷத்திரத்தில் செய்யவேண்டும். (25)

தானம் :—

ரேவதீ நக்ஷத்திரத்தில் பால் கறப்பதற்கு வெண்கலப் பாத்திரத்துடன் பசுவை தானம் செய்கின்றவன் மறுபிறவியில் ஸகல அபீஷ்டங்களைப் பெறுவான். பசுக்களையும் அடைவான்.

ஸ்வஸ்திவாக்யம் —

யாத்ராவதாயநக்ஷௌரவஸ்த்ராஹரணக்ரியா: |
ஸ்வாவதாஸ்வஹயாநாஸ்த்ரக்ருஷிவித்யாதயோஷ்விஹ ||

தாநம் —

ரயஸ்வஸமாயுக்தம் உக்வாஶ்விந்யாம் கரோதி ய: |
ஹஸ்த்யஶ்வரதஸம்பந்நே வம்ஶே ஜாயதே நர: ||

## அசுவதீ நக்ஷத்திரத்தில்

யாத்திரை, உபனயனம், க்ஷௌரம், ஸீமந்தம், ஆபரண காரியங்கள், தேவதா பிரதிஷ்டை, குதிரை—யானைகளில் பிரயாணம், இவைகளையும், ஆயுதங்சள்

செய்வது, பயிரிடுவது, வித்தியாரம்பம் செய்வது, முதலிய வைகளையும், அசுவதீ நக்ஷத்திரத்தில் செய்யவேண்டும்.

தானம் :—

அசுவதீ நக்ஷத்திரத்தில், குதிரை பூட்டிய ரதத்தை தானம் செய்கின்றவன், யானைகளும் குதிரைகளும் நிறைந்த குலத்தில், தேஜோவானாகப் பிறப்பான்.

பரண்யாம் —

வாபீகூபதடாகாக்நிவிஷஶஸ்த்ராதி தாருணம் ।
பிலப்ரவேஶகணிதநிக்ஷேபாதி யமர்க்ஷகே ஸதா ॥

தானம் —

பரண்யாம் திலதேநும் யோ த்விஜாதிப்ய: ப்ரயச்சதி ।
கா: ஸுப்ரபூதா ப்ராப்நோதி நர: ப்ரேத்ய யஶஸ்ததா ॥

பரணீ நக்ஷத்திரத்தில்

குட்டை, கிணறு, குளம், இவைகளை வெட்டுவது, அக்னி—விஷம்—ஆயுதம் இவைகள் ஸம்பந்தமான காரியங்கள், கொடுமையாகவும், பயங்கரமாகவும் இருக்கும் காரியங்கள், குகைகளில் பிரவேசிப்பது, கணிதம் கற்பது, புதையலெடுப்பது, இவைகளை பரணீ நக்ஷத்திரத்தில் செய்ய சுப பலனை யளிப்பதாம்.

தானம் :—

பரணீ நக்ஷத்திரத்தில், திலதேனுவை பிராம்ஹணர்களுக்கு தானம் செய்கின்றவன், ஏராளமான பசுக்களை யடைவான். மறுமையில் புகழையுமடைவான். (27)

(* திலதேனு—கம்பளியினாலே பசுவைப் போன்ற உருவத்தைச் செய்து, அதனுள் எள்ளைக் கொட்டி பசு வடிவுடையதாகச் செய்வது.)

௩௨௧. அத க்ருத்திகாதிஷு ஸப்தவிம்சதி நக்ஷத்ரேஷு விஷநாடீப்ரவேசகால: ॥

(ஜ்யோதிஷ வித்யாமாதவீயே)

த்ரிம்சத் (௩௰) த்விகுணிதக்ருதி (௪௰) மநு (௧௪)
ஸலிலா: (௨௧) த்ரிம்சத் (௩௰) க்ருதி (௨௰) த்விஜா: (௩௨)
த்ரிம்சத் (௩௰) ।
க்ருதி (௨௰) த்ருதி (௧௮) ஸலிலா: (௨௧) க்ருதி (௨௰)
மநு (௧௪)
மநு (௧௪) திச (௰) மநு (௧௪) க்ருதி (௨௰) ஜிநா: (௨௪)
க்ருதி: (௨௰) ககுப: (௰) ॥

திச (௰) த்ருதயோ (௨௮) ந்ருபதி (௧௬) ஜிநா: ௨௪)
த்ரிம்சத் (௩௰) பஞ்சாசத (௫௰) ஜிநா: (௨௪)
தேப்ய: ।
பரதோ ஘டீசதுஷ்கம் (௪) விஷஸம்ஜ்ஞம் க்ருத்திகாதிஷு
ஜ்ஞேயம் ॥ ௭ ॥

## 321. கிருத்திகை முதலிய 27 நக்ஷத்திரங்களில் விஷநாடி பிரவேசகாலம்

(ஜ்யோதிஷ வித்தியாமாதவீயத்தில்)

கிருத்திகை முதலிய நக்ஷத்திரங்களில் முறையே, 30, 40, 14, 21, 30, 20, 32, 30, 20, 18, 21, 20. 14, 14, 10, 14, 20, 24, 20, 10, 10, 28, 16, 24, 30, 50, 24, இந்த நாழிகைக்கு பிறகு விஷநாடி பிரவேச காலமாகும். கீழே கூறிய நாழிகைக்குமேலே 4 நாழிகை காலம் விஷ நாடி காலமாகும்,

## * கிருத்திகை முதலிய நக்ஷத்திரங்களில் விஷநாடீ கால விவரம்

| நக்ஷத்திரம் | விஷநாடீ காலம் |
|---|---|
| கிருத்திகை | 30—34 |
| ரோஹிணி | 40—44 |
| மிருகசீருஷம் | 14—18 |
| திருவாதிரை | 21—25 |
| புனர்பூசம் | 30—34 |
| பூசம் | 20—24 |
| ஆயிலியம் | 32—36 |
| மகம் | 30—34 |
| பூரம் | 20—24 |
| உத்திரம் | 18—22 |
| ஹஸ்தம் | 21—25 |
| சித்திரை | 20—24 |
| ஸ்வாதி | 14—18 |
| விசாகம் | 14—18 |
| அனுஷம் | 10—14 |
| கேட்டை | 14—18 |
| மூலம் | 20—24 |
| பூராடம் | 24—28 |
| உத்திராடம் | 20—24 |
| திருவோணம் | 10—14 |
| அவிட்டம் | 10—14 |
| சதயம் | 28—32 |
| பூரட்டாதி | 16—20 |
| உத்திரட்டாதி | 24—28 |
| ரேவதி | 30—34 |
| அசுவதி | 50—54 |
| பரணி | 24—28 |

௩௨௨ அத க்ருத்திகாதி ஸப்தவிம்ஶதி நக்ஷத்ரேஷு
அம்ருதநாடீப்ரவேஶகாலா: ‖

(ஜ்யோதிஷே வித்யாமாதவீயே)

ஸம்க்ருத்யா(௨௪) க்ருதி (௨௨) நாக (௮) பாஸர (௧௫)
ஜிநை(௨௪)ரிந்த்ரை(௧௪)ஸ்த்ரிதிஹ்யாம்(௨௭) ஜிநை(௨௪)
உபுந(௧௪)ர்விஶ்வை: (௧௨) திதி (௧௫) நாக (௮) ஶக்ர(௧௪)
வஸுபி:(௮)வேதை(௪)ர்வஸு(௮)ஶக்ரை:(௧௪)க்ரமாத் ।
வித்யா (௧௪) ஶக்ரா (௧௪) ப்தி (௪) யாமா(௪)ப்தி(௪)ர்திக்(௧௦)
த்ருதி (௧௮) ஜிநை (௨௪) ர்விஶ்வை: (௧௨) வாராணை:
(௧௮) யாவா நாடீ த்ரிம்ஶத் (௩௦) (ஸ்ஸாப்தகம்) தீத்வா அதேஷு
வாராதேன நாட்ய: ப்ரதமே(௪)ம்ருதாக்ய (௧) ‖ ௨௭ ‖

322. கிருத்திகை முதலான 27 நக்ஷத்திரங்களில்
அமிருதநாடி பிரவேச காலங்கள்

(ஜ்யோதிஷத்தில் வித்யாமாதவீயத்தில்)

கார்த்திகை முதலிய 27 நக்ஷத்திரங்களில் முறையே, 24, 22, 8, 15, 24, 14, 27, 24, 14, 12, 15, 8, 14, 8, 4, 8, 14, 14, 14, 4, 4, 4, 10, 18, 24, 12, 18, 30, இந்த நாழிகைகளுக்குப் பிறகு 4 நாழிகை காலம் அமிருத நாடிகாலமாகும்.

* கிருத்திகை முதலிய நக்ஷத்திரங்களில்
அமிருதநாடி கால விவரம்.

| நக்ஷத்திரம் | அமிருதநாடி காலம் |
| --- | --- |
| கார்த்திகை | 24—28 |
| ரோகிணி | 22—26 |

| | |
|---|---|
| மிருகசீருஷம் | 8—12 |
| திருவாதிரை | 15—19 |
| புனர்பூசம் | 24—28 |
| பூசம் | 14—18 |
| ஆயிலியம் | 27—31 |
| மகம் | 24—28 |
| பூரம் | 14—18 |
| உத்திரம் | 12—16 |
| ஹஸ்தம் | 15—19 |
| சித்திரை | 8—12 |
| ஸ்வாதி | 14—16 |
| விசாகம் | 8—12 |
| அனுஷம் | 4—8 |
| கேட்டை | 8—12 |
| மூலம் | 14—18 |
| பூராடம் | 14—18 |
| உத்திராடம் | 14—18 |
| திருவோணம் | 4—8 |
| அவிட்டம் | 4—8 |
| சதயம் | 4—9 |
| பூரட்டாதி | 10—14 |
| உத்திரட்டாதி | 18—22 |
| ரேவதி | 24—28 |
| அசுவதி | 12—16 |
| பரணி | 18—22 |

[* இந்த அமிர்தநாழிகை காலங்களில் 28 விதம் நாழிகைகள் கூறப்பட்டிருக்கின்றன. ஆகவே இறுதியிலிருக்கும் 30 என்ற எண்ணைக் குறிக்கின்ற பதத்திற்கு பதிலாக இந்த நாழிகைகளை என்ற பொருள்படும் பதத்தைச் சேர்க்கவேண்டுமென்று தோன்றுகிறது ]

ஸ்ரீ அஸ்வின்யாதி நக்ஷத்ர ஜாதகுணாதி விவரணம்

(ஜாதகாபரணே)

தத்ராதௌ அஸ்வின்யாம் —

ஸதைவ ஸேவாஸமுபஸ்தித: ஸ்ரீமான்

ஸத்யாந்வித: ப்ராப்தஸமஸ்தவைபவ: ।

யோஷித்விபூஷாத்மஜபூரிதோஷ:

ஸ்யாதச்விநீஜன்மனி மானவ: ॥ ௧ ॥

அசுவதி முதலிய 27 நக்ஷத்திரங்களில் பிறந்தவனுடைய குணங்கள் மறுபடியும். (ஜாதகாபரணத்தில்.)

அவற்றுள், அசுவதியில் :—

அசுவதீ நக்ஷத்திரத்தில் பிறந்தவன், எப்பொழுதும் மேலும் மேலும் மேன்மையுடன் பிரகாசிப்பவனும், வணக்கமுடையவனும், உண்மையுடையவனும், ஸகலவிதமான செல்வங்களையுமுடையவனும், மனைவி, ஆடை ஆபரணங்கள், பிள்ளைகள், இவைகளாலே அதிக ஸந்தோஷமுடையவனுமாவான். (1)

பரண்யாம் —

ஸதாபவாதவ்ருத்தி (ஹா)பவாதை:

நாநாவிநோதைச்ச விநீதகாம: ।

ஜலாத்பீதிப்ரவண: வரஸ்த்ரீக:

ப்ராணீ பரண்யாம் பரணீஸஞ்ஜாத: ॥ ௨ ॥

பரணியில்

பரணீ நக்ஷத்திரத்தில் பிறந்தவன், எப்பொழுதும் பெரிய அபவாதங்களினாலே அபகீர்த்தியை யடைகின்ற

வனும், பலவிதமான விநோதங்களைப் பார்த்து ஆசைகளைக் கழிப்பவனும், ஜலத்தில் பயம் அடைகின்றவனும், (ஜலகண்டங்களுடையவனும்) சபல சித்தமுடையவனும் (நிலையற்ற மனம் அல்லது காமமுடையவனும்) ரஹஸ்யமாகக் கெடுதி செய்கின்றவனும், பிராணிகளைப் பழக்குகின்றவனுமாவான். (2)

कृत्तिकायां —

क्षुत्प्रायी क्लिष्टकायो धनविहीनः
व्यर्थाटनासक्तिः कृतघ्नः ।
कठोरवाक् निन्द्यकर्मा च शश्वत्
भवेत् कृत्तिकाजन्मनि यस्य जन्तोः ॥ ३ ॥

கார்த்திகையில்

கார்த்திகை நக்ஷத்திரத்தில் பிறந்தவன், அதிகப் பசியுடையவனும், சரீரவலிமையில்லாதவனும், செல்வமில்லாதவனும், (ஏழ்மையுடையவனும்) வீணாக அலைவதில் ஆசையுடையவனும், செய்நன்றி மறப்பவனும், கொடுமையாகப் பேசுகின்றவனும், இகழத்தக்க காரியத்தைச் செய்கின்றவனுமாவான். (3)

रोहिण्यां —

धर्मकर्मसु दक्षः कृषीवलः
चारुशीलो विलासी कलावान् ।
वाग्मी प्राज्ञः स्थिरधीराशयः
रोहिणी भवति यस्य जन्मभे ॥ ४ ॥

ரோகிணியில்

ரோஹிணி நக்ஷத்திரத்தில் பிறந்தவன், தரும காரியங்களைச் செய்வதில் ஸாமர்த்திய முடையவனும், பயிர் செய்

என்றவனும், சிறந்த நடத்தையுடையவனும், அழகான சரீரமுடையவனும், பேச்சுத் திறமையினாலே பிறர் மனதை அறியும் சக்தியுடையவனுமாவான். (௪)

ம்ருகஶீர்ஷே —

ஶராஸநாப்யாஸரதோ விநீத:
ஸதாநுரக்தோ குணிநாம் குணேஷு |
போக்தா ப்ருதுஸ்நேஹரஸேந யுக்த:
ஸந்மார்க்கவேத்தா ம்ருகஜாதஜந்து: ‖ ௫ ‖

மிருகசீருஷத்தில்

மிருகசீருஷ நக்ஷத்திரத்தில் பிறந்தவன், வில் வித்தையைக் கற்பதில் ஈடுபட்டவனும், வணக்கமுடையவனும், குணவான்களிடத்தில் பிரியமுடையவனும், நன்கு ஆஹாரம் செய்கின்றவனும், ராஜஸ்நேஹம் நிறைந்தவனும், ஸாதுக்களின் வழியை, அல்லது நல்வழியை அறிந்தவனுமாவான். (5)

ஆர்த்ராயாம் —

க்ஷுத்பாயிகோ ரூக்ஷஶரீரகாந்தி:
பஹு(ஸு)ப்ரிய: கோபயுத: க்ருதக்ந: |
ப்ரஸக்திகார்யே ச ஸவேர்ஷ்யகோ ஆர்த்ரா
ஜயார்த்ரவேதா ந ஸவேத்ரநந்த்ய: ‖ ௬ ‖

திருவாதிரையில்

திருவாதிரை நக்ஷத்திரத்தில் பிறந்தவன், அதிகப் பசியுடையவனும், பயங்கரமான அல்லது கரடுமுரடான சரீரத்தையுடையவனும், அதிக (பந்துக்களிடத்தில்) பிரிய

மூடையவனும், கோபமுடையவனும், செய்நன்றி மறப்பவனும், நஞ்சு நிறைந்த மனமுடையவனுமாவான். (6)

புநர்வஸௌ —

ப்ரபூதயத்ந: க்ருதஶாஸ்த்ரயத்ந:
ஸரத்நசாமீகரபூஷணாட்ய: ।
தாதா ப்ரதாபீ [illegible]
புநர்வஸௌ யஸ்ய பவேத் ப்ரஸூதி: ॥

## புனர்வஸு நக்ஷத்திரத்தில்

புனர்பூசம் நக்ஷத்திரத்தில் பிறந்தவன், பெரு முயற்சியுடையவனும், சாஸ்திரங்களைக் கற்றவனும், சிறந்த ரத்நங்கள், நல்ல தங்கம், இவைகளினாலே செய்யப்பட்ட ஆபரணங்களை யணிந்திருப்பவனும், தானம் செய்கின்றவனும், புகழுடையவனும், பூமியும் செல்வமு முடையவனுமாவான். (7)

புஷ்யே —

ப்ரஸந்நகாத்ர: பித்ருமாத்ருபக்த:
ஸ்வதர்மயுக்தோ விநயாபியுக்த: ।
பவேந்நர: [illegible] புஷ்யஜாத:
ஸந்மாநதாநாதநவாஹநாட்ய: ॥ அ ॥

## பூச நக்ஷத்திரத்தில்

56

பூச நக்ஷத்திரத்தில் பிறந்தவன், குற்றமற்ற சரீரத்தை யுடையவனும், பிதா மாதா இவர்களிடத்தில் பக்தி (அன்பு) உடையவனும், தனக்குரிய தர்மங்களை அனுஷ்டிப்பவனும்,

ணக்கமுடையவனும், வெகுமதியாகப் பெற்ற பற்பல தனங்களையும் வாஹனங்களையுமுடையவனுவான். (8)

ஆஶ்லேஷாயாம் —

வ்யர்த்தாடனஸ்ஸ்யாத் ஸுமஹாக்ஷ்ட சேஷ்ட:
கஷ்டப்ரதஸ்ஸ்யாத் வ்யர்த்த ஜனானாம் ।
ஸாஹங்கார ஸபலோ ஹி வ்யயகர்த்தா
காமக்ரோதஸம்யுதோ ஜன்மதிஷ்ண்யே ॥ ௯ ॥

(அதிகம் மூலநக்ஷத்ர ஸ்வரூபேண த்ருஷ்டவ்யம் ।)

ஆயிலியத்தில்

ஆயிலிய நக்ஷத்திரத்தில் பிறந்தவன், வீணாக ஊர் சுற்றுகின்றவனும், மிகவும் கெடுதலான செய்கையுடையவனும், ஜனங்களுக்கு வீணாக கஷ்டத்தையுண்டு பண்ணுகின்றவனும், அஹங்கார முடையவனும், வீண் சிலவு செய்கின்றவனும், காமவெறிகொண்ட மனமுடையவனுமாவான். (9)

[அதிகமாகக் கூறப்பட்டிருக்கும் பலனை மூல நக்ஷத்திர பலனில் பார்த்துக் கொள்ளவும்.]

மகாயாம் —

கலோராசித்த: பித்ருபக்தியுக்த:
தீவ்ரஸ்ஸ்வபாவஸ்ஸ்வனஸ்ஸ்வரூப: ।
யஸ்ய ஜன்மம் யஸ்ய மகாநக்ஷத்ரே ஸ்யாத்
மதிஸ்வராதிவியாதகக்ஷா ॥ ௰ ॥

### மகத்தில்

மகா நக்ஷத்திரத்தில் பிறந்தவன், கொடூரமான மன முடையவனும், தகப்பனிடத்தில் பக்தியுள்ளவனும், கொடுமையான ஸ்வபாவமுடையவனும், குற்றமற்ற மன முடையவனுமாவான். அவனுடைய புத்தியானது, எப் பொழுதும் பகைவர்களை யழிப்பதிலேயே ஈடுபட்டதாக இருக்கும். *(10)*

### பூர்வபல்குந்யாம் —

அதிதாதா ஸாஹஸீ பஹுத்ராதா
கோபாடோபீ ஶிகிவாநோऽதிதக்ஷ: ।
அப்ராப்த: க்ரூரோऽத்யந்தஸஞ்ஜாதகர்வ:
பூர்வாபல்குந்யாம் சேஜ் ஜநநகாலே ॥ ௧௧ ॥

### பூரத்தில்

பூர நக்ஷத்திரத்தில் பிறந்தவன், அதிகமாக தியாகம் (பொருளை வழங்குகின்றவன்) செய்கின்றவனும், துணிந்து காரியங்களைச் செய்கின்றவனும், பலரைக் காப்பாற்று கின்றவனும், கோபத்தில் ஆடம்பரங்களை யுடையவனும், அழகான மயிருடையவனும், அல்லது மயில் வளர்ப்பவனும், மிகுந்த ஸாமர்த்தியமுடையவனும், அயோக்கியத்தன முடையவனும், கொடூரமானவனும், மிகுந்த கர்வமுடைய வனுமாவான். *(11)*

### உத்தரபல்குந்யாம் —

தாதா தயார்த்ரஸ்வாந்த: ஸுஶீல:
விக்யாதகீர்த்திர் ந்ருபதிப்ரியாத்ம: ।

தீரோ நரோத்ஸாஹயுதோ(அ)திஸூர:

ஸேவாந்தராஸக்தமனா வஸந்த: ॥ ௧௨ ॥

உத்திரத்தில்

உத்திர நக்ஷத்திரத்தில் ஜனித்தவன், தானம் செய்கின்றவனும், தயையுள்ளவனும், மிகவும் நல்ல நடத்தை, அல்லது ஸ்வபாவமுடையவனும், பரந்த புகழையுடையவனும், அரசனுக்கு முக்கியமானவனும், அல்லது மந்த புத்தியாக இருப்பவனும், தைரியமுள்ளவனும், மிகவும் தாமத ஸ்வபாவமுடையவனுமாவான். (12)

ஹஸ்தே —

தாதா உதஸ்வீ ஸ்வாந்தரா(ம்) யஶஸ்வீ

ஸத்தேவதேவார்ச்சனயஜ்ஞசக்தா ।

விஸத்திகாரோ யதி யஸ்ய ஹஸ்த:

ஹஸ்தோத்பவா தஸ்ய ஸமஸ்தஸம்பத: ॥ ௧௩ ॥

ஹஸ்தத்தில்

ஹஸ்த நக்ஷத்திரத்தில் பிறந்தவன், வேண்டியவர்களுக்கு வேண்டியதைக் கொடுப்பவனுகவும், மிகவும் நல்ல மனமுடையவனுகவும், அல்லது தாராளமான மனமுடையவனுகவும், புகழுடையவனுகவும், பிராமணர்கள், தேவதைகளை பூஜிப்பவனுகவும் வேள்வி செய்கின்றவனுகவும் இருப்பான். ஸகல விதமான ஸம்பத்துக்களையுமுடையவனுமாவான். (13)

சித்ராயாம் —

விசித்ரவஸ்த்ராபரணஸ்த்ரீவசக்ஷு:

நயேதிதக்ஷஶ்ச விசித்ரவாஸா: ।

வூஸஷுதிகாஸெ யஷி யஸூ விக்ஷா
ஸாஃவிவிஙவிக்ஷா வஜூஃ கஸூ மாஷ்ஷ ॥கச॥

சித்திரையில்

சித்திரா நக்ஷத்திரத்தில் பிறந்தவன், எதிரியை தபிக்கும்படி செய்யும் தனது புகழினாலே பகைவர்களை மிகவும் தாபமடையச் செய்கின்றவனும், நீதியில் மிகவும் ஸாமர்த்திய முடையவனும், இன்று ஒருவிதம் நாளை ஒரு விதமென விசித்திரமான ஆடைகளை அணிந்து கொள்ளு கின்றவனும், விசித்திரமான (பிறரை பிரமிக்கும்படி செய்யக் கூடிய) சாஸ்திர ஜ்ஞானத்தையுடையவனுமாவான். (14)

ஸூாக்ஷூ॰—

கூவஙுஷவঃ வூஷயா ஸஜெகঃ
காஜாவாரஸ்ரீகிரகிவூஸஜঃ।
ஸூாகீவூஸஷகஸ உநஃஜஸூ யஸூ
ஹவெஷூவঃ வூஷுவிஹஷகியஃக்ஷঃ ॥ கரு ॥

ஸ்வாதியில்

ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் பிறந்தவன், மன்மதனைப் போன்ற சரீரமுடையவனும், ஒளி வீசுகின்ற சரீர காந்தியை உடையவனும், மனைவியிடம் மிகுந்த பிரியமுள்ளவனும், மிகவும் தெளிந்த மனமுடையவனும், ஸகலவிதமான செல்வங்களையுமுடைய அரசனாக இருப்பவனுமாவான். (15)

விஶாவாயா॰—

ஸஷாநஃரக்ஷொஷிஸஃரகிுயாயா॰
யாகஃகிுயாயாஃவி ஷொஷுஸஸ்ரூঃ।

யஸ்ய வ்யஸஹதள வ ஹவெஷிஶாவா
ஸவா ந கஸ்ராவி ஹவெநநஷ்ய: ‖ கசு ‖

### விசாகத்தில்

விசாகா நக்ஷத்திரத்தில் ஜனித்தவன், அக்கினி காரியங்களிலும் (ஹோமங்கள் செய்வதிலும்) தேவதைகளை பூஜை செய்வதிலும், எப்பொழுதும் ஆவலுள்ளவனும், எப்பொழுதும் தாது வாதத்தில் ஆசையுடையவனும், சில ஸமயங்களில் கடுமையாகவும், சில ஸமயங்களில் சாந்தமாகவும் இருப்பவனுமாவான். இவன் யாரிடமும் ஸ்நேகமாக இருக்கமாட்டான். (16)

ஷநஶாயாயாம் —

ஸத்ராஷிகீதிபுஷ்ய ஸஷொசஸவஷ்யாச
ஜெதா ஶிவஹணாம் வ கஶாவ்யவீண: |
ஸ்யாசஸம்ஹவெ யஸ்ய கிஶாநஶாயா
ஸம்வஷிவாயா விவியா வ தஸ்ய ‖ கஎ ‖

### அனுஷத்தில்

அனுஷ நக்ஷத்திரத்தில் பிறந்தவன், நல்ல சரீர சோபையும் புகழுமுடையவனும், எப்பொழுதும் உத்ஸவங்களைக் கொண்டாடுகின்றவனும், பகைவர்களை வெற்றி கொள்ளுகின்றவனும், கலைகளைக்கற்றுணர்ந்தவனுமாவான். இவனுடைய செல்வமானது பலவிதமாகச் சிலவழிந்து சிதையும். (17)

ஜெ்யஷ்டாயாம் —

ஸசகீதிபுகாஷிவிபுஹதாஸஜெத:
வித்ராஙிதொதூஷயஸசவுதாவ: |

ஜ்யேஷ்டர்க்ஷஜாதோ ஹி யஶோ வஸு ஶ்ரீ
ஜ்யேஷ்டோத்தவக்ஸ்ஸ்யாச்ச வாக்மீ விஶேஷாச்ச ॥

## கேட்டையில்

கேட்டை நக்ஷத்திரத்தில் பிறந்தவன், நல்ல புகழும் சரீர சோபையுமுடையவனும், பிரபுத்துவமுடையவனும், செல்வம் படைத்தவனும், மிகவும் பிரகாசிக்கின்ற புகழுடையவனும், சிறந்த நிலைமையைப் பெற்றவனும், பேச்சாளியும், முதலாவது பிறந்தவனுமாவான். (18)

மூலே —

மூலம் விரூபாவயவம் ஸமூலம்
ஸரூபம் ஹரத்யேவ ஹி ஸந்தி ஸந்த: ।
வேத்ஸ்யா தத்ஸ்வரூபேதே விஶேஷாச்ச
ஸௌபாக்யாயு(ய)ஷ்ஷு குலாபிவ்ருத்திம் ॥௧௯॥

## மூலத்தில்

மூல நக்ஷத்திரமானது, காரணத்துடன் ஒன்றுக்கொன்று பொருத்தமில்லாத அவயவங்களையுடையதாகும். பலத்தைக் குறைத்துவிடும் என்று ஸாதுக்கள் சொல்லுகிருர்கள். அப்படிக்கில்லாமல் மாறுபாடுடையதாக இருந்தால், அது, ஸௌபாக்கியத்தையும், ஆயுளையும், குல விருத்தியையுமுண்டுபண்ணும். (19)

[ * மூலத்தில் பிறந்தவன் ஒன்றுக்கொன்று பொருத்தமில்லாத அங்கங்களையுடையவனுவான். அது காரணத்துடன் ஏற்பட்டதாக இருக்கும். அவ்வாறில்லாமல் ஸமமான அங்கங்களையுடையவனுக இருந்தால், அவன் விசேஷமான

செல்வமும், ஆயுளும், குலவிருத்தியு முடையவனுவான், என்பது பொருள்.]

(அத² மூலே விஶேஷ:)

௩௨௩ தத்ர அபு⁴க்தமூலாக்²யவ்ருத்³தா⁴வயவ
மூலஸ்ய ஸ்வரூபம் —

ஜ்யேஷ்டா²ந்த்யே க⁴டிகைகா ச மூலஸ்யாதௌ³ க⁴டீத்³வயம் ।

அபு⁴க்தமூலமித்யுக்தம்

(மூல நக்ஷத்திரத்தில் விசேஷம்)

### 323. அபுக்த மூலம் எனப்படும் விருத்தாவயவ மூலத்தின் ஸ்வரூபம்

கேட்டை நக்ஷத்திரத்தின் இறுதியில் ஒரு நாழிகை காலமும், மூல நக்ஷத்திரத்தின் ஆரம்பத்தில் இரண்டு நாழிகை காலமும், அபுக்தமூலம் எனப்படும்.

௩௨௪ அத² அபு⁴க்தமூலோத்பந்நஜாதகதோ³ஷஸ்ய
பரிஹாராய ஶாந்தி: —

(ஜாதகாப⁴ரணே)

தந்த்ராந்தரவிஶேஷோக்தம் ॥

அஷ்டவர்ஷாணி நாஶோऽஸ்ய தாதேந ஸஹ ஸம்ஸ்தி²தா ।
தத்³தோ³ஷபரிஹாராய ஶாந்தி: ஸம்ப்ரோச்யதே ததா³ ॥

ஜ்யேஷ்டா²ந்த்யக⁴டீமூலாத்³யை: ஸப்தத³ஶபி⁴: ப்ரவதா³ம்யஹம் ।

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

## 324. அபுக்த மூலத்தில் பிறந்ததால் உண்டான தோஷத்திற்கு பரிஹாரமான சாந்தி

( ஜாதகாபரணத்தில் )

அந்த காலத்தில் பிறந்த குழந்தையின் முகத்தை, க்ஷேமத்தை விரும்பும் தகப்பன், 8 அமாவாஸ்யைகாலம் அதாவது 8 மாதகாலம் பார்க்கக்கூடாது. ஆகவே, அந்த தோஷம் நீங்கும் பொருட்டு, சாந்திகர்மாவானது கூறப் படுகிறது.

100 துவாரமுடைய கடத்தில், சதௌஷதி மூலங் களையும் (100 விதமான ஔஷதிகளின் வேர்களையும்) ஸப்த மிருத்துக்களையும் (ஸமுத்திரம் 1, கங்கை காவேரி போன்ற நதி 2, ஜலாசயம் ஏரி குளம் போன்றது 3, நண்டு வளை 4, புத்து 5, விருஷபம் அல்லது பசுவின் கொம்பு 6, யானையின் தந்தம் 7 இத்தகை ஏழு இடங்களிலிருந்து ஸம்பா தித்த மண்) இவைகளையும் போட்டு பிராம்ஹணர்கள் அதற் குரிய ஜபம் செய்ய, அந்த கடத்தின் துவாரங்களிலிருந்து விழும் ஜலத்தில், குழந்தையின் தகப்பனும், அந்தப் பெண் குழந்தையும் ஸ்நாநம் செய்யவேண்டும். அதற்குரிய ஜபம், ஹோமம், தானம், இவைகளையும் செய்யவேண்டும். இவ்

விதம். செய்தால் தோஷங்கள் அகன்று சுபங்களுண்டாகும் நிச்சயம்.

புத்திமான்கள், விருத்தாவயவ மூலத்தில் பிறந்த சிசுவுக்கு, தோஷ பரிஹாரார்த்தமாக இவ்வித சாந்தியைக் கூறியுள்ளார்கள். க்ஷேமத்தை விரும்புகிறவர்கள், முனிவர்கள் கூறியுள்ளதை ஸத்யமென்று கருதவேண்டும்.

சுபம ஊஹுூாஶ்ரேஷயொஃ வாரணஹெஷெஹ
ஜாநி ஷஹுஹெஷாஃ ॥

(ஜாதகாஹரணெ)

ஊஹுவஸ்ய வாஷத்ரியெ க்ரமெண
விதாஜநந்யாஸ்ய ஸுதஸ்ய ரிஷ்டம் ।
தயவாஷஸ்ஹெொ நிதாஹும்
ஸாவெ விஹெுாஊஂ வரிகஹுநீயம் ॥

## மூலம் ஆயிலியம் இந்த 2 நக்ஷத்திரங்களில் பாதபேதத்தில் ஜனித்தவர்களின் மாறுபட்ட பலன்கள்

(ஜாதகாபரணத்தில்)

மூல நக்ஷத்திரத்தில் முறையே, 1, 2, 3, வது பாதங்களில் பிறந்தவர்கள், முறையே, பிதா—தாய்—மகன்— இவர்களுக்கு அரிஷ்டத்தை அளிப்பவனுவான். (மகன் என்பதற்கு பிறந்தவனின் மூத்த ஸஹோதரன் என்பது பொருள்.)

4வது பாதமானது மிகவும் சுப பலனை யளிப்பதாகும்.

ஆயிலிய நக்ஷத்திரத்தில் பிறந்தவனுக்கு, இதற்கு நேர் மாறுதலான பலனைக் கொள்ளவேண்டும். முதல்

பாதம் சுப பலனை யளிப்பதாகும். 2வது பாதம் மகனுக்கு அரிஷ்டம், 3வது பாதம் தாய்க்கு அரிஷ்டம், 4வது பாதம் தகப்பனுக்கு அரிஷ்டம் அளிக்கும் என்பதாம்.

அথ மூலஸ்ய யோகஹேதுந ஜந்மநி ஸமஹேஷாः ॥

(ஜாதகாபரணே)

க்ருஷ்ணே த்ருதீயா தஶமீ வலக்ஷே
ஸம்தோ தபீஜாக்ஷிபுவாம்யேஷ்வுஷேஷ்: ।
ஶேஜந்மகாலே க்வ தத்ர மூல-
மாநூலநம் தஸ்காமாரதே காலஸ்ய ॥

திவாவஸாயம் நிஶிஷ்டாதஃ பிதாவஸ்யாநாதமஸ்ய வ ।
வஶுநாம் ஶிஷ்யவதஸ்ய க்ருசாஸ் மூலநிஷ்டதஃ ॥

மூலத்துடன் திதி வாரங்களின் சேர்க்கையினலே உண்டாகும் பலன்கள்.

(ஜாதகாபரணத்தில்)

மூலநக்ஷத்திரத்துடன், கிருஷ்ணபக்ஷம் திருதீயை தசமி, சுக்லபக்ஷம் பஞ்சமி, இவைகள், செவ்வாய்கிழமை, சனிக்கிழமை, புதன்கிழமை. இவைகளுடன் சேர்ந்தால், அத்தகைய மூலத்தில் பிறந்தவன், அந்த குலத்திற்கே அழிவை யுண்டுபண்ணுகின்றவனுவான்.

இத்தகைய மூலத்தில் ஜனிக்கும்பொழுது, அது, பகலாக இருந்தால் பிதாவுக்கும், ஸாயங்காலமாக இருந்தால் மாமனுக்கும், இரவாக இருந்தால் பசுக்களுக்கும், காலை வேளையாக இருந்தால் ஸ்நேஹிதர்களுக்கும் அரிஷ்டத்தை யுண்டுபண்ணுவதாகும்.

௩௨௫ அத² ஸப²லநிஷ்ப²லத்வஜ்ஞாபகயோ: புருஷாக்ருதி மூலாஶ்லேஷயோ: ஸ்வரூபம் —

மூர்த்⁴நி பஞ்ச முகே² பஞ்ச ஸ்கந்த⁴யோ: க⁴டிகாத்³வயம் ।
பு⁴ஜாஷ்டௌ பு⁴ஜயோரஷ்டௌ ஹஸ்தயோர்ஹ்ருத³யேஷ்டகம் ॥

த்³வயம் நாபௌ⁴ த³ஶ கு³ஹ்யே ஷட்³ஜாநுநோஷ்ஷட் ச பாத³யோ: ।
விந்த்³யாத் புருஷாகாரே மூலஸ்ய க⁴டிகா: க்ரமாத் ॥

மஸ்தகாஸ்யோரதோ²தே³ஶே பஞ்சகே பித்ருநாஶநம் ।
ஸ்கந்த⁴யோர்த⁴நநாஶம் ச பா³ஹுயுக்³மே [illegible] ॥ ௧ ॥

ஸ்த்ரீலாப⁴: கரயுக்³மே ச ராஜ்யப்ராப்திர்ஹ்ருத³யே ப⁴வேத் ।
அல்பாயுர்நாபி⁴தே³ஶே ச கு³ஹ்யே ச [illegible] ॥

ஜாநுப்⁴யாம் ஸ்வர்ணலப்³தி⁴: பாத³யோர்தீ³ர்க⁴ஜீவிதா ।
க⁴டீமாத்ரம் விநா ப்ரோக்தம் மூலஸ்ய [illegible] ப⁴வேத் ॥

விஜ்ஞேயம் விபரீதம் ஸ்யாத் ஸார்பே த்வேவம் விசிந்தயேத் ।

## 325. பலபேதத்தைக் குறிக்கின்ற புருஷாகிருதி மூலம் ஆயிலியங்களின் ஸ்வரூபம்.

மூலம், ஆயில்யம் இவைகளின் கூடுதல் நாழிகையை, ஓர் புருஷவடிவமாகக் கல்பித்துக்கொண்டு, அதன் நாழிகைகளை உச்சியில் 5, முகத்தில் 5, தோள்களில் 2, புஜங்களில் 8, கரங்களில் 8, ஹிருதயத்தில் 8, நாபியில் 2, குஹ்யப் பிரதேசத்தில் 10, முழங்கால்களில் 6, பாதங்களில்

6, என பகிர்ந்து கல்பித்துக்கொண்டு, பலன்களைக் கூற வேண்டும். (சிரம் முதல் பாதம் வரையில் முறையே நாழிகைகளின் கூடுதல் 5+5+2+3+3+8+2+10+6+6=60.)

உச்சிக்குரிய நாழிகையில் பிறந்தவன் குடையை யடைவான். முகத்திற்குரிய நாழிகையில் பிறந்தவன் தகப்பனைக் கொல்லுவான். தோளுக்குரிய காலத்தில் பிறந்தவன் சுமை தூக்குவான். பாஹு (மேல்கை புஜம்) வுக் குரிய காலத்தில் பிறந்தவன் ஒருவித காரிய மும் செய்யமாட்டான். கரங்களுக்கு (கீழ் கைகளுக்கு) உரிய காலத்தில் பிறந்தவன் கொலை புரிவான், அல்லது கொலை செய்தவனைப் போலிருப்பான். ஹிருதயத்திற்குரிய காலத்தில் பிறந்தவன், ராஜ்யத்தை யடைவான். நாபிக் குரிய காலத்தில் பிறந்தவன், அல்பாயுளுடையவனுவான். குஹ்யப் பிரதேசத்திற்குரிய காலத்தில் பிறந்தவன் ஆச்ச ரியப்படத்தக்க ஸுகங்களையடைவான். முழங்காலுக்குரிய காலத்தில் பிறந்தவன், ஊர்கள் சுற்றுவதில் பிரியமுடைய வனுவான். பாதங்களுக்குரிய காலத்தில் பிறந்தவன், அல்பாயுளுடையவனுவான். இவ்விதமாக அந்தந்த நாழி கைகளில் பிறந்தவனுடைய பலன்களை முனிவர்கள் கூறி யிருக்கிறார்கள் என்பதை புத்திமான்கள் உணர்ந்து கொள்ளவேண்டும்.

இந்த பலன்கள், மூல நக்ஷத்திரத்தில் பிறந்தவ னுக்குக் கூறப்பட்டவைகளாம்.

ஆயிலியத்தில் பிறந்தவனுக்கு இதற்கு நேர் விரோத மான பலன்களைக்கொள்ளவேண்டும்.

அத ஜ்யேஷ்டாஜாதஸ்ய நாடீபலம்

ராக்ஷஸேஸா யாதஜாதஸ்ய ஸோமஸுதஸ்ய ஷண்ணீஸ்யுரு |
ஷ்ரீதா ஜாதா யஸ: காருஃ விஸ்வேஷ்வா ஸஹஷ்ரு ||

ஸவிதுஶ்ச கமலஸ்ய ஸமேக்ஷ திவாகர: |
கந்தர்வோ யமதேவஶ்ச ப்ரஹ்மா விஷ்ணுர்யமஸ்ததா || ௨ ||

ஈஶ்வரோ விஷ்ணுரிந்த்ரஶ்ச பவநோ முநயஸ்ததா |
ஷண்முகோ ப்ருங்கிரிஷிஶ்ச கௌரீ நாம்நா ஸரஸ்வதீ ||

ப்ரஜாபதிஶ்ச கதிதா: ஸப்தத்ரிம்ஶந்முஹூர்த்தாதிநாயகா: |
விபரீதா: பஞ்சஜ்யேஷ்டா: ஜ்யேஷ்டாஜாதபாலகே ||

த்விதீயே ப்ரதமே ஷஷ்டே பாதே தாஸமே ததா |
த்ரயோவிம்ஶே ச நவமே கர்மக்ஷயகராஸ்ஸ்ம்ருதா: || ௩ ||

மூலம், ஆயிலியம் இந்த 2 நக்ஷத்திரங்களின்
முஹூர்த்த நாயகர்களின் பெயர்கள்

ராக்ஷஸன் 1, யாதுதானன் 2, ஸோமன் 3, சுக்கிரன் 4 பணீசன் 5, பிதா (பிதிருதேவதைகள்) 6, மாதா (மாதிரு தேவதைகள்) 7, யமன் 8, காலன் 9, விச்வேதேவர்கள் 10, மஹேசன் 11, ஸர்பன் 12, குபேரன் 13, இந்திரன் 14, மேகம் 15, திவாகரன் 16, கந்தர்வன் 17, யமதேவன் 18, பிரும்ஹா 19, விஷ்ணு 20, யமன் 21, ஈசுவரன் 22, இந்திரன் 23, பவனன் 24, முனிவர்கள் 25, ஷண்முகன் 26, பிருங்கிரிடி என்னும் முனிவர் 27, கௌரீ தேவி 28, ஸரஸ்வதீ 29, பிரஜாபதி, 30, இவர்கள், முறையே, மூலநக்ஷத்திரத்தின் முஹூர்த்தங்களின் அதிநாயகர்களாவார்கள்.

குழந்தையானது கேட்டைநக்ஷத்திரத்தில் பிறந்ததானால், அந்தக் கேட்டையின் முஹூர்த்த அதிதேவதைகளை, மூல நக்ஷத்திரத்திற்குக் கூறியிருப்பதைப்போல் தலைகீழாக (30ல் இருந்து 1 வரையில்) கொள்ளவேண்டும்.

இந்த முஹூர்த்தங்களில் 1, 2, 6, 8, 9, 12, 23, ஆகிய 7 முஹூர்த்தங்களில் குழந்தை பிறந்தால், அந்த சிசுவானது, குலநாசத்தை யுண்டுபண்ணுவதாகும்.

அத மூலவ்ருக்ஷஸ்ய ஸ்வரூபம்

(ஜாதகாபரணே)

வேதா: ஸப்த மஜா: காஷ்டா: வேதா பாணாஹ்ய ஷட்சிவா: ।
மூலம் ஸமாப்தஜ்ஞாவா ... ... ... ॥ ௧ ॥

மூலவ்ருக்ஷவிபாகேஷு மூலம் ஹி ஸதே ஹவேச் ।
ஸூனுமூலம் (ஸதே। அமூலம் ஸமம்) விநாச

ஸேஷபாகே (வி) நிஸ்ரிதம் ॥ ௨ ॥

வாஸே மூலகதே வேஜாயாம் வ்ருக்ஷே வ வாஸ்தஷாகரதள ।
அசிஷ்டமஸ்ஹாயிகே ஸஹாயிகே ஸஹம் ஸமம் ॥

இதி மூலவ்ருக்ஷபலகாரப்ரகாரம் ।

மூல விருக்ஷத்தின் பலன் (ஜாதகாபரணத்தில்)

மூலநக்ஷத்திரமாகிய மரத்தை 4, 7, 8, 10, 9, 5, 0, 6, 11=60 என்று நாழிகைகளைப் பகிர்ந்து கொள்ள வேண்டும்.

மூலம் பர்கனும், கிளை அஜனும்.

மூலமாகிய மரத்திற்குக் கூறியுள்ள பாகுபாடுகளில் சுப பலனே கிடைப்பதாகும். முதலாவது பகுதிக்கு சுபபலனும். இரண்டாவது பகுதிக்கு அசுபபலனும். இவவிதமே மற்ற

பகுதிகளுக்கும் பலனைக்கொள்ளவேண்டும். (சுபபலன், அசுபபலன், என்று முறையே பாகங்களின் பலனைக்கொள்ள வேண்டும்.) என்று நிச்சயித்துக் கூறியுள்ளார்கள்.

மூல நக்ஷத்திரத்தை, பாதம், முஹூர்த்தம், வேளை, விருக்ஷம், புருஷாகிருதி, என்று 5 விதமாகப் பிரித்து, அவை களுக்குத் தனித்தனியே பலன்களையும் கூறியுள்ளார்கள். இவைகளில், அசுபம் அதிகமானால் அசுபபலனையும், சுபம் அதிகமானால் சுபபலனையும் கொடுப்பதாகும்.

இவ்விதமாக மூல நக்ஷத்திரத்தைப்பற்றிய விசேஷங் கள் கூறப்பட்டுள்ளன.

மூலே —

ஸௌக்யேந யுக்தோ தநவாஹநாட்ய:
ஹிம்ஸ்ரோ பலாட்ய: ஸ்திரகர்மகர்தா ।
ப்ரதாபிதாராதிஜநோ மநஸ்வீ
மூலே க்ருதீ ஸ்யாஜ்ஜநநம் ப்ரபந்ந: ॥௧௬॥

மூலத்தில்

மூல நக்ஷத்திரத்தில் பிறந்தவன், ஸுகத்துடன் கூடிய வனும், தநமும் வாஹனங்களுமுடையவனும், கொடுமை செய்கின்றவனும், அதிகமான பலமுடைவனும், நீடித்து நிலைத்திருக்கக்கூடிய காரியங்களைச் செய்கின்றவனும், பகை வர்களைப் பொசுக்குகின்றவனும், ஸாமர்த்தியமுடையவனு மாவான்.

பூர்வபாராஶர்யாம் —

ஸத்யோ ஸத்யஶ்லாக்யவாநாநர்த்த:
ஹோத்ரா வஞ்ஜாத்வியாஸஸ்யஶீல: ।

நயிநம் ஸம்பஜாயதே தஸ்ய மாஷா
பாஷாஷாடா ஜநநம் யஸ்ய பும்ஸ: ||உ0||

## பூராடத்தில்

பூராட நக்ஷத்திரத்தில் பிறந்தவன், மறுபடியும் மறுபடியும் (அடிக்கடி) தண்ணீரைக் குடிக்க விருப்பமுடையவனும், நன்றாக ஆஹாரம் செய்கின்றவனும், பல விஷயங்களையும் நன்கு பேசக்கூடியவனும், நல்ல ஸ்வபாவமுடையவனுமாவான். அவனுக்கு சிறந்த செல்வம் கிடைக்கும் (20)

உத்தராஷாடாயாம் —

தாதா தயாவாநு விஜயீ விநீத:
ஸத்கர்ம கர்தா விஹுநா ஸமேத: ।
காந்தா ஸுதாவாப்தஸுகோ நிதாந்தம்
லோகே ஸுவேஷ: ஸுதஷோ மநீஷீ ||உக||

## உத்திராடத்தில்

உத்திராட நக்ஷத்திரத்தில் பிறந்தவன், தாநதர்மங்கள் செய்கின்றவனும், தயையுடையவனும், ஜயம் பெறுகின்றவனும், வணக்கமுடையவனும், நல்ல காரியங்களைச் செய்கின்றவனும், பிரபுக்களுடன் கூடியிருப்பவனும், இவ்வுலகத்தில் மனைவி — பிள்ளைகளினாலே அதிக ஸுகத்தை அடைகின்றவனும், சிறந்த வேஷமுடையவனும் (ஆடை ஆபரணங்களையுடையவனும்) சிறந்த அறிவாளியுமாவான்.

அபிஜிதி —

57 அதிஸுஸ்நிக்தகாந்திஸ்ஸஜ்ஜநஸஜ்ஜநாநாம்
அநுஸ்ஸவ்ருத்தி விநீதஸ்ஸுசாருகீர்த்திஸ்ஸுரூப: ।

द्विजवरसुरभक्तिर्व्यक्तवाग्ज्ञानवश्यः
अभिजिति यदि सूतिर्भूपतिः स्यात्स्ववंशे ॥

## அபிஜித்தில்

அபிஜித் நக்ஷத்திரத்தில்பிறந்தவன், மிகவும் மனோஹரமான சரீர சோபையையுடையவனும், ஸாதுக்களில் ஸாதுவாக இருப்பவனும், அல்லது ஸாதுக்களுக்கு ஸாதுவாக இருப்பவனும், வணக்கமுடையவனும், அழகான புகழை உடையவனும், நல்ல ரூபத்தையுடையவனும், (சிறந்த லக்ஷணங்கள் பொருந்தியவனும்) பிராம்ஹணர்களிடத்திலும், தேவதைகளிடத்திலும் பக்தியுள்ளவனும், தெளிவான வார்த்தைகளையுடையவனும், தனது வம்சத்தில் அரசனாக இருப்பவனுமாவான்.

[உத்திராடத்தின் 4வது பாதமும், திருவோணத்தில் ஆதியில் 4 நாழிகை காலமும் சேர்ந்தது அபிஜித் நக்ஷத்திரமாகும்.]

## श्रवणे —

शास्त्रानुरक्तो बहुपुत्रमित्रः
सत्पात्रभक्तिर्विजितारिपक्षः ।
धनी प्रधानः श्रवणप्रवीणः
चेज्जन्मकाले श्रवणं हि यस्य ॥ ௨௨ ॥

## திருவோணத்தில்

திருவோண நக்ஷத்திரத்தில் பிறந்தவன், சாஸ்திரங்களில் ஆசையுடையவனும், அநேகம் பிள்ளைகள் அநேகம் ஸ்நேஹிதர்களுடையவனும், ஸத்பாத்ரங்களில் (ஸாதுக்களிடத்தில்) பக்தியுடையவனும், சத்துருபக்ஷத்தை

(பகைவர்களை) வெற்றிகொண்டவனும், புராணங்களைக் கேட்பதில் ஸாமர்த்தியமுடையவனுமாவான். (22)

தநிஷ்டாயாம் —

ஆசாரஜாத்யாதிகசாருஶீல:
தநாதிமாந் பலவாந் க்ருபாலு: ।
யஸ்ய ப்ரஸூதௌ ச பவேத் தநிஷ்டா
மஹாந் ப்ரதிஷ்டா ஸஹிதோ நரஸ்ஸ்யாத் ‖ ௨௩ ‖

அவிட்டத்தில்

அவிட்ட நக்ஷத்திரத்தில் பிறந்தவன், ஆசாரமுடையவனும், ஜாதியில் சிறந்தவனும், அழகிய ஸ்வபாவமுடையவனும், செல்வம் முதலியவைகளுடையவனும், பலமுடையவனும், கருணையுடையவனும், நிலைத்திருக்கும் புகழ் பெற்றவனுமாவான். (23)

ஶதபிஷஜி —

ஶீதபீருரதிஸாஹஸீ ஸதா
நிஷ்டுரோऽதிவசநோ பவேச்ச ஸதா ।
வைரிணாம் அதிவிஶேஷதாரணோ
வாருணோ யதி ச யஸ்ய ஸம்பவே ‖ ௨௪ ‖

சதயத்தில்

சதய நக்ஷத்திரத்தில் பிறந்தவன், குளிரைக்கண்டு நடுங்குகின்றவனும், மிகுந்த ஸாஹஸமுடையவனும், (எதையும் துணிந்து செய்பவனும்) எப்பொழுதும் கொடுமையுடையவனும், அல்லது குற்றங் கூறுகின்றவனும், மிகுந்த

ஸாமர்த்தியமுடையவனும், பகைவர்களிடத்தில் அதிக விசேஷமான கொடுமையுடையவனுமாவான். (24)

பூர்வப்ரோஷ்டபதாயாம் —

ஜிதேந்த்ரியஸ்ஸர்வகலாஸு தக்ஷ:
ஜிதாரிபக்ஷ: ஸுத தஸ்ய புத்தி: ।
ஸவேந்தீஷா ஸர்வதராஜவேஸர்வா
பூர்வா யதா ப்ரோஷ்டபதா ப்ரஸூதௌ ॥௨௫॥

பூரட்டாதியில்

பூரட்டாதி நக்ஷத்திரத்தில் பிறந்தவன், புலன்களைக் கட்டுப்படுத்தியவனும், ஸகல கலைகளிலும் ஸாமர்த்திய முடையவனும், சத்ருக்களை வெற்றிகொண்டவனுமாவான். அவனுடைய புத்திசக்தியானது அபூர்வமாக (ஆச்சரியப் படத்தக்கதாக) இருக்கும். (25)

உத்தரப்ரோஷ்டபதாயாம் —

குலஸ்ய மத்யே திலகம் விபூஷணம் ச
ஸம்(நா)த்யூர்த்வதேஹஸ்ஸுஹகசஸ்தகதா ।
யஸ்யோத்தரா ப்ரோஷ்டபதா ச ஜந்மம்
யந்த்ரம் ஸுகேந்த்ரம் ச ஸவேபதாந்த: ॥௨௬॥

உத்திரட்டாதியில்

உத்திரட்டாதி நக்ஷத்திரத்தில் பிறந்தவன், குலத்தின் நடுவில் ஆபரணம்போல் பிரகாசிப்பவனும், செல்வமும் உயரமான தேகமுடையவனும் (செல்வமுடையவனும் அதிக உயரமில்லாத தேஹத்தையுடையவனும்) சுபகர

மான காரியங்களைச் செய்கின்றவனுமாவான். அவன் மிகச் சிறந்த செல்வமுடையவனுவான். வாரி வாரி வழங்கு கின்றவனுவான். (26)

ரேவத்யாம் —

வாரு'ஶீலஸ்ஸுஸ்ஸெவா ஜிதெந்த்ரியஃ
ஸஃஷநா நஸ்வஸவபெந்கஊா நஸஃ ।
ஊாநவொ நந ஸவெநஹாஊதிஃ
ரேவதீ ஸவதி யஸ்ய ஜந்மஸு ॥ ௨௭ ॥

ரேவதியில்

ரேவதீ நக்ஷத்திரத்தில் பிறந்தவன், அழகான ஸ்வ பாவமும் சிறந்த செல்வமுமுடையவனும், இந்திரியங்களை வெற்றிகொண்டவனும், (அடக்கியவனும்) நல்ல முறையில் செல்வத்தை உபயோகிப்பதில் பலவிதமான மனோநிலையை யுடையவனும், சிறந்த அறிவு படைத்தவனுமாவான். (27)

௧௨௬. அத விஷ்கம்ஹாதி ஸப்தவிம்ஶதி யோகாநாம் நாமாநி —

(ஜ்யோதிஷார்ணவெ)

விஷ்கம்ஸம் ஶ்ரீதிராயுஷ்மாந் ஸௌஸாக்யம் ஶோஸந-
ஸ்ததா ।
அதிகண்டஸ்ஸுகர்மா ச த்ருதிஶ்ஶூலஸ்ததைவ ச ॥ ௧ ॥

கண்டோவ்ருத்திர்த்ருவஶ்சைவ வ்யாகாதோ ஹர்ஷணஸ்-
ததா ।
வஜ்ரஸ்ஸித்திர்வ்யதீபாதோ வரீயாந் பரிகஶ்ஶிவஃ ॥ ௨ ॥

விஷ்கம்பாத்யாஸ்ஸமாக்யாதாஸ்து ப்ரஹ்மணா வேதவேதிபி: ।
ஸந்தி யோகா: ப்ரகீர்திதா: ஸப்தவிம்சதிஸங்க்யயா ॥௧॥

### 326. விஷ்கம்பம் முதலிய 27 யோகங்களின் பெயர்கள்.

விஷ்கம்பம் 1, ப்ரீதி 2, ஆயுஷ்மான் 3, ஸௌபாக்யம் 4, சோபனம் 5, அதிகண்டம் 6, ஸுகர்மம் 7, த்ருதி 8, சூலம் 9, கண்டம் 10, வ்ருத்தி 11, த்ருவம் 12, வ்யாகாதம் 13, ஹர்ஷணம் 14, வஜ்ரம் 15, ஸித்தி 16, வ்யதீபாதம் 17, வரீயான் 18, பரிகம் 19, சிவம் 20, ஸித்தம் 21, ஸாத்யம் 22, சுபம் 23, சுக்லம் 24, ப்ராம்ஹம் 25, ஐந்திரம் 26, வைத்ருதி 27, இவைகள், முறையே 27 யோகங்களாம்.

தத்ராதௌ விஷ்கம்பாதி ஸப்தவிம்சதியோகானாம் ஸ்வரூபாணி

(சைவாகமே)

ஸர்வ கர்தவ்யகார்யாணி—

(தைவஜ்ஞவிலாஸே)

ஸர்வ கர்தவ்யதானானி—

(தானசிந்தாமணௌ மஹாபாரதே)

அவற்றுள், முதலில், விஷ்கம்பம் முதலிய 27 யோகங்களின் ஸ்வரூபங்கள்.

(சைவாகமத்தில்)

இவைகளில் செய்யக்கூடிய காரியங்கள். (தைவஜ்ஞவிலாஸத்தில்) இவைகளில் செய்யவேண்டிய தானங்கள். (தானசிந்தாமணியிலும், மஹாபாரதத்திலும்,)

௩௨௭ தத்ராதௌ விஷ்கம்பயோகஸ்ய ஸ்வரூபம் —

விஷ்கம்பம் ஶிரஸா வந்தே விஷ்ணுகோத்ரஸமுத்பவம் ।
ப்ராங்முகம் ப்ராஞ்ஜலிகரம் த்ரிகோணாஸன
ஸம்ஸ்திதம் ॥

ஶ்வேதரக்தவர்ணஃ । (க்ருத்யம்)

அஸ்மிந் யோகே ஶுபகர்ம வர்ஜ்யம் । அதவா ஆதி த்ரயநாடிகாம் ஶுபம் கர்ம த்யஜேத் ।

க்ஷௌரம் ச பீஜாரோபம் ச ஸ்த்ரீஸங்கம் தந்தகர்ஷணம் ।
காஷ்டகர்ம ஶிவாஹ்லாதம் விஷ்கம்பே து விவர்ஜயேத் ॥

தானம் —

விஷ்கம்பே ஸர்வயாத்ராணாம் தானம் ஸர்வாபந்நாஶநம் ॥

**327.** அவைகளில், விஷ்கம்பயோகத்தின் ஸ்வரூபம்

விஷ்ணு கோத்ரத்தில் பிறந்தவனும், முக்கோண வடிவமான ஆஸநத்தில் வீற்றிருப்பவனும், கிழக்கு முகமாக இருப்பவனும், கைகளைக் கூப்பி வைத்துக்கொண்டிருப்பவனுமான விஷ்கம்பயோகத்தின் அதிதேவனை, சிரத்தினாலே வணங்குகிறேன். வெண் சிவப்புநிறம்.

காரியம் :—

இந்த யோகத்தில் சுப காரியங்களைச் செய்யக்கூடாது. அல்லது, 3 நாழிகைகளுக்குப் பிறகு சுப காரியங்களைச் செய்யவேண்டும்.

இந்த விஷ்கம்ப யோகத்தில், சௌளம், விதை விதைத்தல், ஸ்திரீஸங்கம், பற்களை சீற்படுத்துவது, மர

வேலைகள், பகைவர்களை (தேசத்தை விட்டு) விரட்டுவது, இவைகளைச் செய்யவேண்டும்.

தானம்:—

விஷ்கம்பயோகத்தில் ஸகலவிதமான தானியங்களையும் தானம் செய்யவேண்டும். அதனால் ஸகலவிதமான பாபங்களும் போகும். (1)

கூஉஅ அத ப்ரீதியோகஸ்ய ஸ்வரூபம் —

ப்ரீதிர்ப்ரஹ்மகுலோத்பவம் ப்ராங்முகம் பத்மநேத்ரகம் |
ஹஸ்தமாலாக்ஷதரம் ப்ரீதியோகம் ஸ்மராம் யஹம் ||

ஸ்வரூபம் || மந்த்ரம் —

ஓம் ப்ரீதியோகாய நம: |

சித்ரம் தைவதம் சைவ ஹர்ஷணம் ஹஸ்தி
வாஹனம் |
ராஜவஸ்யம் உத்ஸாஹம் ப்ரீதியோகே சகாரயேத் ||

தானம் —

ப்ரீதௌ தத்வா ஸ்வர்ணதானம் || உ ||

328. ப்ரீதியோகத்தின் ஸ்வரூபம்

பிரும்ஹ கோத்திரத்தில் பிறந்தவனும், கிழக்கு முகமாக இருப்பவனும், தாமரை மலர்போன்ற கண்களையுடையவனும், ஜபமாலையை கையில் தரிப்பவனும், மங்களகரனுமான பிரீதியோகதேவனை, நான் எப்பொழுதும் வணங்குகின்றேன், சிவப்பு நிறம்,

காரியம் :—

இந்த பிரீதி என்ற யோகத்தில் ஸகலவிதமான காரியங்களையும் செய்வதாகும். இது சுப பலனையளிக்கும்.

பிரீதியோகத்தில், ஸ்நேகம் செய்துகொள்ளுவது, வாஸனைகளைப் பூசிக்கொள்வது, ஆபரணங்களை அணிந்துகொள்ளுவது, செல்வத்தை சேமிப்பது, அரசர்களை வசியம் செய்வது, மிகுந்த உத்ஸாகத்தை யளிக்கும் காரியங்களைச் செய்வது, இவைகளைச் செய்யவேண்டும்.

தானம் :—

பிரீதியோகத்தில் அன்னதானமும் ஸ்வர்ணதானமும் செய்யவேண்டும். (2)

கூஉகூ அய ஆயுஷ்மத்யோகஸ்ய ஸ்வரூபம் —

ஆயுஷ்மத்கம் வந்தே யோகம் யோகிபிரீடிதம் ।
ஸௌம்யரூபம் வஹ்நிகோணஸ்தம் கௌண்டிந்யாந்வயஸம்பவம் ॥

வாசஸ்பதயே: ॥ கூடத்தம் —

அயம் யோக: ஸர்வகர்மஸு ஶுபாவஹ: ।

ஶீவாவாபம் வஸ்த்ரபூஷாம் யாத்ராரோக்யகர்ம ச ।
விவாஹம் வாணிஜ்யம் ச ஆயுஷ்மதி காரயேத் ॥

தானம் —

ஆயுஷ்மதி ஸ்வர்ணஸ்ய ச ॥ கூ ॥

## 329. ஆயுஷ்மான்யோகத்தின் ஸ்வரூபம்

கௌண்டின்ய கோத்திரத்திலுதித்தவனும், ஐங்கோண வடிவமான ஆஸனத்திலிருப்பவனும், கிழக்கு முகமாக இருப்

...வனும், யோகிகளிருலே வணங்கப்பட்டவனுமான, ஆயுஷ்மான் யோகதேவனை, நான் வணங்குகின்றேன். சிவப்பு நிறம்.

காரியம் :—

இந்த யோகமானது ஸகலவிதமான காரியங்களேயும் செய்வதற்குச் சிறந்த காலமாம். சுபபலனையளிப்பதாகும்'

இந்த ஆயுஷ்மான் யோகத்தில் விதை விதைப்பது, ஆடையணிந்துகொள்ளுவது, போர் செய்வது, ஆரோக்ய கரமான காரியங்களைச் செய்வது, வியவஹாரம் செய்வது, விவாஹம் செய்வது, இவைகளைச் செய்யவேண்டும்.

தானம் :—

ஆயுஷ்மான் யோகத்தில், நெய்யை தானம் செய்ய வேண்டும். (3)

௯௯ம் அத ஸௌபாக்யயோகஸ்ய ஸ்வரூபம் —

ஸௌபாக்யம் ஶிரஸா பௌமி பத்மஷோணாம்பராந்விதம்।
கௌஸும்பமௌக்திகம் ரக்தாக்ஷம் ஜவாபம் வரம்॥

பாடபேதம்: ॥ க்ருத்யம் —

அயம் யோகஸ்ஸர்வகார்யஸ்ய ஶுபஹ:।

ஹர்ஷணாம்பரஸௌபாக்யவிவேகஸர்வாத்மகம்।
யஜ்ஞகார்யஸர்வாரம்பம் ஸௌபாக்யேகார்யேஷ்டய:॥

தானம் —

காஞ்சனஸ்ய ச ஸௌபாக்யே, ॥ ௪ ॥

## 330. ஸௌபாக்கிய யோகத்தின் ஸ்வரூபம்

சச்சதுரமான ஆஸநத்தில் வீற்றிருப்பவரும், கௌண்டிந்யகோத்திரத்திலுதித்தவரும், கிழக்கு முகமாக இருப்பவரும், ஜபம் செய்பவர்களில் சிறந்தவனுமான ஸௌபாக்கிய யோகத்தின் அதிதேவதையை, சிரத்தால் வணங்குகிறேன். பாதிரிப்பூ (வெண்சிவப்பு) நிறம்.

காரியம் :—

இந்த யோகமானது, ஸகலகாரியங்களுக்கும் ஏற்றதும் சுபபலனையளிப்பதுமாம். புத்திமானாக இருப்பவன், ஆபரணங்களணிந்து கொள்ளுவது, ஆடைகளையணிவது, ஸௌபாக்கிய காரியங்களைச் செய்வது, சந்தணம் முதலிய வாஸனுபதார்த்தங்களை தரிப்பது, தேவதாபூஜை செய்வது, யஜ்ஞம் செய்வது, மத்யபானம் செய்வது, இவைகளை, ஸௌபாக்கியம் என்னும் யோகத்தில் செய்ய வேண்டும்.

தானம் :—

ஸௌபாக்கிய யோகத்தில் குங்குமத்தை தானம் செய்யவேண்டும். (4)

௩௩௧ அத² ஸௌபா⁴க்³யயோக³ஸ்ய ஸ்வரூபம் —

ஆஸீநம் சதுரஶ்ரபீடே² கௌண்டி³ந்யஸம்ப⁴வம் ।
ஸௌபா⁴க்³யம் ஸௌபா⁴க்³யத³ம் பூர்வாஸ்யம் ஜபகேஷு வை ॥

பாடலவர்ண: ॥ கார்யம் —

அயம் யோக³ஸ்ஸர்வகார்யேஷு ஶுப⁴: ॥

ஸர்வாப⁴ரணவேஷாட்⁴யவஸ்த்ராணி ச ।
தே³வாபி⁴ஷேககர்மாணி கார்யாணி ஸௌபா⁴க்³யே ॥

ஒ்ா ஜம —

யவஷாஜம வ மொஹஜெ ॥ ரு ॥

## 331. சோபன யோகத்தின் ஸ்வரூபம்

பஞ்சகோண ஆஸனத்தில் இருப்பவரும், கௌண்டின்ய வம்சத்திலுதித்தவரும், மங்களகரமானவரும், வணங்குகின்றவர்களுக்கு மங்களங்களை யளிப்பவருமான சோபன யோக தேவதையை எப்பொழுதும் வணங்குகிறேன். பாடலவர்ணம்.

காரியம் :—

இந்த யோகமானது ஸகல காரியங்களையும் செய்வதற்குச் சிறந்ததும் சுபபலனை யளிப்பதுமாகும்.

பூமியை வாங்குவது, விவாஹம், தானம், பூஷண காரியம், ராஜாபிஷேகம், ஆரோக்கியகாரியம், இவைகளை, சோபந யோகத்தில் செய்யவேண்டும்.

தானம் :—

சோபன யோகத்தில், யவையை தானம் செய்ய வேண்டும். (5)

கூகூஉ சுதிமஜ்ஜா யொமஸ்ய ஷ்வரூவம —

வாயமிஜாஙயஸமஹிதம வஞ்கொணெ வஸிஷ்டிதம ।
ஸுதிமஜ்ஜாஹியம வநெ ஜவஹம ஹ்ராஜஈசவம ஸஷா ॥

வாடிஜவண: ॥ கூரத்ம —

ஸயம யொமஷுவகஉகஉஷு வஜூஃ । ஸுமவா ஷடீ
யடிகாஜஹம ஶுஹகஉ கூயஜாஸ ॥

விக்3ரஹ நிக்3ரஹஹேதுநவ்யவஸாயோத்3யநஸிவத்4னாட்டா: |
க்ஷுத்3ரக்ரியா(அ)திக3ண்டே3 கார்யம் விஷஶஸ்த்ரவஹ்நி
கார்யாணி ||

தா3நம் —

அதிக3ண்டே3 ச வஸ்த்ராணாம், ||௬||

## 332. அதிகண்ட யோகத்தின் ஸ்வரூபம்

வாதூல கோத்திரத்திலுதித்தவரும், பஞ்சகோண ஆஸநத்திலிருப்பவரும், கிழக்கு முகமாக இருப்பவரும், எப்பொழுதும் ஜபம் செய்து கொண்டிருப்பவருமான அதிகண்ட யோகதேவதையை வணங்குகின்றேன். பாடலவர்ணம்.

காரியம் :—

இந்த யோகமானது, எவ்வித (சுப) காரியங்களுக்கும் கூடாததாகும். அல்லது 6 நாழிகைக்கு பிறகு சுபகாரியங்களைச் செய்ய வேண்டும்.

சண்டை, சிக்ஷை, பேதநம், வதம், பந்தனம், வெட்டுவது (சிரஸ்சேதம் செய்வது) சத்ருவை உச்சாடனம் செய்வது, ஏவல் பில்லி சூனியம் செய்வது, விஷம் (இடுவது) சஸ்திரகாரியம், வந்ஹிகாரியம், (தீவைப்பது) இவைகளை, அதிகண்டயோகத்தில் செய்யவேண்டும்.

தானம் :—

அதிகண்ட யோகத்தில் வஸ்திரதானம் செய்ய வேண்டும். (6)

௩௩௩ ஸுகர்மயோக3ஸ்வரூபம் —

ஸுகர்மாக்2யம் யோக3ஹம் த3க்ஷிணாஸ்யவராஸநே |

கௌசிகாந்வயஸம்பூதம் ஜபந்தம் லோகபூஜிதம் ||

— பூஜயேத் || க்ருத்யம் —

அயம் யோகஸ்ஸர்வகார்யேஷு ஸாஹ: |

சித்ரகார்யக்ருஹாரம்பம் கல்யாணம் பூமிஸங்க்ரஹம் |
ராஜாபிஷேககார்யாணி ஸாககார்யாணி ச காரயேத் ||

தாநம் —

பாயஸஸ்ய ஸாககார்யாணி || ௭ ||

## 333 ஸாகர்ம யோக ஸ்வரூபம்

தெற்கு முகமாக இருப்பவரும், கௌசிகவம்சத்தில் உதித்தவரும், ஜபம் செய்து கொண்டிருப்பவரும், உலகத்திலுலே (ஜனங்களினுலே) பூஜிக்கப்பட்டவருமான ஸாகர்ம யோக தேவதையை பஜிக்கின்றேன். பாடல ('வெண் சிவுப்பு) வர்ணம்.

காரியம் :—

இந்த யோகமானது, ஸகலகாரியங்களையும் செய்யச் சிறந்ததும் சுபபலனையளிப்பதுமாம்.

சித்திரங்கள் எழுதுவது, வீடுகட்டுவது, கலியாணம் செய்வது, பூமி வாங்குவது, ராஜாபிஷேகம் செய்வது மங்கள காரியங்களைச் செய்வது, இவைகளை ஸாகர்ம யோகத்தில் செய்யவேண்டும்.

தானம் :—

ஸாகர்மயோகத்தில் பாயஸத்தை தானம் செய்ய வேண்டும். (7)

௩௩௪ 𑌅𑌥 𑌧𑍃𑌤𑌿𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑍍 —

𑌧𑍃𑌤𑌿𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌦𑍇𑌵𑍋𑌽𑌯𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌯𑌾𑌨𑍍𑌵𑌯𑌸𑌂𑌭𑌵𑌃 ।
𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌭𑌿𑌮𑍁𑌖𑌾𑌸𑍀𑌨𑍋 𑌵𑍇𑌦𑌪𑌾𑌰𑌾𑌯𑌣𑌤𑌤𑍍𑌪𑌰𑌃 ॥

𑌪𑌾𑌟𑌲𑌵𑌰𑍍𑌣𑌃 ॥ 𑌕𑍃𑌤𑍍𑌯𑌮𑍍 —

𑌅𑌯𑌂 𑌯𑍋𑌗𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌰𑍍𑌯𑍇𑌷𑍁 𑌶𑍁𑌭𑌃 ॥

𑌪𑍍𑌰𑌾𑌕𑌾𑌰𑌤𑍋𑌰𑌣𑌾𑌦𑍀𑌨𑌿 𑌦𑍇𑌵𑌾𑌲𑌯𑌗𑍃𑌹𑌾𑌣𑌿 𑌚 ।
𑌵𑍃𑌤𑍍𑌤𑌬𑌨𑍍𑌧𑌂 𑌗𑌜𑌾𑌰𑍋𑌹𑌂 𑌧𑍃𑌤𑌿𑌯𑍋𑌗𑍇 𑌤𑍁 𑌕𑌾𑌰𑌯𑍇𑌤𑍍 ॥

𑌦𑌾𑌨𑌮𑍍 —

𑌧𑍃𑌤𑌂 𑌰𑌜𑌤𑌦𑌾𑌨𑌂 𑌚 ॥ ௪ ॥

## 334. திருதியோக ஸ்வரூபம்

திருதியோக தேவதையானது, ஆத்திரேய வம்சத்தில் உதித்ததும், தெற்கு நோக்கி வீற்றிருப்பதும், வேதத்தை பாராயணம் செய்துகொண்டிருப்பதுமாகும். பாடலவர்ணம்.

காரியம் :—

இந்த திருதியோகமானது, ஸகலகாரியங்களிலும் சுப பலனையளிப்பதாகும்.

பிராகாரம், தோரணம், (வெளியே செல்லும் மார்க்கத்தில் வெளிப்பக்கத்திலுள்ள மண்டபம் முதலியன) தேவாலயம், வீடுமுதலியவைகள், விருதத்திற்காக கங்கண பந்தம், யானை ஏற்றம் முதலியகாரியங்களை திருதியோகத்தில் செய்ய வேண்டும்.

தானம் :—

திருதியோகத்தில், வெள்ளியை தானம் செய்ய வேண்டும். (8)

## ௩௩௫ 𑌅𑌥 𑌶𑍂𑌲𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 —

𑌶𑍂𑌲𑌨𑌾𑌮𑌾 𑌮𑌹𑌾𑌤𑍇𑌜𑌾𑌃 𑌹𑌵𑌿𑌷𑍍𑌟𑌾𑌯𑌨𑍍𑌤𑍁 𑌮𑍇 𑌸𑌦𑌾 ।
𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌭𑌿𑌮𑍁𑌖𑌃 𑌶𑍂𑌲𑍀 𑌕𑍌𑌣𑍍𑌡𑌿𑌨𑌾𑌨𑍍𑌵𑌯𑌸𑌂𑌭𑌵𑌃 ॥

𑌪𑌾𑌟𑌲𑌵𑌰𑍍𑌣𑌕𑌃 ॥ 𑌕𑍃𑌤𑍍𑌯𑌂 —

𑌅𑌯𑌂 𑌯𑍋𑌗𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌶𑍁𑌭𑌕𑌾𑌰𑍍𑌯𑍇𑌷𑍁 𑌵𑌰𑍍𑌜𑍍𑌯𑌃 । 𑌅𑌥𑌵𑌾 𑌪𑌞𑍍𑌚𑌘𑌟𑌿𑌕𑌾𑌭𑍍𑌯𑌃 𑌪𑌰𑌂 𑌶𑍁𑌭𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 ।

𑌸𑌰𑍍𑌵𑌬𑌾𑌧𑌾𑌵𑌸𑌾𑌨𑌾𑌨𑌿 𑌶𑌿𑌵𑌶𑍂𑌲𑌾𑌟𑌨𑌕𑌾𑌰𑌣𑍇 ।
𑌨𑌿𑌵𑌾𑌰𑌣𑌂 𑌕𑍃𑌶𑌰𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌶𑍂𑌲𑌯𑍋𑌗𑍇 𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ॥

𑌦𑌾𑌨𑌂 —

𑌶𑍂𑌲𑍇 𑌮𑌹𑌿𑌷𑍀𑌦𑌾𑌨𑌕𑌂 ॥ ௯ ॥

## 335. சூலயோகஸ்வரூபம்

தெற்கு முகமாக வீற்றிருப்பவரும், குண்டிந வம்சத்தில் பிறந்தவருமான சூலம் என்ற பெயருடைய பெருமை வாய்ந்த யோகதேவன், எனக்கு இஷ்டமான காரியங்களின் ஸித்தியையளிக்கவேண்டும். பாடலவர்ணம்.

காரியம் :—

இந்தயோகமானது சுபகாரியங்களுக்குக் கூடாததாகும் அல்லது ஐந்து (5) நாழிகைக்குப் பிறகு சுபகாரியங்களைச் செய்ய வேண்டும்.

வதம், பந்தம், அவமானம் செய்தல், சத்துருவை விரட்டுவது, மாரணம், நிவாரணம் (இடையூறுகளை விலக்குவது) கொடுமையான காரியம், இவைகளை சூல யோகத்தில் செய்ய வேண்டும்.

தாநம் :—

சூலயோகத்தில் கிழங்கு முதலியவைகளை தானம் செய்யவேண்டும். (9)

ருருசு கயடி ஜணுயொஜஸ்லாஸிவ —

யொஜொஷலா ஜணுநாஉா ஒெ ஶாணுிஞாஙயவஸஂஷவ॰ |
ஷக்ஷிணாஹவ சூவீந॰ ஷ்ஹவா௦வாராயணா॰ ||

வாடிஞவணா॰ || கூதூ —

கயஂ யொஜஷவஸஹகஉவா வஜ॰ | கயவா
ஷடிவயிகாஹ॰ வாஂ ஶஹகஉ காயாக |

வாஷீகவெதடிாகாஜிவாதொஷாடிநஉாரணஂ |
வாஹாயாஜஂ ஷூதூகஉ கஷாதூஂ ஜணொ
ஷூஶவஸெத ||

ஷாநஂ —

ஜணொ உணாநஷாநஂ வ, || ய ||

## 336. கண்டயோகஸ்வரூபம்

சாண்டிலியவம்சத்திலுதித்தவரும், தெற்கு முகமாக
58 வீற்றிருப்பவரும், வேத பாராயணம் செய்துகொண்டிருப்பவருமான கண்டயோகத்தின் அதிதேவன், எனக்கு நன்மைகளையளிப்பாராக. பாடல வர்ணம்.

கிரியம் :—

இந்த யோகமானது, ஸகல சுப காரியங்களுக்கும் விலக்கப்பட்டதாகும். அல்லது 6 நாழிகைக்குப் பிறகு சுப காரியங்களைச் செய்யவேண்டும்.

ஏறி இறங்குவதற்கான படிக்கட்டுகளுடன் கூடிய கிணறு, கிணறு, குளம், முதலியவைகளை வெட்டுவது, இருப்பிடத்தைவிட்டு விரட்டுவது, மாரணம், மல்லுயுத்தம், சேவககாரியம், க்ஷத்திரியர்களுக்குரிய காரியம் இவைகளை கண்டயோகத்தில், செய்யச் சிறந்ததாகும்.

தாநம் :—

கண்டயோகத்தில், ஆபரணங்களை தானம் செய்ய வேண்டும். (10)

௧௧ அத வ்ருத்தியோகஸ்வரூபம் —

வ்ருத்திர்வ்ருத்திஸ்வரூபோ ஶேஷஸ்ய கௌஶிகோ தக்ஷிணா-
ஸ்வ: |

யஸ்மிந்யோகே ஸதா ப்ரஹ்ம ப்ரஸீதாஶ்ரித்ய திஷ்டதி ||

வாடிமுவணாக: || க்ருத்யம் —

அயம் யோகஸ்ஸர்வகார்யேஷு ஶுப: |

பீஜாவாபம் யுத்தம் யாத்ராம் விவாஹவ்ரதபந்தநம் |

தடாககூபாராமம் ச வ்ருத்தியோகே து காரயேத் ||

தாநம் —

வஸ்த்ர தாநம் ப்ரஶஸ்யதே || ௧௧ ||

## 337. விருத்தியோகஸ்வரூபம்

கௌசிக வம்சத்திலுதித்தவரும், தெற்கு முகமாக வீற்றிருப்பவரும், தர்பாஸனத்தில் இருந்து கொண்டு பரபிரம்மத்தை தியானம் செய்து கொண்டிருப்பவருமான விருத்தியோகதேவன் எனக்கு விருத்தியையளிப்பாராக. பாடலவர்ணம்.

காரியம் :—

இந்த யோகமானது, ஸகல காரியங்களிலும் சுப பலனையளிப்பதாகும்.

விதை விதைப்பது, தனம் தானியம் இவைகளைச் சேகரிப்பது, விவாஹம் செய்வது, விருதத்திற்காக கங்கண பந்தம் செய்து கொள்ளுவது, குளம் வெட்டுவது, அணை கட்டுவது, இவைகளை விருத்தியோகத்தில் செய்யவேண்டும்.

தானம் :—

விருத்தியோகத்தில் கோதானம் செய்ய வேண்டும்.

अथ शुभ वृद्धियोगस्य स्वरूपम् —

कौशिको वृद्धियोगेशो नित्यं योगेश्वरो दक्षिणाननः ।

कुशे विप्रः स्थितो ध्यायन् ब्रह्म परात्परं भवतु ॥

पाटलवर्णः ॥ कृत्यम् —

शुभं योगस्सर्वकार्येषु शस्तः ।

तटाकवस्त्राभरणादिसंग्रहो गृहक्रियाः ।

யலதுர்வலநகஉபுராணி கூர்யபுராஷெடூாமெ
யு,ர்வாஹயெ ||

ஷாநா —

யு,ர்வெ வ வஷுாதூாநாம், || ௧உ ||

## 338. துருவயோகஸ்வருபம்

தெற்கு முகமாக இருப்பவரும், கையில் ஜபமாலையை வைத்துக் கொண்டிருப்பவரும், காயத்திரீ மந்திரத்தை ஜபம்செய்து கொண்டிருப்பவருமான துருவயோகதேவன், எனக்கு எப்பொழுதும் தைரியத்தை யளித்துக் கொண்டிருக்கவேண்டும். பாடலவர்ணம்.

காரியம் :—

இந்த யோகமானது, ஸகலகாரியங்களுக்கும் சுபமாகும்.

குளம் வெட்டுவது, ஆடையுடுப்பது, ஆபரணமணிவது கல்லுகள் வைத்த நகைகளைச் செய்வது அணிவது, வீடு கட்டுவது, அணைகட்டுவது, முதலான காரியங்களை, துருவயோகத்தில் செய்யவேண்டும்.

தானம் :—

துருவயோகத்தில் பஞ்சரத்னங்களை தானம் செய்ய வேண்டும். (12)

௩௩௯ அமு வூாவாதயொமஸ்ஹ ஷூாஷவம் —

வூாவாதம் மிரவஸா நளஜி வூாவஸாங்யவஸஉஹவம் ।
ஹுதூஷஉவொவவிஷம் தம் ஹுதூமுாவிஸஜிஹம் ||

வாடியவணபுக் || கூாதும் —

அயம் வ்யாஸவம்ஶஸமுத்பவ: ... ப்ரத்யங்முக: । ... பாடலவர்ண: ...
... ॥

வ்யாகாதாக்யே ததா யோகே வதபந்தநிரோதனம் ।
ஸர்வாணி க்ரூரகர்மாணி பேதனோச்சாடனானி ச ॥

தானம்—

வ்யாகாதே பாணிதஸ்ய ச ॥ ௧௧ ॥

(பாணிதவிக்ரயஸ்ய ... )

## 339. வியாகாதயோக ஸ்வரூபம்

வியாஸவம்சத்திலுதித்தவரும், மேற்கு முகமாக வீற்றிருப்பவரும், உதய சூரியனைப் போலிருப்பவருமான வியாகாதயோகதேவனை சிரத்தால் வணங்குகிறேன். பாடல வர்ணம்.

காரியம் :—

இந்த யோகமானது ஸகலவிதமான சுபகாரியங்களுக்கும் விலக்கப்பட்டதாகும். அல்லது 9 நாழிகைக்குப் பிறகு சுப காரியத்தைச் செய்வதாம்.

வியாகாத யோகத்தில், வதம், பந்தனம், நிரோதநம், (தடுத்து நிறுத்துவது) பற்பல விதமான குரூரகாரியங்கள், பேதனம் (ஸ்நேஹத்தைக்கலைப்பது), உச்சாடனம், (இருந்த இடத்தை விட்டு ஓடும்படி செய்வது) இவைகளைச் செய்யவேண்டும்.

தானம் :—

வியாகாத யோகத்தில், பாணிதத்தை தானம் செய்ய

வேண்டும். (பாணிதம் என்பதற்கு வெல்லம் கலந்த ஆப்பம், அதிரஸம் என்பது பொருள்.) **(13)**

**ஊசம சுய ஹஷ-ுணயொமஸ்ூ ஸ்ரூவெ்ம—**

**ஹஷ-ுணம் ஹஷ-ுஷ்ம் வதெ ஒுதூஜ்ஈஉவஜூஷவி-ுஷம் ।**
**வாஞும் வெஷஉநிமம் காமஹூவாமயவஸஹவழ் ॥**

**வாடீயவண-ுஃ ॥ கூதூம் —**

**சுயம் யொமஹூவ-ுகஉ-ுவஸ ஶாஹஃ ।**

**ஹஷ-ுணயொமெ கூய-ுாசஃ**
**மஜவாஜிரயாயிரொஹணம் வஷூதழ் ।**
**வெவாஹிகாவ்ரூவஸம்ஷ் ஹ**
**நூவாஹிஷெகாதூஉவிமுஶாஹகா-ு ॥**

**ஷாநம் —**

**ஹஷ-ுணெ மாஸஷாநம் ஸூாசஃ, ॥ கச ॥**

## 340. ஹர்ஷணயோகஸ்வரூபம்

மேற்குமுகமாக இருப்பவரும், சிறந்து பிரகாசிக்கின்ற சரீரகாந்தியையுடையவரும், எப்பொழுதும் வேதத்தை ஓதிக்கொண்டிருப்பவரும், காசியப வம்சத்திலுதித்தவரும் ஸந்தோஷத்தை யளிப்பவருமான ஹர்ஷணயோகதேவனை வணங்குகின்றேன். பாடலவர்ணம்.

காரியம் :—

இந்த யோகமானது எல்லாக்காரியங்களிலும் சுபபலனை யளிப்பதாகும்.

சகுனியில் —

சகுனி கரணத்தில் பிறந்தவன், உயரமான நாசியை யுடையவனும், இனி நடக்கக்கூடியதை அறிந்தவனும், தனது குலத்தை துவேஷிப்பவனும், பிறருக்குத் தெரியாமல் கெடுதி செய்கின்றவனும், இளைத்திருப்பவனும், தானே ஸந்தோஷிப்பவனும், பசு-பூமி-பரிஜனங்களையுடையவனு மாவான். (8)

சதுஷ்பதி —

அஸ்திர: கலுஷோ(அ)யோக்ய: க்ரூரவாக்சைவ

துர்மதி: |

நாநாவிசாரகர்த்தா ச ரோகீ காந்த: ஸதா சதுஷ்பதி ||௯||

சதுஷ்பாத்தில் —

சதுஷ்பாத் கரணத்தில் பிறந்தவன், ஸ்திரபுத்தியில்லாதவனும், குழம்பிய மனமுடையவனும், அயோக்கியத்தன முடையவனும், கொடூரமான வாக்கையுடையவனும், கெடுதலான மனமுடையவனும், பலவிதமான சிந்தைகளையுடையவனும், ரோகமுடையவனும், அழகான சரீரமுடையவனு மாவான். (9)

நாகவதி —

வித்வாம்ஸ்து தீர்கவைரீ ச க்ஷிப்ரகோபோ ய நாகஜ: |

விகடாஜ்ஞோ தனீ சாந்த: பாபே ஜாதோ ஹ்யருத்வக: ||

நாகவத்தில் —

நாகவ கரணத்தில் பிறந்தவன், வித்துவத்து உடைய வனும், நெடுங்காலம் வைரமுடையவனும், சுலபமாக கோபமடைகின்றவனும், செல்வமுடையவனும், பொருத்த

மில்லாத அல்லது விகாரமான அங்கங்களையுடையவனும், நல்ல குணங்களுடையவனும், மானமுடையவனும், ஸ்வல்பமாக புஜிப்பவனுமாவான். (10)

கிம்ஸ்துக்நே —

ஹாஸ்ய கர்த்தா க்ரியாபிஜ்ஞ: த்யூதஜ்ஞ: ஶௌர்ய கார்யவித் |
கிம்ஸ்துக்நே கரணே ஜாத: போகீ த்யாகீ நர: ஸுகீ ||

**கிம்ஸ்துக்னத்தில் :—**

கிம்ஸ்துக்ன கரணத்தில் ஜனித்த மனிதன், சிரிப்பை யுண்டுபண்ணக்கூடிய செய்கைகளையுடையவனும், செய்ய வேண்டிய காரியங்களை நன்கு அறிந்தவனும், சூதாட்டம் அறிந்தவனும், பராக்ரமத்தைக் காட்டக்கூடிய காரியங்களை யறிந்தவனும், சுகபோகமுடையவனும், நிறைய வழங்குகின்றவனும், ஸுகமாக வஸிப்பவனுமாவான். (11)

அத பவாதிகரணாதிபாநி தேவதா நாமாநி ||

(ஜ்யோதிஷரத்நாகரே நாரதீயே)

க்ருஶ: கமலாயோநிஶ்ச ஸஹஸ்ராக்ஷ: ப்ரஜாபதி: |
மித்ராக்ய: பிதரோ லக்ஷ்மீ: ஶ்ரீவிஷ்ணுஸ்து யமஸ்ததா ||
காணிஹத்ராதயஸ்ஸம்ஜ்ஞகோ வாயுரேகாதஶ ஸ்ம்ருதா: ||

அத பவாதிகரணாதிபாநாம் ஸ்வரூபாணி |

௫௪௧௫ தத்ராதௌ பவாதிபஸ்யேந்த்ரஸ்ய த்யாநம் —

ஐந்த்ரம் பவஸ்ய நேதாரம் கஜவாஹநஸம்ஸ்திதம் |

வஜ்ராங்குஶாபீதிகரம் ஶசீந்த்ராணீ மநோஹரம் ॥

இந்த்ரம் ப்ரணமாம்யஹம் ॥ (ஜ்யோதிஷரத்நாகரே ॥ நாரதீயே ॥)

### பவாதிகரணுபிமானி தேவதைகளின் பெயர்கள்

(ஜ்யோதிஷ ரத்நாகரத்தில், நாரதீயத்தில்)

இந்திரன். 1, பிரஜாபதி. 2, மித்திரன். 3, பிதிருக்கள். 4, பூமி. 5, ஸ்ரீ தேவி. 6, விஷ்ணு. 7, யமன். 8, மாணிபத்திரன். 9, தந்தசூகம் (ஸர்பம்). 10, வாயு. 11, இவர்கள் முறையே கரணங்களின் அதிதேவதைகளாவார்கள்.

### பவாதிகரணுபிமானிகளின் ஸ்வரூபங்கள்

### 393. அவர்களுள், முதலில் பவாபிமானியான இந்திரனுடைய தியானம்

யானை வாஹனத்தில் வீற்றிருப்பவரும், வஜ்ரம்-அங்குசம்-அபயம் இவைகளை கைகளில் தரிப்பவரும், இந்திராணீதேவியின் மனதைக் கவர்ந்தவரும், பவகரணத்திற்கு அபிமானி தேவனுமான இந்திரனை வணங்குகிறேன்.

௩௯௪ அத பாலவாபிமானி ப்ரஜாபதி த்யானம் —

பாலவஸ்ய ச நேதாரம் ப்ரஜாநாம் பதிமவ்யயம் ।
அக்ஷஸ்ரக்ஸ்ருக்ஸ்ருவகமண்டல்வாட்யம் பரேஶம் பாத்ர
ஶோபிதம் ॥ ௨ ॥

ப்ரஜாபதிம் ப்ரணமாமி ।

### 394. பாலவாபிமானி பிரஜாபதி தியானம்

குறைவற்றவரும் அல்லது அழிவற்றவரும், ஜபமாலை-ஸ்ருக்-ஸ்ருவம்-கமண்டலம் இவைகளை தரிப்பவரும், பாலவ

கரணத்திற்கு அபிமானி தேவதையுமான பிரஜாபதியை வணங்குகின்றேன். அவர் என்னை எப்பொழுதும் காப்பாற்ற வேண்டும். பாடலவர்ணம். (2)

௩௯௫ அத கௌலவாபி⁴மாநி மித்ரத்⁴யாநம் —

ஸந்த்³ரம் ஶீதயுதம் தம் கௌலவாபி⁴மாநம் மித்ரம் ।
க³தா³வராட்⁴யஹஸ்தம் ச வந்தே³ஹம் தி³வஸேஶ்வரம் ॥ ௧ ॥

ரக்தவர்ண: ।

## 395. கௌலவாபிமானிமித்ர தியானம்.

சந்திரனை குளிர்ச்சியுடையவனாகச் செய்கின்றவனும், கதை-வரதம் இவைகளை கைகளில் வஹிப்பவனும், பகலுக்கு அதிபனாக இருப்பவனும், கௌலவகரணத்திற்கு அதிதேவதையாக இருப்பவனுமான மித்திரனை நான் வணங்குகின்றேன். சிவப்பு நிறம் (3)

௩௯௬ அத தைதுலாபி⁴மாநி பித்ருதே³வதாத்⁴யாநம் —

தைதுலாபி⁴மாநிநோ பித்ரூன் லோகைஸ்ஸம்பூஜிதாந் ।
ஸந்துஷ்டா: பிதரோ மஹ்யம் ஸௌபா⁴க்³யாரோக்³ய-
தா³யகா: ॥ ௪ ॥

நீலவர்ண: । (ஏவாம் நக்ஷத்ரதே³வதாவஶாத் ॥ ௫ திதி॥)

## 396. தைதுலாபிமானி பித்ரு தேவதா தியானம்.

ஸகல லோகங்களாலேயும் பூஜிக்கப்பட்டவர்களும், தைதுலகரணத்திற்கு அபிமானி தேவதைகளுமான பித்ரு தேவதைகளை வணங்குகின்றேன். ஸந்தோஷத்தை

யடைந்த அந்த பித்ருக்கள், எனக்கு விருப்பமான ஸகல அபீஷ்டங்களையும் அளிக்கவேண்டும். நீல நிறம். (மகா நக்ஷத்திர தேவதைகளைப்போல. நிதி. 5.) (4)

௩௯௭ அத கரஜாபிமாநி பூமித்யாநம் —

கரஜாபிமாநிநீம் பூமிம் தேவீம் வாஞ்சிததாயிகாம் ।
நமஸ்யாமி ஸதா ஸா மாம் ரக்ஷதாச்சுபகாரிகா ॥ ௫ ॥

ஶ்வேதவர்ணா ॥ (பஞ்சபூதஸ்தபூமிவத் ॥ ௫ நிதி ॥)

## 397. கரஜாபிமானி பூமித்யானம்:

விரும்பியதையளிப்பவளும், கரஜகரணத்திற்கு அதி தேவதையுமான பூமி தேவியை வணங்குகின்றேன். சுபங்களையளிப்பவளான அந்த பூமிதேவியானவள், எப்பொழுதும், என்னைக் காப்பாற்றுவாளாக. வெளுப்பு நிறம். (பஞ்சபூதங்களிலுள்ள பூமியைப்போல. நிதி. 5. (5)

௩௯௮ அத வணிஜாபிமாநி ரமாத்யாநம் —

வணிஜேஶீம் ஶுபாம் வந்தே ரமாம் கருடவாஹநாம் ।
ஸம்பவத்ஸ்வாமிநீதி வாணீம் ஶேஷம் ஹ்ருதயஸ்திதா ॥ ௬ ॥

கநகவர்ணா ॥

## 398. வணிஜாபிமானி ரமாத்யானம்:

கருடவாஹனத்திலிருப்பவளும், சங்கம்-சக்கரம்-வரதம் -அபயம், இவைகளைக் கைகளிலுடையவளும், வணிஜ கரணத்திற்கு அபிமானி தேவதையுமான ரமா (லக்ஷ்மீ)

தேவியை நான் வணங்குகின்றேன். அவள் விரும்புகின்ற வைகளையளிக்கவேண்டும். தங்கநிறம். (6)

௯௯௯ அத ஹரி்ரமானி யமத்யானம் —

யமம் மஹிஷாரூடம் தண்டபாசதரம் ப்ரபும் |
தக்ஷிணாசாபதிம் வந்தே பத்ராரூபம் பயங்கரம் ||௭||

நீலவர்ண: |

## 399. பத்திராபிமானி யமதியானம்

பெரிய மஹிஷவாஹனத்தின் மீது வீற்றிருப்பவரும், தண்டம்-பாசம் இவைகளை தரிப்பவரும், தென்திசை நாயகனும், பெருமை வாய்ந்தவனும், பத்திரை கரணத்திற்கு அபிமானி தேவதையும், பயங்கரமான ஸ்வரூபமுடையவருமான யமனை வணங்குகின்றேன். நீலநிறம். (7)

௪00 அத சகுநீமானி விஷ்ணுத்யானம் —

விஷ்ணும் தேவேசம் வந்தே வைநதேயம் வரவாஹனம் |
சங்கசக்ரகதாசார்ங்கதாரிணம் நௌமி ஸர்வதா ||௮||

நீலமேகவர்ண: |

## 400. சகுனி அபிமானி விஷ்ணு தியானம்

கருடனுக்கு நாயகனும், கருடனை வாஹனமாக உடையவரும், சங்கம்-சக்கரம்-கதை-சார்ங்கம் இவைகளை தரிப்பவருமான விஷ்ணுதேவனை, எப்பொழுதும் வணங்குகின்றேன். நீலமேகநிறம். (8)

௪௦௧ அத சதுஷ்பாதபிமானி மாணிபத்ரத்யானம் —

மாணிபத்ரமஹம் வந்தே சதுஷ்பாத்திதிநாயகம் ।
யக்ஷேச்வரஸ்ய ஸேநான்யம் ஸர்வாபீஷ்டம் ப்ரயச்சது ॥

நீலவர்ண: ।

### 401. சதுஷ்பாத் அபிமானி மாணிபத்ர தியானம்

குபேரனுடைய ஸேனபதியாக இருப்பவனும், சதுஷ் பாதம் என்னும் திதியின் (கரணத்தின்) நாயகனாக இருப்ப வனுமான மாணிபத்ரனை நான் வணங்குகிறேன். அவர் நான் விரும்புகின்றவைகளையளிப்பாராக. நீலநிறம். (9)

௪௦௨ அத நாகவாபிமானி ஸர்பத்யானம் —

நாகவஸ்தான் நாகான் நாநாபீஷ்டப்ரதாயிநஃ ।
வந்தே தாநாயுராரோக்யபுத்ரபௌத்ராபிவ்ருத்தயே ॥

க்ருஷ்ணவர்ண: । (அஷ்டநாகஸ்தசேஷவத் ॥ இதி ச)

### 402 நாகவாபிமானி ஸர்ப தியானம்

மனிதர்களின் பற்பல விருப்பங்களையுமளிப்பவர்களும், நாகவகரணத்திற்கு அபிமானி தேவர்களாக இருப்பவர் களுமான அந்த நாகங்களை, ஆயுள்-ஆரோக்கியம்-புத்திரர் கள்-பௌத்திரர்கள் இவைகளின் அபிவிருத்தியை வேண்டி வணங்குகின்றேன். கறுப்பு நிறம். அஷ்ட நாகங்களுள் கூறப்பட்டுள்ள சேஷனைப்போல. (10)

௪௦௩ அத கிம்ஸ்துக்நாபிமானி வாயுத்யானம் —

கிம்ஸ்துக்நஸ்யாதிபோ வாயுர்ய: ஸர்வ ஸர்வத்ர ஸதா வஹந் ।

बहुबलाः प्रयच्छन्तु वरं वाञ्छितार्थसञ्चयं मे ॥११॥

धूम्रवर्णाः ।

## 403 கிம்ஸ்துக்நபிமானி வாயு தியானம்

எழு ஏழாகப்பிறிக்கப்பட்டவர்களும், அதிக பலமுள்ளவர்களும், கிம்ஸ்துக்னகரணாபிமானி தேவதைகளுமான, வாயுதேவர்களை வணங்குகின்றேன். அவர்கள் என்னுடைய விருப்பங்களையளிப்பார்களாக. புகை நிறம். (11)

अथ ... स्वरूपम् —

(रुद्रयामले कालीकल्पे)

वराननं सिंहमुखं त्रिपादं
शार्ङ्गधरं क्रूरदंष्ट्रं ।
कपालपाशाङ्कुशशूलखड्ग-
हस्तं सदा लोकभयङ्करं च ॥

दिक्षु सर्वास्वपि ...
नमामि वायुं शववाहनं तम् ॥

नीलवर्णः ।

ओङ्काराक्षरम् —

(शौनकीये शान्तिप्रकरणे)

ज्वलत्पावकसङ्काशां नीलमेघसमप्रभाम् ।
सर्वेषां नारायणस्यैव सर्वेषितां सीम
रूपिणीम् ॥१॥

தம்ஷ்ட்ராகராளவதநம் ஸிம்ஹோபரிஸம்ஸ்திதம் |
ஸம்யுக்தம் த்ரிபிர்ஹஸ்தைஶ்ச ப்ரஸந்நம் ஶுஷ்கோதரம் ||

பாஶாங்குஶகபாலாநாம் ஹலாநாஞ்ச தாரிணம் |
தாரயந்தம் ஸதாகாலம் ரௌத்ரம் நக்ஷத்ர விபூஷணம் ||

தம்ஷ்ட்ராதம்ஷ்டாதிரோஷ்டம் தம் பா(ர)ஹாராஸ்ரு
ஹரிஷணம் |
ஶவம் விபஸ்ரரூடம் ஹைவ நக்ஷத்ர பாத்ரே
த்யாஜ்ய: ||

தத்ர ப்ரதமபாதிகாதேவதா ருத்ர: |
த்விதீயபாதிகா தேவதா யம: |
த்ருதீயபாதிகா தேவதா அக்நி: |
துரீயபாதிகா தேவதா நிர்ருதி: |

## 404. தியாஜ்ய ஸ்வரூபம்

(ருத்ரயாமளத்தில் குணகல்பத்தில்—)

கழுதை முகமுடையவனும், ஸிம்ஹத்தின் கழுத்தைப் போன்ற கழுத்தையுடையவனும், மூன்று கால்களையுடையவனும், காய்ந்த (ஒட்டிய) வயிற்றையுடையவனும், கோபமடைந்த பாம்பின் கண்களைப்போன்ற கண்களையுடையவனும், கபாலம்-பாசம்-அங்குசம்-கலப்பை, இவைகளைக் கையில் தரிப்பவனும், உலகத்திற்கு பயத்தையுண்டுபண்ணுகின்றவனும், நக்ஷத்திரங்களிலும், ராசி முதலியவைகளிலும் நர்த்தனம் செய்கின்றவனும், சவத்தை வாஹனமாகக் கொண்டவனுமான அந்த தியாஜ்யகால தேவனை வணங்குகின்றேன். நீலநிறம்.

## மற்றொருவிதம்

(சௌனகீயம் சாந்தி பிரகரணத்தில்—)

தியாஜ்ய தேவதையானவள், சுடர்விட்டெறியும் தீயைப்போன்ற மயிர்நுனியையுடையவளும், நீலமான மேகம்போன்ற நிறமுடையவளும், இரும்பு நகைகளை அலங்கரித்துக்கொண்டிருப்பவளும், பயங்கரமான உருவமுடையவளும், தெத்திப்பற்களுடன் பயங்கரமான முகத்தையுடையவளும், எருமை வாஹனத்தின்மீது வீற்றிருப்பவளும், எட்டுக்கைகளையுடையவளும், கத்தி-சூலம்-கதை-மாமிசம்-பாசம்-தண்டம்-அங்குசம்-நாராசம் என்னும் ஆயுதங்களை தரிப்பவளும், பெரிய சரீரத்தையுடையவளும், பயத்தையுண்டுபண்ணுகிறவளும், தெத்திப்பற்களாலே கடிக்கப்பட்ட கீழுதட்டையுடையவளும், சிறந்த ஆஹாரத்தையும் (சிறந்த ஹாரங்களையும்) எலும்புகளையுமணிந்திருப்பவளும், அல்லது எலும்புகளாலான சிறந்த பூஷணங்களையுடையவளுமாவாள். இவ்விதமாக தியாஜ்ய தேவதாஸ்வரூபத்தை செய்து, பிறகு அதை பாத்திரத்தில் வைக்கவேண்டும். (பூஜிக்க வேண்டும்.)

அந்த தியாஜ்ய காலத்தில் முதலாவது நாழிகைக்கு தேவதை ருத்திரனுவார். இரண்டாவது நாழிகைக்கு தேவதை யமனுவார். மூன்றுவது நாழிகைக்கு தேவதை அக்கினியாவார். நான்காவது நாழிகைக்கு தேவதை மிருத்யுவாவார். [எனவே தியாஜியம், 4. நாழிகை காலந்தான் என்பது பொருள்.]

அத ஸ்வோக்தம் ம்ருத்யுஸ்வரூபம் —

தம்ஷ்ட்ராகராலவதனோ நீலாஞ்ஜனஸமாக்ருதி: |
பாஶஹஸ்தம் கம்ஸமஹாபாணிர் ம்ருத்யுர்த்யேயோ வத: ||
நீலவர்ண: |

## 405. இவ்விடத்தில் கூறப்பட்டிருக்கின்ற மிருத்யுவின் ஸ்வரூபம்

தெத்திப்பற்களினாலே பயங்கரமான முகத்தையுடையவரும், நீலமான அஞ்சனத்தைப்போன்ற (அஞ்சனம்— அஞ்சனக்கல் அல்லது மை) உருவத்தையுடையவரும், பாசம்-கத்தி-அங்குசம்-கதை இவைகளை கையில் தரிப்பவருமான மிருத்தியுவானவர் எப்பொழுதும் காப்பாற்ற வேண்டும். நீலநிறம்.

௪௦௬ அம்ருதலக்ஷணம் —

(ஆயுர்வேததந்த்ரே)

மதுரரஸஸமேதம் க்ஷுத்த்ருஷாஶாநிவாரம்
ஜநநமரணவார்த்தக்யாதிதோஷாபநோதம் |
த்ரிதிவஜநநிஷேவ்யம் ஶுக்லவர்ணம் மஹௌஜ:
ததம்ருதமஹமேவம் ஸர்வதா பாவயாமி ||

ஶுக்லவர்ணம் |

## 406. அமிருதலக்ஷணம். (ஆயுர்வேததந்திரத்தில்)

மதுரமான சுவையுடன் கூடியதும், பசி, தாகம், இவைகளில் ஆசையை நிவர்த்தி செய்கின்றதும், ஜனனம்-மரணம்- கிழத்தனம் முதலான தோஷங்களைப் போக்குவதும், தேவலோகத்தில் வஸிக்கும் ஜனங்களாகிய தேவர்களினாலே ஸேவிக்கப்பட்டதும், வெளுப்பு நிறமுடையதும், சிறந்த ஓஜஸ்ஸை யளிக்கக் கூடியதுமான, அந்த அமிருதமெனப்படும் சுபகரமான தெய்வத்தை, எப்பொழுதும் போற்றுகிறேன். வெளுப்புநிறம்.

४०७ अथ गुलिकस्वरूपम्—

(ज्योतिषरत्नाकरे)

नीलाञ्जनप्रकाशो रक्ताक्षो विमलेक्षणो दीर्घः ।
पञ्चास्यः स्थूलदन्तो भल्लहस्तः खरवाहनो गुलिकः ॥

नीलवर्णः । (जैमिनिसूत्रे गुलिकः शनिपुत्रः उपग्रहः इत्युक्तः ।)

## 407. குளிகஸ்வரூபம் (ஜ்யோதிஷரத்னாகரத்தில்)

குளிகனானவர், கருப்பான மையைப் போன்ற சரீர காந்தியை யுடையவரும், சிவப்பான கண்களை யுடையவரும், சுத்தமான கண்களையுடையவரும், நீண்ட சரீர முடையவரும், ஐந்து முகங்களை யுடையவரும், பருத்த நெத்திப்பற்களையுடையவரும், பல்லம் என்ற ஆயுதத்தை கையில் வைத்துக் கொண்டிருப்பவரும், கழுதைவாஹனத்தின் மீது வீற்றிருப்பவருமாவார். நீலநிறம். (ஜைமினி ஸூத்திரத்தில் குளிகன் சனியின் புதல்வன் என்னும் உபகிரஹம் என்றும் கூறப்பட்டுள்ளது.)

४०८ अथ उत्पातस्वरूपम्—

(ज्योतिषरत्नाकरे)

स कृष्णो दारुणवपुः लोहिताक्ष उपोदरः ।
सर्वाशिष्टकरो रौद्रो ह्युत्पातो ह्युत्पातसंज्ञितः ॥

कृष्णवर्णः

## 408. மஹாபாதஸ்வரூபம். (ஜ்யோதிஷரத்னாகரத்தில்)

கருப்பு நிறமுடையவரும், பயங்கரமான சரீரத்தை யுடையவரும், சிவந்த கண்களையுடையவரும், பருத்த தொந்தியையுடையவரும், ஸகலவிதமான உபத்திரவங் களையும் செய்யக்கூடியவரும், பயங்கரமானவருமான அந்த மஹாபாதனானவர், அடிக்கடி எனது ஹிருதயத்தி லிருப்பாராக. கருப்பு நிறம்.

௪௱௯ 𑌅𑌥 𑌵𑍍𑌯𑌤𑍀𑌪𑌾𑌤𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 —

(𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾𑌰𑍍𑌣𑌵𑍇)

𑌕𑍃𑌷𑍍𑌣𑍋 𑌰𑍋𑌹𑌿𑌤𑌸𑍍𑌥𑌾𑌨𑌃 𑌶𑍍𑌵𑍇𑌤𑌦𑍃𑌗𑍍𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰𑌾𑌨𑌨𑌃 ।
𑌸𑌹𑌸𑌾𑌜𑍍𑌜𑌿𑌹𑍍𑌵𑌵𑌸𑌨𑌃 𑌨𑍀𑌲𑌵𑌰𑍍𑌣𑌵𑌿𑌭𑍂𑌷𑌿𑌤𑌃(𑌷𑌣𑌃) ॥

𑌅𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑌭𑍁𑌜𑍋𑌪𑍇𑌤𑌃 𑌹𑍍𑌰𑌸𑍍𑌵𑌕𑌣𑍍𑌠𑍀 𑌖𑌰𑌾𑌨𑌨𑌃 ।
𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌦𑌕𑍍𑌷𑌹𑌸𑍍𑌤𑍇 𑌤𑍁 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑍇 𑌰𑍋𑌷𑌹𑍇𑌤𑌯𑌃 ॥

𑌅𑌕𑍍𑌷𑌸𑍂𑌤𑍍𑌰𑌂 𑌤𑍃𑌤𑍀𑌯𑍇 𑌤𑍁 𑌤𑍁𑌰𑍀𑌯𑍇𑌣 𑌮𑌹𑌾𑌯𑍁𑌧𑌮𑍍 ।
𑌪𑌞𑍍𑌚𑌮𑍇 𑌶𑌙𑍍𑌖𑌵𑌜𑍍𑌰𑌾𑌂 𑌹𑌸𑍍𑌤𑍇 𑌷𑌷𑍍𑌠𑍇 𑌕𑌵𑌚𑌮𑍇𑌵 𑌚 ॥ ௧ ॥

𑌸𑌪𑍍𑌤𑌮𑍇 𑌶𑍂𑌲𑌂 𑌹𑌸𑍍𑌤𑍇 𑌪𑌙𑍍𑌕𑌜𑌂 𑌚𑌾𑌷𑍍𑌟𑌮𑍇 𑌕𑌰𑍇 ।
𑌨𑌵𑌮𑍇 𑌚𑍈𑌵 𑌕𑍂𑌠𑌾𑌰𑌂 𑌶𑍃𑌙𑍍𑌗𑌿𑌕𑌾𑌶𑌾𑌖𑌿𑌶𑍋𑌤𑍍𑌤𑌮𑍇 ॥௨॥

𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌕𑍇 𑌚𑍈𑌵 𑌸𑍍𑌰𑌜𑌂 𑌹𑌸𑍍𑌤𑍇 𑌤𑍃𑌤𑍀𑌯𑌕𑍇 ।
𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍇 𑌕𑌾𑌰𑍍𑌮𑍁𑌕𑌂 𑌬𑌾𑌣𑌂 𑌪𑌞𑍍𑌚𑌮𑍇 𑌕𑍍𑌷𑍁𑌰𑌿𑌕𑌾𑌸𑌿𑌵𑌿 ॥

𑌶𑍂𑌲𑌂 𑌤𑍁 𑌕𑌟𑌰𑌂 𑌷𑌷𑍍𑌠𑍇 𑌸𑌪𑍍𑌤𑌮𑍇 𑌶𑌰𑌮𑍇𑌵 𑌚 ।
𑌅𑌷𑍍𑌟𑌮𑍇 𑌚 𑌧𑍍𑌵𑌜𑌂 𑌹𑌸𑍍𑌤𑍇 𑌨𑌵𑌮𑍇 𑌖𑌡𑍍𑌗𑌸𑌂𑌶𑍍𑌰𑌯𑍇 ॥௩॥

த்⁴யாதோ தே³வோ விவிதவிலஸத் பூ⁴ஷயா சைவ ஸூத்ரே ॥

நீலவர்ண்ய: ।

**409.** வியதீபாத ஸ்வரூபம் (ஜ்யோதிஷார்ணவத்தில்)

கழுத்து வரையில் சிவப்பு நிறமுடையவனும், வெண்மையான கழுத்தையுடையவனும், மங்களகரமான முகத்தையுடையவனும், மங்களகரமான மஞ்சிட்டை நிறமான (மஞ்சள் நிறமான) ஆடையையுடையவனும், நீல நிறமான ஆபரணங்களையணிந்திருப்பவனும், 18 கைகளுடன்கூடியவனும், (அவைகளுள் வலது பக்கத்திலுள்ள, 9 கைகளில்) முதலாவது கையில் பாத்திரத்தையும், 2வது கையில் கல்லுகளையுடைக்கும் ஆயுதத்தையும் (சித்துளியும்) 3வது கையில் ஜபமாலையையும், 4வது கையில் கதையையும், 5வது கையில் சங்கிலியையும், (விலங்கையும்) 6வது கையில் கவசத்தையும், 7வது கையில் முத்கரம் என்ற ஆயுதத்தையும் 8வது கையில் தாமரை மலரையும், 9வது கையில் குத்தாலியையும், இடது பக்கம் முதலாவது கையில் கொம்பையும் 2வது கையில் பாத்திரத்தையும், 3வது கையில் கொம்பு வாத்தியத்தையும், 4வது கையில் வில்லையும், 5வது கையில் கத்திரிக்கோலையும், 6வது கையில் உலக்கையையும், 7வது கையில் அம்பையும், 8வது கையில் கொடியையும், (துவஜத்தையும்) 9வது கையில் கோழியையும் தரிப்பவனும், பகைவர்களை அழிப்பவனும், சிதைவுக்கும், அழிவுக்கும் காரணமானவனுமான வியதீபாதன் (நன்மைகளைச் செய்யவேண்டும்)

௪௧௦ அத² வ்யதீபாதஸ்வரூபம் —

(ஜ்யோதிஷார்ணவே)

சந்த்³ரார்கயோ: நயனவீக்ஷணஜாதவஹ்நி:

காலாநலப்ரதிமநிக்ஷு: ஸமஸ்தவிஷ்டித்³ரஹ்ம: ।

[illegible]
[illegible]

[illegible] ||

[illegible]

410. வியப்ரபாத ஸ்வரூபம் (ஜ்யோதிஷார்ணவத்தில்)

சந்திரன், சூரியன் இவர்கள் ஒருவருக்கொருவர் கண்களினுலே பார்த்துக்கொண்டதனுலே உண்டான சரீரத்தையுடையவனும், பிரளய காலாக்கினியின் தீச்சுடர் போன்ற காந்தியையுடையவனும், மிகவும் பயங்கரமான புருஷவடிவமுடையவனும், ஆயுதங்களுடன் பூமியில் விழுகின்றவனுக காணப்படுகின்றவனுமான வியதீபாத யோகதேவனுனவன், ஸகல காரியங்களுக்கும் கெடுதியை செய்கின்றவனுவான். சிவப்பு நிறம்.

[illegible]

[illegible]

[illegible]
[illegible] ||

[illegible]

411. வைப்ரபாத ஸ்வரூபம் (ஜ்யோதிஷாத்னகாத்தில்)

வைப்ரபாதன், நீண்டகைகளையுடையவனும், அதி பயங்கரமான உருவமுடையவனும், கூர்மையான தெத்திப் பற்களையுடையவனும், அதிகக் கொழுப்புடையவனுமாவான். வைப்ரபாதனுடைய இப்படிப்பட்ட உருவமானது, உடனே மரணத்திற்குக் காரணமாகும். நீலநிறம்.

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

## 412. ஜன்ம நக்ஷத்திர ஸ்வரூபம்

(ஜ்யோதிஷ ரத்னகரத்தில்)

கொடூரமான உருவமுடையதும், கையில் கலசத்தை வைத்துக்கொண்டிருப்பதும், துடித்து அசைகின்ற நாக்கை யுடையதும், பிரகாசமான கண்களையுடையதும், சிவப்பு நிற முடையதும், பிரகாசமாயும் பெரிதாகவுமிருக்கின்ற பற்களுள் உயரத்தூக்கி இருக்கின்ற தெத்திப் பற்களினுலே பயங்கர மானதும், அங்காரகன், ஸூரியன், சனி இவர்களுடன் அடிக்கடி கூடியிருப்பதும், வரதம் அபயங்களுடன் மாலையை தரிப்பதும், அந்தணர்களினுலே சொல்லப்படுகின்ற பூஜை யின் மந்திரங்களினுலே பிரீதியுடன் (வேண்டியவற்றை) அளிக்கின்றதுமான ஜன்ம நக்ஷத்திரத்தை (ஜன்ம நக்ஷத்திர தேவதா ஸ்வரூபத்தை) பாவனை செய்கின்றேன். சிவப்பு
63 நிறம்.

[illegible]

தைவதாநாம் நாமாநி —

(முஹூர்த்தகணபதௌ)

ஆத்ய(த்ய:) ஸம்வத்ஸரோ ஜ்ஞேய: யுகஶ்சாக்நிஶ்ச தைவத: ।
பாநுமத்தைவத: ப்ரோக்த: த்விதீய: பரிவத்ஸர: ॥

இடாவத்ஸரஸம்ஜ்ஞஶ்ச த்ருதீயஶ்சந்த்ரதைவத: ।
அநுவத்ஸரகஶ்சைவ ப்ராஜாபத்யஸ்ஸமீரித: ॥

ததைவேத்வத்ஸரோ கௌரீ தைவத: ஸ து பஞ்சம: ।
யுகம் தை: பஞ்சபிர்வர்ஷை: ஷஷ்டி: ஶாஸ்த்ரஸம்மி-
யுக்தமை: ॥

## 413. ஐந்து வருஷங்களைக்கொண்ட யுகத்திற்கு அபிமானி தேவதைகளின் பெயர்கள்.

(முஹூர்த்த கணபதியில்)

முதலாவது வருஷத்திற்கு ஸம்வத்ஸரம் என்று பெயர். யுகம் என்றும் பெயராம். இதற்கு அக்னிதேவதையாவார்.

இரண்டாவது வருஷத்திற்கு பரிவத்ஸரம் என்று பெயர். இதற்கு பானுமான் (ஸூர்யன் தேவதை) என்று கூறப்பட்டிருக்கிறது.

மூன்ருவது வருஷமானது இதாவத்ஸரம் எனப்படும். இதற்கு சந்திரன் தேவதையாவார்.

நான்காவது வருஷமானது அனுவத்ஸரம் எனப்படும். இது பிரஜாபதியை தேவதையாக உடையதாம்.

ஐந்தாவது வருஷமானது இத்வத்ஸரம் எனப்படும். இதற்கு கௌரீதேவி தேவதையாவார்.

இந்த ஐந்து வருஷங்களுக்கும் யுகம் என்று பொதுப் பெயர். இந்த யுகங்கள் பன்னிரண்டுகொண்டது (12×5=60.) அறுபது வருஷமாம்.

அத² த்³வாத³ஶயுகா³பி⁴மானி தே³வதானாம் நாமானி–

(ஶ்ராத்³த⁴க³ணபதௌ)

அக்³நிர் ஜீவ இந்த்³ரவாயு த்வஷ்டா ஹ்யஹிர்பு³த்⁴நிய: |
பிதரோ விஶ்வேதே³வா இந்த்³ராக்³நீ ச சந்த்³ரம்: ||

ப³ர்ஹிஷதா³ஶ்விநௌ ப⁴க³ஶ்சேதி க்ரமாத்

யுகாதி⁴பா: |

12 யுகாபிமானி தேவதைகளின் பெயர்கள்

(ஶ்ராத்தகணபதியில்.)

கீழே கூறப்பட்ட 12 யுகங்களின் அபிமானி தேவதைகள், முறையே, அக்னி 1, குரு 2, இந்திரன் 3, வருணன் 4, துவஷ்டா 5, அஹிர்புத்னியன் 6, பிதிருக்கள் 7, விசுவேதேவர்கள் 8, சந்திரன் 9, இந்திரனும், அக்நியும் 10, அசுவினீ தேவதைகள் 11, பகன் 12. என்பவர்களாவார்கள்.

அத² ஸம்வத்ஸரபரிவத்ஸராதி³பஞ்ச நாமானி —

(தே³வீபுராணே காலநிர்ணயே ச)

ப்ரப⁴வாதி³வத்ஸராணாம் பஞ்சானாம் வை க்ரமேண வை

ஸம்ஜ்ஞா: ஸ்ம்ருதா: |

ஸம்வத்ஸர: பரிவத்ஸர இத்³வத்ஸரஶ்சானுவத்ஸரஶ்சைவ ||

அனுவத்ஸரஶ்ச ததா² பஞ்சமஶ்ச வத்ஸரோ ஜ்ஞே

(ஜ்ஞே)ய: |

ஸம்வத்ஸரர், பரிவத்ஸரம், முதலான 5 பெயர்கள்.

(மஹோக்ர ரதசாந்தியிலும், காலமாதவீயத்திலும்.)

பிரபவ முதலான வருஷங்களுள், 5 வருஷங்களுக்கு, முறையே, ஸம்வத்ஸரம் 1, பரிவத்ஸரம் 2, இதாவத்ஸரம் 3, அநுவத்ஸரம் 4, இத்வத்ஸரம் 5, என்று பெயராம்.

அத ப்ராஹ்மாதிநவமாநாநி —

(ஸூர்யஸித்தாந்தே மாநாத்யாயே)

ப்ராஹ்மம் தைவம் ததா பித்ர்யம் ப்ராஜாபத்யம் ச
கௌரவம் ।
ஸௌரம் ச ஸாவநம் சாந்த்ரமார்க்ஷம் மாநாநி வை நவ ॥

பிராம்ஹம் முதலிய மானங்கள் கூறப்படுகின்றன.

(ஸூர்யஸித்தாந்தத்தில் மானுத்யாயத்தில்.)

மானமானது, (கால அளவானது) பிராம்ஹம். 1, தெய்வம். 2, பித்ரியம். 3, ப்ராஜாபத்யம். 4, பார்ஹஸ்பத்யம். 5, ஸௌரம். 6, ஸாவனம். 7, சாந்திரம். 8, ஆர்க்ஷம். 9, என்று 9. விதமாம்.

அத ப்ராஹ்மாதிமாநாநாம் ஸ்வரூபாணி —

௪௧௪ தத்ராதௌ ப்ராஹ்மமாநஸ்வரூபம் —

நக்ஷத்ரஸ்ய நிரோதோய: ப்ராஹ்மகல்ப உதாஹ்ருத: ।
ததா சக்ரஸமாக்ராணை: ஸர்வை: ஸப்தர்ஷிபாராயணம் ॥

பிராம்ஹம் முதலிய மானங்களின் ஸ்வரூபம்.

## 414. அவற்றுள் பிராம்ஹமான ஸ்வரூபம்.

நக்ஷத்திரங்கள், த்யுலோகர், இரவு, இவைகளின் அழிவானது, பிராம்ஹ கல்பமெனப்படும். [நக்ஷத்திர மண்டலம், பூலோகம் - புவர்லோகம் - ஸுவர்லோகங்கள், ஸ்வரூப நாசமடைந்து, இரவு பகல் என்ற பாகுபாடற்ற காலமானது, பிராம்ஹ கல்பமாகும். என்பது பொருள்.]

பிறகு, ஸூரியன் மகரத்தில் ஸங்கிரமிக்கின்ற காலமானது, உத்தராயணமாகும். (1)

௪௧௫ அத தைவமானஸ்ய ஸ்வரூபம் —

கர்காத்யேஷு ததைவ ஸ்யாத் ஷண்மாஸா தக்ஷிணாயனம் |
ஸுராஸுராணாமன்யோன்யமஹோராத்ரம் விபர்யயாத் ||

## 415. தைவமான ஸ்வரூபம்

கடகம் முதல் 6 மாதங்கள், தக்ஷிணயனமாகும். இக்காலமானது, தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும், விபரீதமாக, அஹஸ்ஸும் இரவு மாகும். (2)

[தக்ஷிணயனமானது தேவர்களுக்கு இரவாகவும், அஸுரர்களுக்குப் பகலாகும். இவ்விதமாகவே, உத்தராயணமானது தேவர்களுக்குப் பகலாகும். அஸுரர்களுக்கு இரவாகும். என்பது பொருள்.]

௪௧௬ அத பித்ர்யமானஸ்ய ஸ்வரூபம் —

பஶ்யந்தி பிதரஸ்ஸூர்யம் பார்ஶ்வயோரூர்த்வஸம்ஸ்திதம் |
த்ரிம்ஶதா திதிபிர்மாஸ: சாந்த்ர: பித்ர்யமஹ: ஸ்ம்ருதம் ||

## 416. பித்ரியமான ஸ்வரூபம்.

பிதிருதேவதைகள், ஸூரியனுக்குப் பக்கங்களில் 3 கிரஹங்கள் ஸஞ்சரிப்பதைக் காண்கிருர்கள். (இத்தகைய காலத்தில்) 30 திதிகள் கொண்டது சாந்திரமாஸமாகும். இக்காலமான பிதிருக்களுக்கு ஒரு நாளாகும். (3)

४१७ अथ प्राजापत्यमानस्वरूपम् —

मन्वन्तरव्यवस्था च प्राजापत्यमुदाहृतम् ।

## 417. பிராஜாபத்யமான ஸ்வரூபம்

மன்வந்தரத்தின் வியவஸ்தையானது (காலமானது) பிராஜாபத்தியம் (தினம்) எனப்படும். (4)

४१८ अथ बार्हस्पत्यमानस्वरूपम् —

बार्हस्पत्येन षष्ट्यब्दं ज्ञेयं नान्यैस्तु
नित्यशः ।

प्रकारान्तरेण —

कार्त्तिकादीनि वर्षाणि गौरस्यार्कोदयात्ततः ॥
(सितानि वत्सराणि यच्च सौम्यान्यब्दानि ॥५॥
अन्यानि त्वचान्द्रमासानि ॥)

वर्तितव्यो व्यवहारस्तु संसाराङ्गेषु
सर्वदा ॥

इत्युक्तेः ।

## 418. பார்ஹஸ்பத்யமான ஸ்வரூபம்.

60 வருஷங்களை பார்ஹஸ்பத்ய மானத்திலேயே கொள்ளவேண்டும். மற்றவைகளாலே கொள்ளக்கூடாது.

மற்றொருவிதமாக.

கார்திகம் முதலான வருஷங்கள், குருவின் சேர்க்கை யாலே கணக்கிடப்பட்டவைகளாகும்.

இந்த 5 விதமானங்களும் தரும சாஸ்திரங்களுக்கு உபயோகமில்லாதவைகளாகும். மற்ற 4 விதமானங்களும், தரும சாஸ்திரங்களுக்கு உபயோகமுள்ளவைகளாகும். (5)

இங்கு (இந்த பாரதவர்ஷத்தில்) ஸௌரம் 1, சாந்திரம் 2, நாக்ஷத்திரம் 3, ஸாவனம் 4, என்ற 4 வித மான மானங்களினாலேயே வியவஹாரங்கள் செய்யப் படுகின்றன என்று கூறப்பட்டிருக்கிறது.

௪௧௯ அத ஸௌராநஸ்ய ஸ்வரூபம் —

ஸௌரஸ்து ஸங்க்ராந்திவஶாச்சாந்த்ரஸ்(ஸ்வேஷ்டஸ்), ||௬||

419. ஸௌரமான ஸ்வரூபம்.

ஸௌரமானமென்பது, ஸூரியன் ராசிகளில் ஸஞ்சரிப் பதால் ஏற்படுவதாகும். (6)

௪௨௰ அத நாக்ஷத்ரமாநஸ்ய ஸ்வரூபம் —

நாக்ஷத்ரமிந்தோர்ப்ரமணாத்து, (௭)

420. நாக்ஷத்திரமான ஸ்வரூபம்.

சந்திரன் நக்ஷத்திரங்களில் ஸஞ்சரிப்பதை அனுஸரித்து வருவது, நாக்ஷத்திரமானமாகும். (7)

௪௨௧ அத ஸாவநமாநஸ்வரூபம் —

த்ரிம்ஶத்திநம் ஸாவநமாஸ: || அ ||

## 421. ஸாவனமான ஸ்வரூபம்

முப்பது நாட்கள் கொண்டது ஸாவனமாஸமாகும். (8)

௪௨௨ அத ஸாவநமாஸலக்ஷணம் —

த்ரிம்ஶத்திநாத்மக: ஸாவநோ மாஸ: ॥ ௯ ॥

## 422. சாந்திரமான ஸ்வரூபம்.

சுக்லபக்ஷம் பிரதமை முதல், கிருஷ்ண பக்ஷம் அமாவாஸ்யை வரையில், சாந்திரமான மாஸமாகும். (9)

அத பார்ஹஸ்பத்யேஷு மாநநியம: —

க்ருஹ்யதே குருமாநேந பார்ஹஸ்பத்யஸ்ய லக்ஷணம் ।
தத்ர த்வாதஶமாஸாத்மா வத்ஸரோऽயம் பவேத் த்ருவம் ॥

## பிரபவாதி வருஷங்களில் மான நியமங்கள்

குருவின் மானத்தினாலே, பிரவாதி வருஷங்களின் லக்ஷணமானது, கிரஹிக்கப்படுகிறது. 12 மாஸங்கள் கொண்டது ஒரு வருஷமாகும்.

அத ஸௌராதிமாநப்ரயோகவிஷயமாஹ —

(வ்ருத்தவஸிஷ்ட:)

ஸௌரேண த்யுநிஶோர்மாநம் ஷடஶீதிமுகாநி ச ।
அயநம் விஷுவச்சைவ ஸங்க்ராந்தே: புண்ய
காலதா ॥

திதி: கரணமுத்வாஹ: க்ஷௌரம் ஸர்வக்ரியாஸ்ததா ।
வ்ரதோபவாஸயாத்ராதிக்ரியா: சாந்த்ரேண க்ருஹ்யதே ॥

அக்ஷஹ்ருத்ரா நாடீ ஶாவஸாஹஸ்ரம் ஜெஹ்யாஃ வவ்யோக்ஷ
யோமதஃ |
ஸாவநாநி ஸ்ருதோதாநி யஜ்ஞகாலவிதிஸ்ஸம்ஹதௌ ||

ஸூதகாதி பரிச்சேதஃ திநாஸாவஹஸ்யா |

(விஷ்ணுவொஸ்ருதிஷெலெ ஸாஹஸ்ரத்ஸௌ நாஷோ
ஸ்ராஹ்ருஃ | தக்ஷிணஷெலெ வாம்ஹரௌநாஷோ ஸ்ராஹ்ருஃ |
ஹ்ரவிஷெலெ தம் ஸௌரௌநாஷோ ஸ்ராஹ்ருஃ | )

## ஸௌரம் முதலிய 4 விதமான மானங்களின் உபயோகங்களாவன.

(விருத்தவஸிஷ்டர் கூறியுள்ளார்.)

பகல் இரவுகளின் மானம், ஷடசீதி முதலிய புண்ணிய காலங்கள், அயனங்கள், விஷுவங்கள், ஸங்கிராந்தி முதலிய புண்ணியகாலங்கள், திதிகள், கரணங்கள், இவைகளையும், விவாஹம் - க்ஷௌரம் - பர்வாக்களில் செய்ய வேண்டிய காரியங்கள், இவைகளையும், ஸௌரமானத்தினாலே கொள்ளவேண்டும். (1)

விரதங்கள், உபவாஸங்கள், யாத்திரை முதலிய காரியங்கள், இவைகளை சாந்திரமானத்தினாலே கொள்ள வேண்டும். (2)

பர்வாவின் கடைசி பாகத்தில் வருகின்ற நக்ஷத்திரத்தைக் கொண்டு மாஸங்களைக் கொள்ளவேண்டும். (3)

யாகங்கள் செய்வதற்குறிய காலங்களை விதிப்பது ஸாவனமானமாகும். இந்த மானத்தினாலே, ஸூதகாதி காலங்களை நிச்சயித்துக்கொள்ளவேண்டும். தினம் - மாஸம் - வருஷதேவதைகள், இவைகளை நிச்சயித்துக்கொள்ள வேண்டும், (4)

[விந்தியமலைக்கு வடக்கேயுள்ள தேசங்களில் பார்ஹஸ்பத்யமானத்தினாலே, வருஷங்களைக் கணக்கிட்டுக்கொள்ள வேண்டும்.

விந்தியமலைக்குத் தெற்கேயுள்ள தேசங்களில் சாந்திரமானத்தினாலே வருஷங்களைக் கணக்கிட்டுக் கொள்ள வேண்டும்.

திராவிட தேசத்தில் ஸௌரமானத்தினாலே வருஷங்களைக் கொள்ளவேண்டும்.]

அத மேஷாதி த்வாதசராசிஸ்வரூபாணி —

(சைவாகமே)

வர்ணாதய: |

(ப்ருஹஜ்ஜாதகே)

௪௨௩ தத்ராதௌ மேஷராசிஸ்வரூபம் —

தீக்ஷ்ணச்ருங்கோ தீர்கதேஹ: ஸதா கண்டா விராஜித:(தம்) |
ரக்தாக்ஷம் குஞ்சிதபாதம் மேஷம் ஹ்ருதி விபாவயே ||

ரக்தவர்ண: ||

மேஷம் முதலிய 12 ராசிகளின் ஸ்வரூபங்கள்.

(சைவாகமத்தில்.) வர்ணமுதலியவைகள்

(பிருஹத்ஜாதகத்தில்.)

423. அவற்றுள், மேஷராசி ஸ்வரூபம்.

கூர்மையான கொம்புகளையுடையதும், நீண்ட சரீரமுடையதும், எப்பொழுதும் மணியுடன் பிரகாசிப்பதும், சிவந்த கண்களையுடையதும், சிறிது வளைந்த காலை

யுடையதுமான மேஷத்தை (மேஷராசி ஸ்வரூபத்தை, மேஷம் - செம்மரியாடு) ஹிருதயத்தில் தியானம் செய்கின்றேன். சிவப்பு நிறம். (1)

௪௨௪ அத வ்ருஷராசிஸ்வரூபம் —

மந்தராசலஸங்காஶம் தீக்ஷ்ணஶ்ருங்கத்வயாந்விதம் ।
ககுத்விராஜமாநாங்கம் வ்ருஷபம் ஹ்ருதி பாவயே ॥௨॥

ஶ்வேதவர்ணः ।

## 424. விருஷபராசி ஸ்வரூபம்.

மந்தர பர்வதத்தைப்போன்ற கம்பீரமான உருவமுடையதும், கூர்மையான இரண்டு கொம்புகளையுடையதும், கொண்டையுடன் விளங்குகின்ற தோள்களையுடையதுமான் விருஷபராசி ஸ்வரூபத்தை (விருஷபம் - காளைமாடு) மனதில் தியானம் செய்கின்றேன். வெளுப்பு நிறம். (2)

௪௨௫ அத மிதுநராசிஸ்வரூபம் —

பரஸ்பராநுராகாட்யௌ பரஸ்பரஸமாக்ருதீ ।
அந்யோந்யாஶ்லிஷ்டஹஸ்தாங்கௌ மிதுநௌ ஹ்ருதி பாவயே ॥

ஹரித்வர்ணः ।

## 425. மிதுனராசி ஸ்வரூபம்

ஒருவருக்கொருவர் அனுராகத்துடன் கூடியதும், ஒருவருக்கொருவர் ஸமானமான சரீரமுடையதும், ஒருவருக்கொருவர் கையினலே அணைத்துக்கொண்டிருப்பதுமான

மிதுனராசி ஸ்வரூபத்தை (மிதுனம் – ஸ்திரீயும் புருஷனும்) மனதில் தியானம் செய்கின்றேன். பச்சை நிறம். (3)

௪௨௬ அத கர்கடராஶித்யாநம் –

வாரிஸ்ரோதோந்தரசரம் ஷட்பாதம் லோஹிதேக்ஷணம் ।
குக்ஷிவிந்யஸ்தநயநம் த்யாயாமி ராஶிம் கர்கடம் ॥௪॥

பாடலவர்ண: ।

## 426. கடகராசி ஸ்வரூபம்.

ஜலம் நிறைந்திருக்குமிடத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருப்பதும், அல்லது ஜலப்பிரவாஹத்தினுள் ஸஞ்சரித்துக் கொண்டிருப்பதும், 6 கால்களையுடையதும், சிவந்த கண்களை யுடையதும், வயிற்றிலமைந்திருக்கின்ற கண்களை யுடையதுமான கடகராசி ஸ்வரூபத்தை (கடகம்—நண்டு) மனதில் தியானம் செய்கின்றேன். பாடலவர்ணம். (4)

௪௨௭ அத ஸிம்ஹராஶித்யாநம் –

ஸந்நாதஹாஸம் பயதம் தந்திமஸ்தகபேதிநம் ।
தீர்கபுச்சஸமாயுக்தம் ஸிம்ஹம் ராஶிம் விபாவயே ॥௫॥

தூம்ரபாண்டுரவர்ண: ।

## 427. ஸிம்ஹராசி ஸ்வரூபம்.

பயங்கரமான பெருஞ்சதத்தையுடையதும், பயத்தை யளிக்கக்கூடியதும், யானையின் மத்தகத்தைப் பிளக்குமாற்ற லுடையதும், நீண்டவாலுடன் கூடியதுமான ஸிம்ஹராசி ஸ்வரூபத்தை மனதில் பாவனை செய்கின்றேன். புகை நிறமும் வெளுப்பும் கலந்த நிறம். (5)

௪௨௮ அத கந்யாராசிஸ்வரூபம் —

பதிமீப்ஸ்யா ஸத்ருசம் தபஸ்யந்தீம் மிதாசனாம் |
ஸம்பூர்ணசந்த்ரவக்த்ராம் காந்தாம் கந்யாம் ஹ்ருதி விபாவயே ||

சித்ரவர்ணா ||

## 428. கன்யாராசி ஸ்வரூபம்.

தனக்கு ஸமானமான கணவனை அடைவதற்காக தவம் செய்கின்றவளும், ஓர் அளவுடன் ஆகாரம் செய்கின்றவளும், நிறைந்த சந்திர மண்டலத்தைப் போன்ற முகத்தை யுடையவளும், மனோஹரமான சரீரத்தையுடையவளுமான கன்னியை, (கன்னிகாராசிஸ்வருபத்தை) மனதில் பாவனை செய்கின்றேன். சித்திர வர்ணம். (6)

௪௨௯ அத துலாராசிஸ்வரூபம் —

ஸங்க்யாதுமாதவஸ்தூனி ப்ரஹ்மணா க்லுப்தாம் புரா |
துலேதி நாம்னா விக்யாதாம் ஸங்க்யாரூபா-
முபாஸ்மஹே ||௭||

க்ருஷ்ணவர்ணா |

## 429. துலாராசி ஸ்வரூபம்.

பதார்த்தங்களை அளவிடுவதற்காக, முன்னொரு காலத்தில் பிரம்ஹதேவனாலே கல்பிக்கப்பட்டதும், துலாம் என்று பிரஸித்தி பெற்றதுமான ஸங்கியா ரூபத்தை (துலாராசி ஸ்வரூபத்தை) உபாஸிப்போமாக. கருப்பு நிறம்.* (7)

---

* துலா யாமக: ஸதோ துலா || இதி ஜைமினிஸூத்ரே

ஜைமினி ஸூத்திரத்தில்—தராசைக் கையில் பிடித்திருக்கின்ற மனித வடிவமானது, துலாராசியாகும். என்று கூறப்பட்டிருக்கின்றது.

சாஙு ஊய வ்ருஸ்சிகராஸி ஸ்வரூபம் —

ஸாயுதஸகூலஸாயங்கம் நீலதோயதஸந்நிபம் ।
ஆதோலநநவாக்ராஹ்யம் வ்ருஸ்சிகம் ஸம்ஸ்மரே ஸதா ॥

கநகவர்ண: ।

### 430. விருச்சிகராசி ஸ்வரூபம்.

விஷத்துடன் கூடியதும், நீல நிறமான மேகத்தைப் போன்ற நிறமுடையதும், அசைந்துகொண்டிருக்கின்ற நுனி வாலையுடையதுமான விருச்சிகராசி ஸ்வருபத்தை, மனதில் தியானம் செய்கின்றேன். தங்கநிறம். (உடல் தங்கநிறம் மற்ற பாகங்கள் நீல நிறமெனக் கொள்ள வேண்டும்) (8)

சாகக ஊய தநூராஸிஸ்வரூபம் —

ஸம்ஹிதாக்ரகோடியுக்மம் ஸுஸஜ்யகுணஸம்ஹிதம் ।
ஆரோபிதஸரம் சாபம் தநுஸ்ஸம்ஸ்மரே ஸதா ॥

விஜ்ஜலவர்ண: ।

### 431. தனுஸ்ராசி ஸ்வரூபம்.

சிறிது வளைந்த நுனியையும் நன்கு பற்றிய நாணையுமுடையதும், குறியை அடிக்கத் தக்கதும், தொடுக்கப்பட்ட அம்பையுடையதுமான தநுஸ்ராசியை மனதில் பாவனை செய்கின்றேன். பொன்வர்ணம்.* (9)

---

* ஆவயவஸ்தானஸமஜவநோ தநு:, இதி ஜைமினி ஸூத்ரே —

ஜைமினி ஸூத்திரத்தில்—வில்லைப்பற்றிய மனித உடலும், இடுப்பிற்குக் கீழே குதிரையின் வடிவமுமுடையது, தநுஸ்ராசியின் வடிவமாம் என்று கூறப்பட்டிருக்கின்றது.

சகஉ அத² உகாரராஶிஸ்வரூபம் —

அம்ஹோயிவொராஜொரகூ்ரதஹம்யிஷ்வெனநடீ ।
ஜநுஜஞ்வூ்ரதிஹயம் உகாரம் ஸ்ர்ஜி ஹாவயெ ॥ம॥

யஜுஸ்ருவண-ஃ ।

## 432. மகரராசி ஸ்வரூபம்.

ஸமுத்திரத்தின் பயங்கரமான மத்திய பாகத்தில் அதிகமாக விளையாடிக்கொண்டிருப்பதும், ஜலத்தில் (ஸமுத்திர ஜலத்தில்) வஸிக்கின்ற ஜந்துக்களுக்கு பயத்தை யளிப்பதுமான மகரத்தை (மகரராசிஸ்வரூபத்தை, மகரம்—மானுடைய முகம் போன்ற முகமுடைய மத்ஸ்யம்.) மனதில் தியானம் செய்கிறேன். புகை நிறம்* (10)

சகக அத² கும்ஹராஶிஸ்வரூபம் —

ஸௌவணாுநவசிதம் ஸயாவெராஹிவெஸிதம் ।
வெநதெயஜவாநீதம் கும்ஹம் ஸ்ர்ஜி விஹாவயெ ॥கக॥

யஜுஸ்ருவண-ஃ । (விஸ்ருவண-ஃ)

## 433. கும்பராசி ஸ்வரூபம்.

ஸ்வர்ணம்-ரத்னங்கள் இவைகளினாலே செய்யப் பட்டதும், அமிருத பிரவாஹத்தினாலே நிரப்பப்பட்டதும், வினதையின் புதல்வனான கருடனாலே வேகத்துடன்

---

*மகரோ மூமாஸ்ய: இதி ஜைமிநிஸூத்ரே —
ஜைமினி ஸூத்திரத்தில்—மகரமானது மான்முகமுடைய முதலைவடிவமுடையதாகும் என்று கூறப்பட்டுள்ளது.

கொண்டுவரப்பட்டதுமான கும்பராசி ஸ்வரூபத்தை, மனதில் தியானம் செய்கின்றேன். புகை நிறம். (சித்ரவர்ணம்)*

௪௩௪ அத மீநராஶி ஸ்வரூபம் —

நிமேஷஹீநநயநம் ஸஞ்சரிதம் வாரிதௌ ஜலே |
ஈப்ஸிதஸ்ய ஸித்த்யர்த்தம் மீநம் ஹ்ருதி விபாவயே ||௧௨||

ஶ்வேதவர்ண: |

434. மீனராசி ஸ்வரூபம்.

கண்கொட்டுதலில்லாத (கண்ணை மூடிக்கொள்ளுகின்ற இமைகளில்லாத) கண்களையுடையதும், ஸமுத்திர ஜலத்தில் துள்ளுகின்றதுமான, மீனராசிஸ்வரூபத்தை, என்னுடைய இஷ்டஸித்தியின் பொருட்டு, மனதில் தியானம் செய்கின்றேன். வெளுப்பு நிறம்.* (12)

அத மேஷாதி த்வாதஶலக்நேஷு க்ரஹதஶா: —

(ஷட்வர்க்கவிபாகே)

தத்ராதௌ மேஷலக்நே —

அஹிமேஶகோ விஶேஷயதோ த்வாத்ரிம்ஶாம்ஶவஶாத் |

* ஸகும்போ நர: கும்ப:, இதி ஜைமிநி ஸூத்ரே —

ஜைமினி ஸூத்திரத்தில்—கும்பராசியானது, நீருடன் கூடிய குடத்தை வைத்துக்கொண்டிருக்கின்ற மனித வடிவமாகும் என்று கூறப்பட்டிருக்கின்றது. (11)

* ஜைமிநி ஸூத்ரே — வ்யத்யஸ்த புச்சமுகமத்ஸ்யத்வயாக்ருதி: மீநராஶி: |

வாலும் தலையும் மாறி இருக்கின்ற இரண்டு மீன்களின் வடிவமாக இருப்பது மீனராசியாம், என்று ஜைமினி ஸூத்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

சாரணம் ஸாஹஸம் ராஜ்ஞாம் மேஷலக்னே
ப்ரசஸ்யதே ||௧||

## மேஷம் முதலிய 12 லக்னங்களில் செய்யக்கூடிய காரியங்கள்

*(தைவஜ்ஞவிலாஸத்தில்)*

### அவற்றுள் மேஷ லக்னத்தில்

பட்டாபிஷேகம், விரோதித்துக்கொள்ளுதல், கைகளினாலே அடித்து வாசிக்கக்கூடிய மிருதங்கம் முதலிய வாத்தியத்தைக் கற்பது, சிறையில் வைப்பது. கொடுமையான காரியம், அரசர்கள் செய்யக்கூடிய யுத்தம் முதலிய ஸாகஸ காரியங்கள், இவைகளை மேஷ லக்னத்தில் செய்யச் சிறந்த பலனையளிக்கும். (1)

வ்ருஷபே —

ஸ்திரசரகார்யம் ஸர்வம்
விவாஹவாஸ்த்வாதிகந்யகாவரணம் |
க்ஷேத்ராரம்பணமகிலம்
பூஷணசில்பாதிகம் வ்ருஷபே ||௨||

### விருஷப லக்கினத்தில்

ஸ்திரமாக நீடித்து நிற்கக்கூடிய காரியங்கள், சர காரியங்கள் (தொடர்ச்சியாக நடக்கக்கூடிய காரியங்கள்) யாவும், விவாஹம், வீடு கட்டுதல் முதலியனவும், கன்னிகையை வரிப்பதும், பூமியில் பயிர் செய்யக்கூடிய
64 ஸகலவிதமான காரியங்களும், ஆபரணங்கள் செய்வதும், தரிப்பதும், சில்பங்களும், விருஷப லக்னத்தில் செய்ய வேண்டும். (2)

மிதுநே —

மேஷவ்ருஷோக்தம் கர்ம
ஸிந்துரஹயோஷ்ட்ராதிரோஹணம் கர்ம ।
மஹிஷம் சாஜவிஷேஷே
க்ஷிதிபதிஸேவாதிகம் மிதுநே ‖ ௩ ‖

மிதுன லக்கினத்தில்

மேஷ-விருஷப லக்கினங்களில் கூறிய காரியங்கள், யானை-குதிரை-ஒட்டகம், இவைகளில் விசேஷமாக ஏறி ஸவாரி செய்வது எருமைகளையும் ஆடுகளையும் பேணி வளர்ப்பது, ராஜ ஸேவை செய்வது, இவைகளை மிதுன லக்கினத்தில் செய்யவேண்டும். (3)

கர்கடே —

வாபீகூபதடாகாதிவாரிபந்தநமோக்ஷணம் ।
பௌஷ்டிகம் கர்ம யத்கிஞ்சித் ஸர்வம் ஸித்த்யதி கர்கடே ‖

கடக லக்கினத்தில்

துரவு, கிணறு, குளம், இவைகளை வெட்டுவது, தண்ணீரைத் தேக்குவது, தேக்கிய தண்ணீரை வெளியில் விடுவது, புஷ்டிகரமான காரியங்களைச் செய்வது, இவை யாவும் கடக லக்கினத்தில் சித்திக்கும். (4)

ஸிம்ஹே —

க்ருஷிவாணிஜ்யபண்யாதி ந்ருபஸேவாபிஷேசநம் ।
யாநவாஹநாதி மேஷோக்தம் கர்ம யத் ஸிம்ஹோதயே
ஸதா ‖௫‖

## ஸிம்ஹ லக்கினத்தில்

பயிரிடுவது, வியாபாரம் செய்வது, பண்டங்களை வாங்குவது விற்பது முதலியன, ராஜஸேவை, ராஜாபிஷேகம், தாதுப்பொருள் ஸம்பந்தமான காரியங்கள், சுரங்கம் ஸம்பந்தமான காரியங்கள், மேஷ லக்கினத்தில் கூறிய காரியங்கள், இவைகளை, ஸிம்ஹ லக்கினத்தில் செய்யவேண்டும். (5)

கூர்மாயாம் —

ஸேவாக்ருஷி ப்ரக்ரயம் க்ஷௌம வீக்ஷா வாதாதிகம் ஸ்ரேஷ்டம்
பவிஷ்டி ।

உத்ஸாஹ ஸாஹஸ விசேஷ கர்ம தைவ ப்ரயோஜ்யம் ஹரிலக்னயாதே ॥

## கன்யா லக்கினத்தில்

ஆபரணங்கள், மங்கள காரியங்கள், மருந்து, விஜ்ஞானம், வியாபாரத்திற்குறிய பண்டங்கள், சில்பம் முதலியன, விவாஹம், சாந்திகரமான காரியம், புஷ்டிகரமான காரியம், யானை–குதிரை–ஒட்டகம், முதலியவைகளின் ஸம்பந்தமான காரியங்கள், இவைகளை கன்னியா லக்கினத்தில் செய்யவேண்டும். (6)

தைவஜ்ஞாபரணே —

க்ருஷிகர்ம ச வாணிஜ்யம் யாத்ராகர்ம ததோதயே ।
ஸுவிக்ரயம் ச பண்யானி தைவஜ்ஞானாம் ஹிதானி ச ॥

## துலா லக்கினத்தில்

பயிரிடுதல், வியாபாரம், யாத்திரை செய்வது, தராசில்

நிறுத்து செய்யப்படும் வியாபாரங்கள், இவைகள், துலா லக்கினத்தில் விசேஷமாக ஸித்தியைத் தரும். (7)

வ௱ஸ்ழிகெ —

ஊாரணம் ஸாஹஸம் வொ௺ம் ராஜஸெவாலிஷெ௳கம் ।
வளய௶கூ௺த்ஷம் ஷீராரஸஂஹம் கூத௶வஷம் வ௱ஸ்ழிகொடியெ ॥

விருச்சிக லக்கினத்தில்

பயங்கரமான காரியம், யுத்தம் முதலிய ஸாகஸ காரியம், கடுமையான காரியம், ராஜ ஸேவை, ராஜாபி ஷேகம், திருட்டுச்செயல், நீடித்து நிற்கும்படி துவக்க வேண்டிய காரியம், இவைகளே, விருச்சிக லக்கினத்தில் செய்யவேண்டும். (8)

ய௲ஷி —

உஜ்ஜா லெவெவ ஸஂ௺ாஉஶிஷ்தீக்ஷ்ூகயாக்ஷியா: ।
வஸ்ராஸ்ரகூ௺ஷிவாணிஜஷம் கூத௶வஷம் காஉ௶கொடியெ ॥

தநுர் லக்கினத்தில்

மங்கள காரியம், ஸேவிப்பது, யுத்தம், சில்பம், சித்திரக் கலை இவைகள் ஸம்பந்தமான காரியங்கள், வஸ்திரம், ஆயுதம், பயிரிடுதல், வியாபாரம், இவைகளே தநுர் லக்கினத் தில் செய்யவேண்டும். (9)

உகெரெ —

வாரிவாஹ௲ஶொக்ஷம் ௳ தஷம் த்ராலெக்ஷ தா கூ௶ யக ।
௲ரீவதஹுஷெராதீ௲ாம் ௺ஹணம் ஸஸ்ாக ஊ௺ஶொடியெ ॥

## மகர லககினத்தில்

ஜலத்தை தேக்கி வைப்பது, விடுவது, அது ஸம்பந்தமான யந்திரங்கள் ஸம்பந்தமான காரியம், ஸ்திரீகளேயும் நாலுகால் பிராணிகளேயும், கிரஹிப்பது, முதலிய காரியங்களே மகர லக்கினத்தில் செய்யவேண்டும். (10)

கும்பே —

வாஜீஹஸ்த்யஶ்வஶில்பாத்³யம் தோயரத்நாதி³கம் ச யத் ।
ஸ்தி²ரமாப⁴ரணம் வாஸ்து கர்தவ்யம் ச க⁴டோத³யே ॥

## கும்ப லக்கினத்தில்

குதிரை, யானே, சில்பம், இவைகள் ஸம்பந்தமான காரியம், ஜலம்–ரத்னங்கள் முதலியவைகளின் ஸம்பந்தமான காரியம், ஸ்திரமான காரியம், ஆபரண ஸம்பந்தமான காரியம், வீடு ஸம்பந்தமான காரியம், இவைகளே கும்ப லக்கினத்தில் செய்யவேண்டும். (11)

மீனே —

ஜலப³ந்த⁴நமோக்ஷணயாத்ராரத்நாதி³பூ⁴ஷணம் கர்ம ।
ரத²துரகோ³ஷ்ட்ரபஶூநாம் கார்யம்
மீநோத³யே ஶ்ரேஷ்ட²ம் ॥௧௨॥

## மீன லக்கினத்தில்

ஜல பந்தனம், ஜல மோக்ஷணம், யாத்திரை, ரத்னங்கள், ஆபரணங்கள், இவைகள் ஸம்பந்தமான காரியம், ரதம்–குதிரை–ஒட்டகம்–பசுக்கள், இவைகள் ஸம்பந்தமான காரியங்கள் இவைகளே மீன லக்கினத்தில் செய்ய வேண்டும். (12)

௪௱௩௰௫ அத ராஶீநாம் ஸ்வரூபாணி —

( ப்ருஹஜ்ஜாதகே )

மத்ஸ்யௌ கடீ ந்ருமிதுநம் ஸகதம் ஸவீணம்
சாபீ நரோऽஶ்வஜகநோ மகரோ ம்ருகாஸ்ய꞉ ।
தௌலீ ஸஸஸ்யதஹநா ப்லவகா ச கந்யா
ஶேஷா꞉ ஸ்வநாமஸத்ருஶா꞉ ஸ்வசராஶ்ச ஸர்வே ॥

435. ராசிகளின் ஸ்வரூபங்கள் (ப்ருஹஜ்ஜாதகத்தில்)

மீனாராசியானது, இரண்டு மீன்களின் வடிவமுடையதாகும். கும்பராசியானது குடத்தின் வடிவமுடையதாகும். மிதுன ராசியானது, கதையை தரித்த புருஷன்–வீணையை தரித்த ஸ்திரீ, இவ்விருவரும் சேர்ந்திருக்கின்ற வடிவம் போன்ற வடிவமுடையதாகும். தநுர் ராசியானது, இடுப்புக்கு மேலே மனித வடிவமும், இடுப்புக்குக் கீழே குதிரையின் வடிவமுடையதுமாகும். மகர ராசியானது, மானுடைய முகத்துடன் கூடிய மத்ஸ்ய வடிவமுடையதாகும். துலா ராசியானது, தானியங்களை நிறுக்கின்ற பெண்ணின் வடிவமுடையதாகும். கன்யா ராசியானது ஓடத்தில் உட்கார்ந்திருக்கின்ற கன்னியின் வடிவமாகும். மற்ற ராசிகள் யாவும், தன் பெயருக்குத் தக்க வடிவமுடையவைகளாகும்.

௪௱௩௰௬ அத த்ரேஷ்காண ஸ்வரூபம் —

(ப்ருஹஜ்ஜாதகே)

தத்ராதௌ மேஷஸ்ய ப்ரதம த்விதீய த்ருதீய த்ரேஷ்காணாநாம்
ஸ்வரூபாணி —

க்ருஷ்ண꞉,

கட்யாம் ஸிதவஸ்த்ரவேஷ்டித: க்ருஷ்ண: ஶக்த
இவாபிரக்ஷணே ।
ரௌத்ர: பரஶும் ஸமுத்யதம் தத்தே ரக்தவிலோசந:
புமாந் ॥

புருஷ: । க்ருஷ்ணவர்ண: ॥

த்விதீய:,

ரக்தாம்பரா பூஷணபக்ஷ்யசிந்தா
கும்போதரா வாஜிமுகீ த்ருஷார்தா ।
ஏகேந பாதேந ச மேஷதுல்யம்
த்ரேக்காணரூபம் யவநோபதிஷ்டம் ॥ ௨ ॥

ஸ்த்ரீ । ரக்தவர்ணா ॥

த்ருதீய:,

க்ரூர: கலாஜ்ஞ: கபில: க்ரியார்தீ
பக்நவ்ரதோ(அ)ப்யுத்யததண்டஹஸ்த: ।
ரக்தாநி வஸ்த்ராணி பிபர்தி சண்டோ
மேஷே த்ருதீய: கதித: த்ரிபாக: ॥ ௩ ॥

புருஷ: । கபிலவர்ண: ॥

### 436. மேஷாதி திரேக்காண ஸ்வரூபம்.

*( பிருஹஜ்ஜாதகத்தில் )*

அவற்றுள், மேஷ ராசியின், முதலாவது, இரண்டாவது, மூன்றவது திரேக்காணங்களின் ஸ்வரூபங்கள்.

**முதலாவது திரேக்காண ஸ்வரூபம்.**

மேஷம் முதலாவது திரேக்காணமானது, புருஷ வடிவமாம். இவன், இடுப்பில் வெண்மையான ஆடை

அணிந்திருப்பான். கருப்புநிறமுடையவனுவான். காப்பாற்றும் ஆற்றலுடையவனுவான். பயங்கரமான ஸ்வரூபமுடையவனுவான். கோடரியை உயரத் தூக்கிப் பிடித்திருப்பான். சிவந்த கண்களையுடையவனுவான். (1)

### மேஷ ராசியின் இரண்டாவது திரேக்காணஸ்வரூபம்.

மேஷ ராசியின் மத்திய திரேக்காணமானது, சிவப்பு வஸ்திரம் தரித்தவளும், ஆபரணங்களில் ஈடுபட்ட மனமுடையவளும், குடம் போன்ற வயிறுடையவளும், குதிரை முகமுடையவளும், தாஹத்தினாலே வருந்துகின்றவளும், ஒரு காலாலே நடக்கின்றவளுமான ஸ்திரீயின் ஸ்வரூபமுடையதாகும் என்று யவனர்களினாலே உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. ஸ்திரீ. சிவப்பு நிறம். (2)

### மூன்றவது திரேக்காணஸ்வரூபம்.

மேஷ ராசியின் மூன்ருவது திரேக்காணமானது, பயங்கரமானவனும், கலைகளையறிந்தவனும், செம்பொன்னிறமானவனும், காரியத்தை விரும்புகின்றவனும், சிதைந்த விரதத்தையுடையவனும், தண்டத்தைத் தூக்கிப்பிடித்துக் கொண்டிருப்பவனும், ரத்னங்களையும், வஸ்திரங்களையும் தரித்துக்கொண்டிருக்கின்றவனும், பயங்கரமான செய்கையுடையவனுமான மனித வடிவமாகும். புருஷன். கபில வர்ணம். (3)

௪௩௭ அத வ்ருஷஸ்ய ப்ரதமத்விதீயத்ருதீயத்ரேக்காணானாம் ஸ்வரூபாணி —

ஶ்லோ:,

குஞ்சிதலூநகசா கடதேஹா

தக்தபடா த்ருஷிதாஶநசித்தா |

ஞூஹாரணா நூஷிவாஂஷதி மளஸீ
ரூவஜிதஂ ஹூயஜஂ வுரஷஹஸூ ॥

ஷூ । மளரவண-ூா ॥

ஷிதீய: ,

செக்ஷத்ருயா நூமூரஹயெநூகஜாஜு:
ஞாஜூமெ ஸஸகபெ கூஸமூஷூ ।
ஜுஸாஉஷமதி மெரவதி தூஜூஂ
க்ஷூஜுவமொாZஜவெநா உமூவாஸா: ॥

வுஜூஷ: । மூதவண-ு: ॥

தூதீய:;

ஷிவஸஉகாய: வாஂஶஜஂஷூ:
ஶஜஹஸஉாஂஷிர: ஷிஂ மஜஉிதி-ு: ।
அஷிஜூமமொஉா வூாகஜூஷிகு:
வுரஷஹவஜஸூ ஜூாஜஜமகொய: ॥

வுஜூஷ: । கநககவண-ு: ॥

**437.** விருஷபம் முதலாவது இரண்டாவது மூன்றவது திரேக்காணஸ்வருபங்கள்.

முதலாவது திரேக்காண ஸ்வருபம்.

விருஷப ராசியின் முதலாவது திரேக்காணமானது, அருவருக்கத்தக்கதும் அறுபட்டதுமான தலைமயிரையுடையவளும், பானை போன்ற சரீரமுடையவளும், தீப்பட்டு எறிந்த ஆடையையுடையவளும், தாஹமுடையவளும், ஆஹாரத்தை விரும்புகின்றவளும், ஆபரணங்களை விரும்பு

கின்றவளும், பொன்னிறமாக இருப்பவளுமான ஸ்திரீயின் ஸ்வரூபமுடையதாகும். ஸ்திரீ. வெளுப்பு நிறம். (1)

## இரண்டாவது திரேக்காணஸ்வரூபம்.

விருஷப ராசியின் இரண்டாவது திரேக்காணமானது, பூமி—தானியங்கள்—வீடு—பசுக்கள், இவைகளின் ஸம்பந்தமான கலைகளை நன்கு அறிந்தவனும், கலப்பையிலும் (உழவிலும்) வண்டியிலும் நல்ல ஸாமர்த்தியமுடையவனும், காளையினுடைய கொண்டை போன்ற தோள்களையுடையவனும், எப்பொழுதும் பசியுள்ளவனும், வேகமுடையவனும், (சுறுசுறுப்புடையவனும்), அழுக்கு வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டிருப்பவனுமான புருஷ ஸ்வரூபமுடையதாகும். புருஷன். வெளுப்பு நிறம். (2)

## மூன்றவது திரேக்காண ஸ்வரூபம்.

விருஷப ராசியின் மூன்ருவது திரேக்காணமானது, யானையைப்போல் கம்பீரமான சரீரமுடையவனும், வெளுப்பான தெத்திப்பற்களையுடையவனும், சரபத்தினுடையது போன்ற கால்களையுடையவனும், பொன்னிறமான சரீரமுடையவனும், ஆடு—மான் இவைகளின் மயிரைப்போன்ற மயிருடையவனும், கலங்கிய மனமுடையவனுமான மனித வடிவமுடையதாகும். புருஷன். தங்க நிறம். (3)

சஙஅ கய மியாந வுமஉ-ஷிதீயதரு தீய-ஜெருக்காணாநாம் ஹாஙுவாணி —

ஆஉஷு:,

வஙுவ்ராஹ்ரயம ஙஉஷிவாம்ஷகி கஉழு நாஸீ

ஙுவாஙிதாஹாணகாயழுகரு தாஷிா வ।

ஹீநாத்மஜா ஸிதாஂஶுகீ ஶுஷ்காங்கீ பஹுபாஹு-
ராஶ்யம் த்ருதீயபவநஸ்ய வதந்தி தஜ்ஜ்ஞா: ॥

ஸ்த்ரீ । ஹரிசரணாத் ॥

த்விதீய:,

உத்யாநஸம்ஸ்த: கவசீ தநுஷ்மான்
ஶூர: ஸ்த்ரதாரீ கருடாநநஶ்ச ।
க்ரீடாத்மஜாலங்கரணார்த்தசித்தம்
கரோதி மத்யே மிதுநஸ்ய ராஶே: ॥

புருஷ: । ஹரிசரணாத் ॥

த்ருதீய:,

பூஷிதோ வருணவத் பஹுரத்ந:
பத்ததூணகவச: ஸதநுஷ்க: ।
ந்ருத்தவாதிதகலாஸு ச வித்வான்
காவ்யக்ருன் மிதுநராஶ்யவஸாநே ॥

புருஷ: । ஹரிசரணாத் ॥

**438. மிதுனம் ஒன்று இரண்டு மூன்று திரேக்காணங்களின் ஸ்வரூபங்கள்.**

**முதல் திரேக்காண ஸ்வரூபம்.**

மிதுனத்தின் முதலாவது திரேக்காணமானது, ஊசியினாலே செய்யக்கூடிய காரியங்களை செய்கின்றவளும், அழகு வாய்ந்தவளும், ஆபரணங்களாலே ஆகக்கூடிய காரியங்களில் ஆதரவுள்ளளும், ஹீனஜாதிப் பெண்ணானவளும், மாதவிடாயான பெண்ணாக இருப்பவளும், மிருதுவாகவும் நீண்டதாகவும் இருக்கின்ற கைகளையுடையவளாகவுமிருக்

கின்ற ஸ்திரீயின் வடிவமுடையதாகும். ஸ்திரீ. பச்சை நிறம். (1)

## இரண்டாவது திரேக்காண ஸ்வரூபம்.

மிதுன ராசியின் இரண்டாவது திரேக்காணமானது, பூந்தோட்டத்திலிருப்பவனும், கவசத்தை அணிந்திருப்பவனும், வில்லுட னிருப்பவனும், அம்பு முதலிய ஆயுதங்களைத் தரிப்பவனும், கருடனைப்போல எடுப்பான மூக்கையுடையவனும், விளையாட்டாக தனது குழந்தைக்கு அலங்காரம் செய்வதில் ஈடுபட்ட மனதையுடையவனுமான புருஷ வடிவமுடையதாகும். புருஷன். பச்சை நிறம். (2)

## மூன்றாவது திரேக்காண ஸ்வரூபம்.

மிதுன ராசியின் மூன்றுவது திரேக்காணமானது, வருணனைப்போல, அநேக ரத்னங்களினாலே அலங்கரிக்கப்பட்டவனும், கவசம் அம்புராத்தூணிகளை யணிந்து வில்லை வைத்துக்கொண்டிருப்பவனும், நிருத்தம்–வாத்யம் இந்தக் கலைகளில் வித்துவானாக இருப்பவனும், காவியங்களை இயற்றுகின்ற கவியாகவுமிருக்கின்ற புருஷ வடிவமுடையதாகும். புருஷன். பச்சை நிறம். (3)

## ௪௬௪ அத² கர்கடகஸ்ய ப்ரத²ம-த்³விதீய-த்ருதீய த்³ரேக்காண ஸ்வரூபாணி —

ஶ்லோக:,

பத்ரமூலப²லப்⁴ருத்³த்³விபகாய:
கானநே மலயசந்த³நஶாகீ² ।
க்ரோட³துல்யவத³நோ ஹயகண்ட²:
கர்கடே ப்ரத²மரூபமுபைதி ॥

புருஷ: । பாடலவர்ண: ॥

த்விதீய:,

பத்மார்சிதா மூர்த்நி புஜங்கயுக்தா
ஸ்த்ரீ கர்கசாரண்யகதா விரௌதி |
சாகாம் பலாசஸ்ய ஸமாச்ரிதா ச
ஸ்த்ரீஸ்திதா கர்கடகாவர்த்மகேச: ||

ஸ்த்ரீ | பாடலவர்ணா ||

த்ருதீய:,

பார்யாபரணார்த்தம் ஜலம் ப்லவேநாப்திம் கத:
ஸர்ப்பவேஷ்டித: |
ஹைமைச்ச யுதோ விபூஷணை:
சிபிடாஸ்யோந்த்யகதஸ்ய கர்கடே ||

புருஷ: | பாடலவர்ண: ||

## 439. கடகம் முதலாவது இரண்டாவது மூன்றுவது திரேக்காணஸ்வரூபங்கள்.

### முதலாவது திரேக்காண ஸ்வரூபம்.

கடகராசியின் முதலாவது திரேக்காணமானது, இலை-கிழங்கு-பழம் இவைகளை புசிக்கக்கூடியதும், யானையின் சரீரமுடையதும், மலய பர்வதத்தின் காட்டில் வஸித்துக் கொண்டிருப்பதும், சரபத்தின் கால்களைப்போன்ற கால்களை யுடையதும், பன்றியின் முகத்தைப்போன்ற முகத்துடன் கூடியதும், குதிரையின் காதுகளைப்போன்ற காதுகளை யுடையதுமான விசித்திர ஸ்வரூபமுடையதாகும். புருஷன். பாடலவர்ணம். (1)

## இரண்டாவது திரேக்காண ஸ்வரூபம்.

கடக ராசியின் இரண்டாவது திரேக்காண ஸ்வரூபமானது, சிரத்தில் தாமரை மலர்களினாலே பூஜிக்கப்பட்டவளும், நல்ல சரீர சோபையுடையவளும், கரடு முரடான மனதுடையவளும், காட்டில் புரச மரத்தின் கிளையைப் பிடித்துக்கொண்டு அழுதுகொண்டிருப்பவளுமான ஸ்திரீ ஸ்வரூபமாகும். ஸ்திரீ. பாடல வர்ணம். (பாடலம்—வெண்சிவப்பு.) (2)

## மூன்றாவது திரேக்காண ஸ்வரூபம்.

கடகம் மூன்றாவது திரேக்காணமானது, மனைவியை பரணம் செய்வதற்காக, பாம்பினாலே சுற்றிக்கொள்ளப்பட்டு ஓடத்தில் சென்றுகொண்டிருப்பவனும், தங்கத்தினாலே செய்யப்பட்ட நகைகளை அணிந்துகொண்டிருப்பவனும், சப்பையான மூக்கையுடையவனுமான மனித ஸ்வரூபமுடையதாகும். புருஷன்—வெண்சிவப்பு நிறம். (3)

ச௪ம அத ஸிம்ஹஸ்ய ப்ரதம-த்விதீய-த்ருதீய த்ரேக்காணாநாம் ஸ்வரூபாணி —

ப்ரதம:

ஶால்மல்யாமவஸ்தித க்ருத்ரஜம்புகௌ
ஶ்வாநரஶ்ச மலிநாம்பராவ்ருத: ।
ரௌதி மாத்ருபித்ருவியோகத:
ஸிம்ஹரூபமிதமாத்யமுச்யதே ॥ க ॥

த்விதீய:

ஹயாக்ருதி: பாண்டுரமால்யஶேகர:
பிபர்தி க்ருஷ்ணாஜினகம்பலம் நர: ।

து³ராஸத³ஸ்ஸிம்ஹ இவாத்தகார்முக:
நதாக்³ரநாஸோ ம்ருக³ராஜவிக்ரம: ॥ ௨ ॥

வராஹ: । யவநாசார்ய: ।

த்ருதீய:

ருக்ஷாநநோ வாநரதுல்யசேஷ்ட:
பி³ப⁴ர்தி ப²லம் பிஶிதம் ச ।
கூர்ச்சீ மஹாஶ்மஶ்ரு: குடிலோத்³ருஷ்டி கேஶோ
ம்ருகே³ந்த்³ரராஜ்யாக்ருதசிஹ்ந: ॥

வராஹ: । யவநாசார்ய: ॥

## 440. ஸிம்ஹராசியின் முதலாவது இரண்டாவது மூன்றவது திரேக்காணங்களின் ஸ்வரூபம்

**ஸிம்ஹராசியின் முதலாவது திரேக்காணஸ்வரூபம்—**

ஸிம்ஹ ராசியின் முதலாவது திரேக்காண ஸ்வரூபமானது, முள்ளிலவமரத்தின் மீதிருக்கின்ற கழுகு, நரி, இவைகளைப்போலவும் நாயைப்போலவுமிருக்கின்றவனும், அழுக்கு ஆடையை அணிந்திருப்பவனும், தாய் தந்தை இவர்களை விட்டு பிரிந்ததனாலே அழுதுக்கொண்டிருப்பவனுமான மனிதவடிவமுடையதாகும். என்று கூறப்படுகின்றது புருஷன். புகைநிறமும் வெளுப்பு நிறமும் கலந்த நிறம்.

**இரண்டாவது திரேக்காண ஸ்வரூபம்.**

ஸிம்ஹராசியின் இரண்டாவது திரேக்காண ஸ்வரூபமானது, குதிரையின் உருவமுடையவனும், வெளுப்புப் பூக்களாலே தொடுக்கப்பட்ட மாலையை சிரத்திலணிந்துகொண்டிருப்புவனும், மான்தோலையும் கம்பளியையும் தரிப்

பவனும், சமீபத்தில் நெறுங்கமுடியாதவனும், அல்லது எதிரிகளாலே பிடிக்கமுடியாதவனும், வில்லை கையில் வைத்துக்கொண்டிருப்பவனும், வணங்கிய மூக்குநுனியையுடையுவனுமான மனிதவடிவமுடையதாகும். புருஷன். புகையும் வெளுப்பும் கலந்த நிறம். (2)

மூன்றவது திரேக்காண ஸ்வரூபம்.

ஸிம்ஹ ராசியின் மூன்ருவது திரேக்காண ஸ்வரூபமானது, ஆட்டின் முகத்தைப் போன்ற முகமுடையவனும், குரங்கைப்போன்ற சேஷ்டைகளையுடையவனும், தண்டம், (தடி) பழம், மாமிசம், இவைகளை கைகளில் வைத்துக்கொண்டிருப்பவனும், தாடி மீசைகளுடையவனும், கோணலான மயிர்களையுடையவனுமான மனித வடிவமுடையதாகும். (3)

புருஷன். புகை நிறமும் வெளுப்பு நிறமும் கலந்தநிறம்;

சசக ஃய கஹ்யாஹுயஉ-ஷிதீய-தரதீயஜெஷ்காண ஸ்ரூஷம் —

வஃஷ்வஹுகீணெஶுரு வடெிஶ கஹ்யா
உாஹுாவஃ தீவஶுாம்பாஃவஃவஐதாம்தீ ।
வஷ்ஹ்ராயஶுவஃம்யொமஉஷீஷ்உாஶா
மஃரொா: கஃஷும் மஷ்தி கஹ்யகாஷ்யா ॥

441. கன்யா ராசியின் முதலாவது இரண்டாவது மூன்றவது திரேக்காண ஸ்வரூபம்.

கன்யா ராசியின் முதலாவது திரேக்காணமானது, புஷ்பங்கள் வாரி இரைக்கப்பட்ட குடத்துடன், மாலையாலும் மிகவும் நீளமான வஸ்திரத்தினலேயும் மூடப்பட்ட அங்கங்

களையுடையவளும், வஸ்திரம், பணம், இவைகளை பெற்றுக் கொள்ளுவதற்காக குருகுலத்திற்கு (தகப்பன் வீட்டிற்கு) செல்லுகின்றவளுமான கன்னிகையின் ஸ்வரூபமுடைய தாகும். (1)

த்விதீய:,

வார்ஷ்ணேய: ப்ரக்ருஹீதலேகநீ ஶ்யாமோ வஸ்த்ர
பரிதாவ்யாயகர்ஶ: |
விபுலம் ச பிப்ரதி சாபம் ரோமவ்யாப்த
தநு: ஶ்யாம: ||

வார்ஷ்ணேய: | ஶ்யாமவர்ண: ||

இரண்டாவது திரேக்காண ஸ்வரூபம்.

கன்யாராசியின் இரண்டாவது திரேக்காணாதி தேவன், கையில் எழுதுகோலை வைத்துக்கொண்டிருப்பவனும், பச்சை நிறமான சரீரமுடையவனும், வஸ்திரங்களை பிரகாச மாக (ஒளியுடன்) இருக்கும்படி செய்கின்றவனும், பெரிய வில்லை தரிப்பவனும், உடப்பு முழுமையும் மயிர் மண்டி யிருப்பவனுமான புருஷஸ்வரூபமுடையவனாவான். புருஷன் பச்சை நிறம். (2)

த்ருதீய:,

கௌரீஸ்நாதா தௌத(க்ஷௌம)க்ஷௌமாவ்ருதா
ஸமுச்சிதா கும்பகடஹஸ்தா |
தேவாலயம் ஸ்த்ரீ ப்ரயாதா ப்ரவ்ருத்தா(வ ஸங்கம்)
வதந்தி கந்யாஸமாத்ருதாயம் ||

கநகவர்ண: |

## கன்யாராசியின் மூன்றவது திரேக்காண ஸ்வருபம்

கன்யாராசியின் மூன்ருவது திரேக்காண தேவதையானது தங்கநிறமான சரீரமுடையவளும், நன்கு சுத்தப்படுத்தப்பட்ட சிறந்த பட்டாடையையணிந்துகொண்டிருப்பவளும், உயரமாக இருப்பவளும், குடத்தின் மேலே கையை வைத்துக்கொண்டிருப்பவளும், தேவாலயத்திற்குச் சென்றுகொண்டிருப்பவளுமான கன்னிகையின் ஸ்வருப முடையதாகும். (3) 6

சசஉ அத துலாவுயஉ-ஷிதீய-தூதீய
த்ரேக்காணாநாம் ஸ்வரூபாணி —

ஶ்லோகஃ,

வீத்யந்தராவண நதஃ வராஹஷ்ணூவா-
நாநாநரா நகரகஃ ப்ரதிமாநஹஸ்தஃ ।
மாணம் விசிந்தயதி தஸ்ய ச உத்ருஷேத-
ரூபம் வதந்தி யவநாஃ ப்ரயமம் துலாயாஃ ॥

வராஹஃ । ஸூஷணஃ ॥

## 442. துலாம் ஒன்று இரண்டு மூன்றவது திரேக்காண ஸ்வருபம்

### துலாம் முதல் திரேக்காண ஸ்வரூபம்.

துலா ராசியின் முதலாவது திரேக்காண ஸ்வருபமானது, கடைத்தெருவின் நடுவிலுள்ள கடையிலிருப்பவனும், தராசை கையில் வைத்துக்கொண்டிருப்பவனும், உயர்ந்த அளவு ஸாதாரணமான அளவு இவைகளை

யறிந்தவனும், (மற்றொரு கையில்) படிக்கல்லை வைத்துக் கொண்டிருப்பவனும், பண்டங்களின் விலை இன்னதென்பதை சிந்தித்துக்கொண்டிருப்பவனுமான புருஷவடிவமாகும் என்று யவனர்கள் முன்பு கூறியுள்ளார்கள். புருஷன், கருப்பு நிறம். (1)

த்விதீய:,

கலசம் பரிக்ருஹ்ய விநிர்கந்தும்
வாஞ்சதி க்ருத்ரமுகோ புருஷ: |
க்ஷுதிதஸ்த்ருஷிதஶ்ச கலத்ரஸுதாந்
மநஸைதி தடாதரயாயோ ஹத: ||

வாராஷ: | க்ருஷ்ணவர்ண: |

துலாம் இரண்டாவது திரேக்காண ஸ்வரூபம்

துலாராசியின் இரண்டாவது திரேக்காண ஸ்வரூபமானது, கலசத்தை கையில் எடுத்துக்கொண்டு வெளியில் வருவதற்கு விரும்புகின்றவனும், கழுகின் முகத்தைப் போன்ற முகமுடையவனும், பசியுடையவனும், தாகமுடையவனும், மனைவி மக்களை மனதாலே அடைகின்றவனுமான புருஷவடிவமாகும். புருஷன் கருப்பு நிறம். (2)

த்ருதீய:,

விபீஷயம்ஸ்திஷ்டதி ரத்நசித்ரே
வநே ம்ருகாந் காஞ்சநதூணவர்மா |
பலாமிஷம் வாநரரூபதாரீ
துலாவஸாநே யவநைருதாஹ்ருத: ||

வாராஷ: | க்ருஷ்ணவர்ண: ||

துலாம் மூன்றவது திரேக்காண ஸ்வரூபம்

துலாராசியின் மூன்ருவது திரேக்காண ஸ்வரூபமானது ரத்னங்களினுலே விசித்திரமான காட்டில் அப்ராத்தூணி கேடயங்களை வைத்திருப்பவனும், வில்லை வைத்திருப்பவனும், வானரம் போன்ற உருவமுடையவனும், ஓர் பெண் மானை பயமுறுத்திக்கொண்டிருப்பவனுமான மனிதவடிவமாகும். புருஷன், கருப்பு நிறம். (3) 7

௪௪௩ அத வ்ருஸ்சிக-ப்ரதம-த்விதீய-த்ருதீயத்ரேக்காண ஸ்வரூபாணி–

ஸ்லோக: ,

வஸ்த்ராபரணோ நாரீ
மஹாஸமுத்ராத் ஸமேதி கூலம் ।
ஸ்தானச்யுதா ஸர்ப்பநிபத்தபாதா
மநோரமா வ்ருஸ்சிகராசிபம் ॥

ஸ்ரீ । ஸப்தவணா ॥

443. விருச்சிகம் ஒன்றவது இரண்டாவது மூன்றவது திரேக்காண ஸ்வரூபங்கள்

முதலாவது திரேக்காண ஸ்வரூபம்

விருச்சிகராசியின் முதலாவது திரேக்காண ஸ்வரூபமானது, வஸ்திரம் ஆபரணங்களுடன் கூடியவளாய், மஹா ஸமுத்திரத்திலிருந்து கரைக்கு வந்துகொண்டிருப்பவளும், தனது இருப்பிடத்திலிருந்து நழுவியவளும், ஸர்ப்பங்களினுலே கட்டப்பட்டிருக்கின்ற பாதங்களையுடையவளும், மனதுக்கு இன்பத்தையளிக்கக்கூடியவளுமான ஸ்திரீயின் வடிவமாகும். ஸ்திரீ, தங்க நிறம். (1)

𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌃 ,

𑌸𑍍𑌥𑌾𑌨𑌸𑍁𑌖𑌾𑌰𑍍𑌥𑌮𑌭𑌿𑌵𑌾𑌞𑍍𑌛𑌤𑌿 𑌨𑌾𑌰𑍀
𑌭𑌰𑍍𑌤𑍃𑌕𑍃𑌤𑍇 𑌭𑍁𑌜𑌗𑌾𑌵𑍃𑌤𑌦𑍇𑌹𑌾 |
𑌕𑌚𑍍𑌛𑌪𑌕𑍁𑌮𑍍𑌭𑌸𑌮𑌾𑌨𑌶𑌰𑍀𑌰𑌾
𑌵𑍃𑌶𑍍𑌚𑌿𑌕𑌮𑌧𑍍𑌯𑌮𑌰𑍂𑌪𑌂 𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑌿 ‖ ௨ ‖

𑌸𑍍𑌤𑍍𑌰𑍀 | 𑌸𑍁𑌵𑌰𑍍𑌣𑌵𑌰𑍍𑌣𑌾 ‖

## இரண்டாவது திரேக்காண ஸ்வரூபம்

விருச்சிகம் இரண்டாவது திரேக்காண ஸ்வரூபமானது இடம், ஸுகம், இவைகளைவிரும்புகின்றவளும், கணவனுக்காக பாம்பினாலே சுத்திக்கொள்ளப்பட்ட சரீரத்தையுடையவளும், முதலையைப்போலும் கடத்தைப்போலுமிருக்கின்ற சரீரத்தையுடையவளுமான ஸ்திரீயின் வடிவமுடையதாகும். ஸ்திரீ. தங்கநிறம். (2)

𑌤𑍃𑌤𑍀𑌯𑌃,

𑌪𑍃𑌥𑍁𑌲𑌚𑌿𑌪𑌿𑌟𑌕𑍂𑌰𑍍𑌮𑌤𑍁𑌣𑍍𑌡𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌃
𑌶𑍍𑌵𑌮𑍃𑌗𑌸𑍃𑌗𑌾𑌲𑌵𑌰𑌾𑌹𑌭𑍀𑌤𑌿𑌕𑌾𑌰𑍀 |
𑌅𑌵𑌤𑌿 𑌚 𑌮𑌲𑌯𑌾𑌕𑌰𑌪𑍍𑌰𑌦𑍇𑌶𑌂
𑌮𑍃𑌗𑌪𑌤𑌿𑌰𑌨𑍍𑌤𑍍𑌯𑌗𑌤𑌸𑍍𑌯 𑌵𑍃𑌶𑍍𑌚𑌿𑌕𑌸𑍍𑌯 ‖ ௩ ‖ ௮ ‖

𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 | 𑌸𑍁𑌵𑌰𑍍𑌣𑌵𑌰𑍍𑌣𑌃 ‖

## விருச்சிகம் மூன்றாவது திரேக்காண ஸ்வரூபம்

விருச்சிகராசியின் மூன்றுவது திரேக்காண ஸ்வரூபமானது, பெரியதாயும், சப்பையாகத்தொங்குகின்ற மூக்கையுடையதாயும், ஆமைபோன்ற முகத்தையுடையதாயும், நாய்-மான்-நரி-பன்றி இவைகளுக்கு பயத்தையுண்டுபண்ணு

ன்றதும், மலயபர்வதத்தில் ரத்னங்கள் கிடைக்கக்கூடிய இடங்களைக் காப்பாற்றிக்கொண்டு வருகின்றதுமான ஸிம்ஹத்தின் வடிவமுடையதாகும். புருஷன். தங்க நிறம். (3) 8

சசச. கூய யநுஃ ஹ்ரயஉ-ஷிதீய-தரதீய
ஜெரக்ஷாணாநாம் ஸ்வரூபவாணி —

ருதூஃ,

உநுஷ்ஹவக்ஷொzஸ்லஸா நகாயஃ
யநுமரஹீசுவாzzயதஸாஶ்ரஉஸ்லஃ ।
கூதமுவயாக்ஷாநி தவஸ்லிநஸ்ல
ஸரக்ஷ வாமுவெழா யநுஷஹிஹாமஃ ॥ க ॥
வாஸரஷஃ । ஷிஜுவணுஃ ॥

**444. தநுஸ் முதலாவது இரண்டாவது மூன்றவது திரேக்காணங்களின் ஸ்வரூபங்கள்.**

முதலாவது திரேக்காண ஸ்வரூபம்

தநுஸ் ராசியின் முதலாவது திரேக்காண ஸ்வரூபமானது, மனித முகமுடையவனும், குதிரையின் உடலையுடையவனும், நீண்ட வில்லை கையில் வைத்துக்கொண்டு ஆசிரமத்திலிருப்பவனும், தபஸ்விகளின் யாகங்களுக்கு உபயோகப்படக்கூடிய பதார்த்தங்களை ரக்ஷித்து வருகின்றவனுமான புருஷ வடிவமுடையதாகும். புருஷன். செம்பொன் நிறம் (1)

ஷிதீயஃ,

மெநாஸா வம்வகதமுஹவணா
ஸஜூாவஸெந திஷதி உயஹஸமுவா ।

ஸமுத்ரரத்நாநி விகட்டயந்தீ

தநுர்த்விதீயே யவநா: ப்ரதிஷ்டா: ॥ ௨ ॥

ஸ்த்ரீ । கநகவர்ணா: ॥

## இரண்டாவது திரேக்காண ஸ்வரூபம்.

தனுஸ் ராசியின் இரண்டாவது திரேக்காண ஸ்வரூபமானது, மனதுக்கு இன்பத்தையளிக்கின்றவளும், சம்பகப் பூவைப்போன்ற நிறமுடையவளும், பத்திராஸனத்தில் உட்கார்ந்துகொண்டிருப்பவளும், நடுத்தரமான அழகுடையவளும், ஸமுத்திரத்திலிருக்கின்ற ரத்னங்களை கரையில் வாரி இறைப்பவளும், அல்லது குவித்து வைக்கின்றவளுமான ஸ்திரீயின் வடிவமுடையதாகும். ஸ்திரீ, தங்கநிறம். (2)

த்ருதீய:,

கூர்ச்சீ நரோ ஹாடகசம்பகாப:

வராஸநே தண்டதரோ நிஷண்ண: ।

கௌசேயகாந்யுத்வஹதே அஜிநம் ச

த்ருதீய ஏவம் தநுஷஸ்ய ராசே: ॥ ௩ ॥ ௯ ॥

புருஷ: । கநகவர்ண: ॥

## மூன்றவதுதிரேக்காண ஸ்வரூபம்.

தனுஸ்ராசியின் மூன்ருவது திரேக்காண ஸ்வரூபமானது, மீசை தாடிகளையுடையவனும், தங்கம் சம்பகப் பூவைப் போன்ற நிறமுடையவனும், சிறந்த ஆஸனத்தில் உட்கார்ந்து கொண்டு தண்டத்தைக் கையில் வைத்துக் கொண்டிருப்பவனும், வெண்பட்டாடைகளையும் மான் தோலையும் தரித்துக்கொண்டிருப்பவனுமான மனித வடிவமுடையதாகும். புருஷன். தங்கநிறம். (3) 9.

௪௪௫. 𑌅𑌥 𑌮𑌕𑌰 𑌪𑍍𑌰𑌥𑌮-𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯-𑌤𑍃𑌤𑍀𑌯
𑌦𑍍𑌰𑍇𑌕𑍍𑌕𑌾𑌣𑌾𑌨𑌾𑌂 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌣𑌿 —

𑌪𑍍𑌰𑌥𑌮𑌃,

𑌰𑍋𑌮𑌚𑌿𑌤𑍋 𑌮𑌕𑌰𑍋𑌪𑌮𑌦𑌂𑌷𑍍𑌟𑍍𑌰𑌃
𑌸𑍂𑌕𑌰𑌕𑌾𑌯𑌸𑌮𑌾𑌨𑌶𑌰𑍀𑌰𑌃 ।
𑌯𑍋𑌕𑍍𑌤𑍍𑌰𑌕𑌜𑌾𑌲𑌕𑌬𑌨𑍍𑌧𑌨𑌧𑌾𑌰𑍀
𑌰𑍌𑌦𑍍𑌰𑌮𑍁𑌖𑍋 𑌮𑌕𑌰𑌪𑍍𑌰𑌥𑌮𑌸𑍍𑌤𑍁 ॥ ௧ ॥

𑌵𑌾𑌰𑌾𑌹𑌃 । 𑌕𑌵𑌿𑌪𑍂𑌰𑌵𑌣𑌃 ॥

## 445. மகரம் ஒன்றாவது இரண்டாவது மூன்றாவது திரேக்காண ஸ்வரூபங்கள்.

### முதலாவது திரேக்காண ஸ்வரூபம்.

மகர ராசியின் முதலாவது திரேக்காண ஸ்வரூபமானது, உடம்பு முழுமையும் மயிர் மண்டி இருப்பவனும், மகர மத்ஸ்யம் அல்லது முதலையினுடையதுபோன்ற தெத்திப்பற்களையுடையவனும், பன்றியின் சரீரத்தைப் போன்ற சரீரமுடையவனும், சுறுக்குக கயிறுகள்-வலைகள்-கட்டிப் பிடிக்கக்கூடிய கயிறு முதலிய ஸாதனங்கள், இவைகளை கையில் வைத்துக்கொண்டிருப்பவனும், பயங்கரமான முகத்தையுடையவனுமான மனிதனுடைய வடிவமுடையதாகும். (1)

𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌃,

𑌕𑌲𑌾𑌸𑍍𑌵𑌭𑌿𑌜𑍍𑌞𑌾𑌬𑍍𑌜𑌦𑌲𑌾𑌯𑌤𑌾𑌕𑍍𑌷𑍀
𑌶𑍍𑌯𑌾𑌮𑌾 𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌚 𑌮𑌾𑌰𑍍𑌗𑌮𑌾𑌣𑌾 ।

விபூஷணாலங்க்ருதலோஹகர்ணா
யோஷா ப்ரதிஷ்டா மகரஸ்ய மத்யே ॥ ௨ ॥

ஸ்த்ரீ । ஶ்யாமவர்ணா ॥

இரண்டாவது திரேக்காண ஸ்வரூபம்.

மகர ராசியின் இரண்டாவது திரேக்காண ஸ்வரூபமானது, கலைகளை நன்கு அறிந்தவளும், தாமரை மலரின் இதழ்போன்று நீண்ட கண்களையுடையவளும், யௌவன மத்திய வயதையுடையவளும், அல்லது பச்சை நிறமானவளும், சித்திரங்களைத் தேடிக்கொண்டிருப்பவளும், ஆபரணங்களையணிந்திருக்கின்றதும் லோஹம் போன்றுமிருக்கின்ற காதுகளையுடையவளுமான ஸ்திரீயின் வடிவமுடையதாகும். ஸ்திரீ, பச்சை நிறம். (2)

த்ருதீய꞉,

கிந்நரோபமதநுஸ்ஸகம்பலஸ்
தூணசாபகவசைஸ்ஸமந்வித꞉ ।
கும்பமம்ஸவஹதி ரத்நசித்ரிதம்
ஸ்கந்தகம் மகரராஶிபஶ்சிம꞉ ॥ ௩ ॥ ௰ ॥

புருஷ꞉ । கர்புரவர்ண꞉ ॥

மூன்றவது திரேக்காண ஸ்வரூபம்.

மகர ராசியின் மூன்ருவது திரேக்காண ஸ்வரூபமானது, கின்னரனைப்போன்ற சரீரமுடையவனும், அம்புராத்தூணி-வில்-கவசம், இவைகளுடன் கூடியவனும், ரத்னங்களினுலே விசித்திரமான குடத்தை தோளின்மீது வைத்துக்கொண்டிருப்பவனுமான புருஷ வடிவமுடையதாகும். புருஷன், செம்பொன்நிறம். (3) 10.

௪௪௬. அத கும்பஸ்ய ப்ரதம-த்விதீய-த்ருதீய
த்ரேக்காணஸ்வரூபாணி --

ப்ரதம:,

தைலமத்யஜலபோஜநாகம
வ்யாகுலீக்ருதமநா: ஸகம்பல: ।
கோஶகாரவஸநோஜிநாவ்ருத:
க்ருத்ரதுல்யவதநோ கடாதிக: ॥ ௧ ॥

புருஷ: । ஸஹ்யவர்ண்ய: ॥

446. கும்பம் ஒன்று இரண்டு மூன்று திரேக்காணங்களின் ஸ்வரூபங்கள்.

முதல் திரேக்காண ஸ்வரூபம்.

கும்பராசியின் முதலாவது திரேக்காண ஸ்வரூபமானது, எண்ணை முதலிய பசையுள்ள பண்டங்கள், மது, ஜலம், ஆஹாரம், மாமிசம், இவைகளினாலே (இவைகளை மாறி மாறி புசித்தபடியினாலே) வியாகுலமடைந்த மனதை யுடையவனும், நல்லதோர் கம்பளியை தரித்துக்கொண்டு இருப்பவனும், பட்டு வஸ்திரத்தை தரித்துக்கொண்டிருப்பவனும், மான்தோலைப் போர்த்திக்கொண்டிருப்பவனும், கழுகின் முகத்தைப்போன்ற முகத்தையுடையவனுமான மனிதவடிவமுடையதாகும். (1)

த்விதீய:,

தக்தே ஶகடே ஸஶால்மலே லோஹாந்யாஹரதே
அங்கநா வநே ।
மலிநேந படேந ஸம்வ்ருதா பாண்டைஶ்சயுதா
மூர்த்நி சைஶ்ச யுக்தா ॥ ௨ ॥

ஸ்த்ரீ । ஸஹ்யவர்ண்யா ॥

## கும்பம் இரண்டாவது திரேக்காண ஸ்வரூபம்.

கும்பராசியின் இரண்டாவது திரேக்காண ஸ்வரூபமானது, வண்டியானது எறிந்துபோனபடியால் அழுக்கடைந்த ஆடையையணிந்துகொண்டு, தலையில் வைத்துக் கொண்டிருக்கின்ற பாண்டங்களிலே, லோஹம் முதலியவைகளை, புல்மண்டியிருக்கின்ற வனத்தில் எடுத்துக் கொண்டு வருகின்ற ஸ்திரீயின் வடிவமுடையதாகும். ஸ்திரீ, செம்பொன்னிறம். (2)

த்ருதீய:,

ஶ்யாமஸ்ஸரோஜஶ்ரவண: கிரீடீ
த்வக்பத்ரநிர்யாஸஃலாநி பிப்ரத் ।
பாண்டாநி லோஹவ்யதிமிஶ்ரிதாநி
ஸஞ்சாரயத்யம்புருஷோ வதந்தி ॥ ௩ ॥ ௧௧ ॥

வராஹ: । ஶ்யாமவர்ண: ॥

## கும்பம் மூன்றாவது திரேக்காண ஸ்வரூபம்.

கும்பராசியின் மூன்ருவது திரேக்காண ஸ்வரூபமானது பச்சை நிறமுடையவனும், தாமரை போன்ற காதுகளை யுடையவனும், கிரீடத்தை தரித்துக்கொண்டிருப்பவனும், பட்டைகள் – இலைகள் – பிசின் – பழங்கள் இவைகளையும், லோஹங்களுடன் கூடிய பாண்டங்களையும் வஹித்துக் கொண்டிருப்பவனும், ஸஞ்சரித்துக்கொண்டிருப்பவனுமான மனித வடிவமுடையதாகும். புருஷன், பச்சைநிறம். (3) 11

௪௪௭ அத மீநஸ்ய ப்ரதமத்விதீயத்ருதீயத்ரேக்காண
ஸ்வரூபாணி —

ஸ்ருக்பாண்டமுக்தாமணிஶங்கமிஶ்ரை:
வ்யாக்ஷிப்தஹஸ்த: ஸவிபூஷணஶ்ச ।

